# டெட் கொண்டு சலவை செய்த ஆடைகளிலுள்ள நம்பிக்கை




இதோ இந்த இணைபிரியாத விளையாட்டுத் தோழர்களின் கம்பீரத் தோற்றத்திற்கும், தன்னம்பிக்கைக்கும் காரணம் அவர்கள் அணிந்திருக்கும் ஆடைகள் பூப்போன்ற புதுமையுடன் பளிச்சென்ற டெட் கொண்டு சலவை செய்யப்பட்டதால்தான்.

டெட் ஒரு செயற்கை சலவைப் பொருள், கண்ணுக்குப்பளிச்சிடும் பொருள் கலந்துள்ள டெட் ஒரு பூர்ண சலவைப் பவுடராகும். கடின மற்றும் மென்மை நீரிலும் டெட் ஏராளமாக நுரைக்கிறது. பலவிதமான ஆடைகளையும்—பருத்தி, சில்க், ரேயான், கம்பளி—வெள்ளை அல்லது பல வண்ணங்களிலுள்ள ஆடைகளையும்—எவ்வித அபாயமுமின்றி திறமையுடன் டெட் சலவை செய்கிறது.

**டெட்டின் சலவை உங்களுக்குப் பெருமை.**

**டெட்டினால் சலவை செய்தால் அதிக வெண்மை கிடைக்கும்**

**ஸ்வஸ்திக்** ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்-1.



படவிளக்கம் 83ம் பக்கம் பார்க்க...

# கல்கி

## பொருளடக்கம்

சோபகிருது, ஆனி 23உ ★ ஜூலை, 7உ 1963



'கல்கி'யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே



# தீயினால் சுட்ட வடு மாறுது




புகைபிடிப்போருக்கு அழகு, பற்ற வைத்த சிகரெட்டை மேஜை போன்ற சாமான்கள் மீதோ, அலங்காரப் பொருள்களை ஒட்டியோ வைக்காமலிருத்தலே. சாம்பலைப் போக்குவதற்கு ஆஷ்ட்ரே இருக்க, வீணே மேஜை மீது தீய்ந்த வடுக்களையும், பளபளப்பான தளங்கள் மீது பழுப்பு நிறச் சுவடுகளையும் விளைவிப்பானேன்?

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

## பனாமா



விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிமிடெட்
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 610 TAM

Greens' Advtg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 49

# மொரார்ஜியின் அசம்பாவிதம்

சீன அபாயத்தை விலக்கிக் கொள்ள நமக்குத் தளவாடங்களும், தீரமுள்ள சிப்பாய்களும் தேவை என்பது உண்மை. ஆனால் இவற்றைவிட முக்கியமான இன்னொரு தேவையை அரசாங்கம் இன்னும் சரியாக உணரக் காணோம். எதிரியை நம்மிடம் பயம் கொள்ளுமாறு செய்து தடுத்து நிறுத்த ஓர் ஆயுதமே நமது அத்தியாவசியத் தேவையாகும். மேல் நாடுகளின் பூரணமான நல்லிணக்கமொன்றே இவ்வாறு சீனாவை அச்சுறுத்தித் தடுத்து நிறுத்தும். எவ்வளவோ உரசல்கள் ஏற்பட்டபோதிலும் அட்லாண்டிக் உடன்படிக்கை அழியாமல் மீண்டும் மீண்டும் புத்துயிர் பெற்று வருவதற்குக் காரணம் அது மாஸ்கோவை அச்சுறுத்தி வைத்திருப்பதுதான்.

உடன்படிக்கைகளின் வலுவை உணர்ந்து மேல் நாடுகளிடமிருந்து நட்பும், சகாயமும் பெறுவதே இன்று நம்முடைய பிரதானமான கடமை. அதற்கான நல்ல சூழ்நிலையை ராஷ்டிரபதி அவர்கள் அமெரிக்காவில் உண்டாக்கிவிட்டுத் திரும்பியிருக்கிறார். இந்தச் சமயத்தில் ராஷ்டிரபதி செய்த நற்காரியத்துக்குக் குந்தகம் விளைவிக்கிற முறையில் ஸ்ரீ மொரார்ஜி தேசாய் அவர்கள் மிகவும் அசம்பாவிதமாகவும், அநுசிதமாகவும் கல்கத்தாவில் பேசியிருக்கிறார். தாம் உள்நாட்டில் உண்டாக்கியிருக்கிற உற்பாதம் போதாதென்று வெளி நாட்டு நல்லபிப்பிராயத்தையும் சிதைக்கும் முறையில் பேசியிருக்கிறார். வான மார்க்கத் தாக்குதலிலிருந்து நமக்குக் காப்பு அளிக்கிற ஒரு திட்டத்தை உதவ அமெரிக்கா முன் வந்ததல்லவா? இது நமக்கு அமெரிக்கா செய்யும் பேருதவி என்பதைப் புரிந்து கொள்ளாமல், இதற்கு அநுமதிப்பதால் நம் நாட்டில் அமெரிக்கா ராணுவத் தளங்கள் அமைத்துக் கொள்வதற்கு இடம் ஏற்படும் என்று ஒரு கோஷம் எழுந்தது. இந்த முறையற்ற சந்தேகத்துக்கு ஆதரவு தருகிறார் ஸ்ரீ மொரார்ஜி.

மொரார்ஜி பாய் அவர்களே! நீங்கள் விதிக்கிற கொடூரமான வரிகளால் ஈட்டும் பணத்தைக்கொண்டே சீனாவை முறியடிக்கலாம் என்றும் மேல்நாட்டு உதவி தேவையில்லை என்றும் நினைக்கிறீர்களா? சீனாவின் வெடிகுண்டு விமானங்கள் நம்மைத் தாக்காமல் தடுக்கிற அளவுக்கு ஆகாயப் படையை விருத்தி செய்து கொண்டு, பாதுகாப்புக்கு வழி காணாவிடில் நீங்கள் மக்களை எவ்வளவுதான் பிழிந்தெடுத்து வரி ஈட்டினாலும் என்ன பலன் கிடைக்கும்? நம் நாடு இன்று தனது பலத்திலேயே வலுவான வானப் பாதுகாப்பு அமைத்துக் கொள்வது சாத்தியமான காரியமா? அப்படியிருக்க, அந்நியர்கள் நல்லெண்ணத்துடன் அளிக்கிற உதவியை ஏன் கண்டனம் செய்கிறீர்கள்? வெளி நாட்டு உதவியை எவ்வளவுக்கு எவ்வளவு பெற முடியுமோ அவ்வளவுக்குப் பெற வேண்டியதும், உள்நாட்டு மக்களின் உற்சாகமும் விசுவாசமும் குலையாதிருப்பதற்காக அவர்களின் வரிச் சுமைகளை இயன்றவரையில் குறைப்பதுமே இன்று கடைப்பிடிக்க வேண்டிய விவேகமான கொள்கை. மொரார்ஜி அவர்களே, தாங்கள் இதற்கு நேர் விரோதமாகச் சென்று நாட்டுக்குக் கேட்டைத் தேடுகிறீர்கள். சீனா என்கிற வல்லரசு இன்று நம்மைப் பீடித்திருக்கும் போது மேல் நாடுகளை 'வல்லரசு கோஷ்டி' என்று பெயர் சூட்டித் தாக்குகிறீர்கள்.

மேல் நாடுகளின் 'கண்ணி'யைப் பற்றிப் பேசும்போதே வேறு சிலரின் கண்ணியில் விழப் பார்க்கிறீர்கள். 'சைனியத்தோடு வரும் மன்னர்களை நம்பாதே; தேரோட்ட முன்













வரும் கண்ணனை நம்பாதே. என்னையே நம்பி மீண்டும் சூதாட வா. சூதாடி, இழந்த பகுதியை மீட்டுக்கொள்' என்று சகுனி தர்ம புத்திரரிடம் கூறி, அதற்கு அவர் ஒப்பியிருந்தால் எப்படி இருக்குமோ அதுபோல இருக்கிறது உங்கள் நடவடிக்கை.

யுத்த தந்திரம் என்பது எளிதான விஷயமல்ல. அதிலும் வானப் பாதுகாப்பு என்பது மிகவும் சிக்கலான விஷயம். இரண்டாவது உலகப் போருக்குப் பின்தான் மேல் நாடுகளே இதன் நுணுக்கங்களை அறிந்தன. வண்டி வண்டியாக நீங்கள் ஏரிப்பணம் திரட்டினாலும், அவற்றை உபயோகத்துக்குக் கொண்டுவர, நீங்கள் வேண்டாம் என்கிற அதே மேல் நாடுகளிடம்தான் போயாக வேண்டும். இதை எண்ணிப் பாருங்கள். நண்பர்களிடம் நம்பிக்கை வைக்கவும், விரோதிகளிடம் ஜாக்கிரதை செய்து கொள்ளவும் கற்றுக் கொள்ளுங்கள். இதைக் கற்காததால் நாம் ஏற்கனவே வேண்டிய அளவு மானபங்கம் அடைந்தாகி விட்டது. மொரார்ஜி அவர்களே, உங்களை வேண்டிக் கொள்கிறோம், உங்களுக்குத் தெரிந்தது என்ன, தெரியாதது என்ன என்பதை அடக்கத்துடன் புரிந்து கொள்ளுங்கள்!

# தொழிலதிபர்களின் விழிப்பு

தொழிலதிபர்கள் தங்கள் குறைகளை எடுத்துச் சொல்லும்போதும் அரசாங்கத்தைக் கண்டனம் செய்யும்போதும் மிதமான சொற்களைத்தான் உபயோகிப்பார்கள். உணர்ச்சிகளைத் தூண்டும்படியோ, ஆத்திரமூட்டும்படியோ பேசமாட்டார்கள். ஏனெனில் அரசாங்கத்தின் தயவை நாடியே அவர்கள் தொழில் நடத்த வேண்டியிருக்கிறது. எந்த அமைச்சருக்குக் கோபம் ஏற்பட்டால் எந்த லைசென்ஸ், எந்தப் பெர்மிட் ரத்துச் செய்யப்பட்டுவிடுமோ என்ற பயம் அவர்களுக்கு எப்போதும் உண்டு. அப்படிப்பட்டவர்கள் கடுமையான வாசகங்கள் பிரயோகித்துச் சர்க்காரின் கொள்கைகளைக் கண்டிக்க வேண்டும் என்றால் அவர்களுடைய மனநிலை எவ்வளவு தூரம் அமைதி குலைந்திருக்கும் என்பது தெரியும். ஜூன் 21 அன்று ஐதராபாத்தில் கூடிய அகில இந்தியத் தொழிலதிபர்களின் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தைப் பாருங்கள்:

"பங்குதாரர்களுக்குக் கொடுக்கப்படும் டிவிடெண்டு தொகைகள் குறைந்துவிட்டன; புதுத் தொழில்கள் ஆரம்பிப்பது குன்றி விட்டது. பொதுமக்களிடமிருந்து கிடைக்கும் ஆதரவு கணிசமாகக் குறைந்து விட்டது; பங்குகளின் விலைகள் சரிந்து விட்டன; அந்நியக் கூட்டாளிகளின் ஒத்துழைப்பும் மூலதன முதலீடும் விரல் விட்டு எண்ணுமளவுக்கு நலிந்துவிட்டன. ஆகவே இவ்வெல்லாத் துறைகளிலும் புத்துயிர் அளிப்பதற்காக, உடனடியாக நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். இல்லா விட்டால் முன்னேற்றத்துக்காக எடுக்கப்படும் நடவடிக்கைகள் எல்லாம் பயனற்றுப் போகும்."

இதே கருத்துக்களை நாட்டில் பல அறிஞர்களும், பத்திரிகை ஆசிரியர்களும், பொருளாதார வல்லுநர்களும் ஏன், அயல் நாடுகளிலிருந்து நம் நாட்டுக்கு விருந்தினர்களாக விஜயம் செய்யும் பிரமுகர்களும் தெரிவித்திருக்கின்றனர். ஆனால் காங்கிரஸ் கட்சி அரசாங்கத்தின் காதுகளில் இவையெல்லாம் ஏறுமா? செவிடன் காதில் ஊதிய சங்கைப் போலத்தான் ஆகும்.






## மதுராபுரி மகோற்சவம்

ஞாலமெல்லாம் புகழ்கொண்ட ஆலவாய் ஆலயத்தின் மகா கும்பாபிஷேகம் ஜூன்மீ 28ந் தேதி அங்கயற்கண்ணியின் திரு அருளில் அமோகமாக நிறைவேறியது. அன்று லட்சோப லட்சம் மக்கள் தங்கள் இதய கும்பத்தில் நிறைந்த பக்தியில் மூழ்கிக் களித்தனர். தேவரும் மூவரும் காணத்தக்க கும்பாபிஷேகக் காட்சிகளில் சில வற்றை இங்கு நமது வாசக நேயர்களுக்கு அளிக்கிறோம்.

1. புது மெருகு பெற்ற மதுரையம்பதியின் மகோன்னத ஆலயம். 2. மதுரமே உருவான மதுரை மீனாக்ஷியின் சந்நிதி விமானத்தைப் பக்தி ஆர்வத்துடன் நோக்குகிறார் காமாக்ஷியின் சாந்நித்தியம் பெற்ற காமகோடிபீடாதிபதிகள். 3. வேத வித்தகர்கள் கும்பத்துடன் புறப்பட்டுவிட்டார்கள். 4. திரிமூர்த்தியரும் ஒரு மூர்த்தியான ஏகபாத மூர்த்தியைத் தேடித் தேடிக் கண்டு களித்த குருமூர்த்தி. 5. சைவமும்






தமிழும் செழிக்கச் செய்யும் தருமை ஆதீன கர்த்தரும் சோமசுந்தரத் தம்பிரான் அவர்களும். 6; 11 ஞானதீபங்களாகிய இரு ஆசாரியர்களும் தீபமேற்றுகிறார்கள். 7. தேவியின் விமான மீது ஏறுகிறார் ஜகத்குரு. 8. அறுபத்து நாலு திருவிளையாடல் புரிந்து உலகையெல்லாம் சொக்கவைத்த சொக்கநாதன் திருவிமானம். 9. கவர்னர் ஸ்ரீ மேதியும், ராஜ்ய மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலமும், மத்தியத் துணை மந்திரி ஸ்ரீ வி. ஆர். பட்டாபிராமனும் கும்பாபிஷேகம் காண்கிறார்கள். 10. இந்த வைபவத்தின் காரண புருஷரான ஸ்ரீ பி. டி. ராஜனுடன் மகிழ்ந்து பேசுகிறார் ஸ்ரீ ஆசாரியர். 12. தமிழக கவர்னர் தம்பதியுடன் கேரள கவர்னரும் விழாவில் பங்கு கொண்டார். 13. ஸ்ரீ பக்தவத்ஸலம், ஸ்ரீ வி. கே. ராமஸ்வாமி முதலியார், ஸ்ரீ வி. ஆர். பட்டாபிராமன் மற்றும் பக்தர் திரள்.

# என்ன சேதி?

### கம்யூனிஸ்டுகளின் கிளர்ச்சி

**தா**ங்கமுடியாத வரிகளை எதிர்த்தும் விலைவாசி உயர்வை எதிர்த்தும் கம்யூனிஸ்ட் கட்சி விரிவான முறையில் கிளர்ச்சி நடத்தவிருக்கிறது. வரிகளை எதிர்த்து நாட்டிலுள்ள எல்லாக் கட்சிகளுமே — காங்கிரஸ் கட்சியைத் தவிர— கண்டனம் தெரிவித்திருக்கின்றன. இந்த நிலையில், காங்கிரசுக்கும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் வேற்றுமையை விட ஒற்றுமையே அதிகம் என்று நாடு முழுதும் உணர்ந்திருக்கும்போது கம்யூனிஸ்ட் கட்சி வரிமுறைகளை எதிர்ப்பது ஆச்சரியமாகவே இருக்கும். அரசியல் துறையில் தாங்கள் இழந்த செல்வாக்கை மீண்டும் ஓரளவுக்கேனும் பெறுவதற்காக இந்த நடவடிக்கையை அவர்கள் மேற்கொண்டிருக்கின்றனர் என்பது வெளிப்படை. ஏனெனில் உண்மையாக அவர்கள் வரிகளை எதிர்ப்பார்களேயானால் அவற்றுக்குக் காரணமான தவறான கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் காங்கிரஸ் கட்சி பதவியிலிருந்து ராஜிநாமா செய்ய வேண்டுமென்று கிளர்ச்சி செய்ய வேண்டும்! அவ்வாறு அவர்கள் செய்ய முன்வர மாட்டார்கள். அதற்கு அவர்கள் தயாராகவும் இல்லை.

கம்யூனிஸ்ட் கட்சி நடத்தும் கண்டன ஊர்வலங்களிலும் பொதுக் கூட்டங்களிலும் இதர கட்சிகள் இணைந்துகொள்ளலாமா என்பது கேள்வி. அந்தந்தக் கட்சிகள் நடத்தும் கண்டனங்கள் அந்தந்தக் கட்சிகளின் சார்பிலேயே இருத்தல் நல்லது. அப்போதுதான் கண்டனத்தின் முக்கியத்துவம் வெளிப்படும். வேறு நோக்கத்துடன் நடத்தப்படும் கம்யூனிஸ்ட் ஊர்வலங்களில் மற்ற கட்சிகள் கலந்துகொள்ளாமல் இருப்பது நலம்.

### அசோக் மேத்தாவின் கருத்து

**நா**ளுக்கு நாள், எதிர்க் கட்சிகள் இணைந்து ஒருமுகமாக இயங்கவேண்டும் என்பதை எதிர்க் கட்சிகளிலுள்ள தலைவர்கள் உணர்ந்துவருகிறார்கள். சில நாட்களுக்கு முன்பு ஜனசங்கம் அலகாபாத்தில் இந்தக் கருத்தை வற்புறுத்தி ஒரு தீர்மானமும் நிறைவேற்றியது. இப்போது அசோக் மேத்தா இதே கருத்தை வற்புறுத்தியிருக்கிறார். 'தேர்தல் காலத்துக்கு மட்டும் ஐக்கிய முன்னணி அமைத்துக் கொண்டு போட்டியிடுவதில் பயனில்லை. எதிர்க் கட்சிகள் எல்லாம் இணைந்து ஒரு கட்சியாகச் செயல்பட்டால்தான் தேசம் பொருளாதாரத் துறையிலும், அரசியல் துறையிலும் முன்னேற முடியும். இல்லையேல் ஒவ்வொரு துறையிலும் தேக்கம் கண்டு, முன்னேற்றம் காணாமல் அவதிப்பட நேரும்' என்று எச்சரிக்கை செய்கிறார்.

### காந்திஜி வந்தால்...

**ம**காத்மா காந்தி இந்தியாவுக்கு வருவதாகக் கூறினால் இந்தியமக்கள் வர வேண்டாம் என்று பதில் சொல்வார்கள் என்று திருவனந்தபுரத்தில் சமீபத்தில் ஸ்ரீமான் தேபர் அவர்கள் கூறினாராம். தேபர் அவர்கள் முன்னாள் காங்கிரஸ் அக்ராசனராக இருந்தவர். இவர் தலைமையில் நடந்த ஆவடி காங்கிரஸ் மகாசபையில்தான் காங்கிரஸ் தன் பழைய கொள்கையை விட்டுத் தடம் புரண்டு சோஷலிஸத்தை ஸ்வீகரித்துக் கொண்டது. அதிலிருந்து தேசத்தில் பெர்மிட்—லைசென்ஸ் ஆட்சி தீவிரமாகி எங்கும் லஞ்ச ஊழல் மலிந்து விட்டது. மக்களோ இந்த அட்டூழியம் ஒழியாதா என்று ஏங்கிக் கொண்டிருக்கின்றனர். நாட்டை இந்நிலைக்குக் கொண்டு வருவதற்காகவா காந்தியடிகள் சுயராஜ்யம் வாங்கித் தந்தார் என்றுகூட மக்கள் குறைப்பட்டுக்கொள்கிறார்கள். இப்போது நடப்பதையெல்லாம் பார்த்து காந்தியடிகள் கோபிப்பாரோ என்று பயந்துதான் மக்கள் வரவேண்டாம் எனச் சொல்வார்கள் என்று தேபர் எண்ணுகிறாரோ, தெரியவில்லை.

உண்மையில் மக்கள் காந்திஜி வருவதாகச் சொன்னால் கரம் குவித்து வரவேற்று, 'இந்தக் காங்கிரஸ் ஆட்சியை ஒழிக்க வழி செய்யுங்கள்' என்று கேட்பார்கள். அப்படியே காந்தியடிகளும் செய்வார் என்பதை அவர் பிறந்த ஊராகிய ராஜ்கோட்டில் நடந்த தேர்தல் குறிப்பாக உணர்த்திவிட்டது.

### உணவில் விஷம்

**அ**ணுஆயுத சோதனைகளால் வெளிப்பட்ட விஷம் 1962ம் ஆண்டு உற்பத்தியான உணவுப் பொருட்களில் ஏராளமாகக் கலந்திருப்பதாக ஹாலந்து தேச ஆரோக்கிய மந்திரி தெரிவித்திருக்கிறார். யுத்தம் என்று ஏற்படாமலே, யுத்தத்தைத் தடுக்கும் யத்தனத்திலேயே இவ்வாறு உண்ணும் உணவு, சுவாசிக்கும் காற்று எல்லாவற்றையும் விஷமாக்கி வருவது உலகத்தின் துர்ப்பாக்கியம். மாஸ்கோ மகாநாட்டில் நிச்சயமாக நல்ல முடிவு ஏற்பட வேண்டுமென்பதே இன்று நம் பிரார்த்தனை.

# பாமாலிவ் லவண்டர்

## வசீகரிக்கும் நறுமணம்....

## பெருமிதத்தையும், அழகையும் அளிக்கிறது!




வசீகரம்...பாமாலிவ் லவண்டர் டால்கம்
பெருமிதத்திற்கும், அழகிற்கும் உற்ற நண்பன்.
சிறிது பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பின்மேல்
தூவிக்கொண்டால், அதன் இனிய நறுமணம்
உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள். பாமாலிவ்
உபயோகித்து எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும்,
நறுமணத்துடனும், அழகுடனும் விளங்குங்கள்.




பாமாலிவ் டீலக்ஸ்—மயக்கும்
17 செண்டுகளின் அற்புதமான கலவை!

PT-G-6-TAM.



# டினோபால் மட்டுமே ஆடைகளை அதிகப்படியான வெண்மை யாக்கு மென்பதை விவேகமுள்ள அன்னைகள் அறிவார்கள்



டினோபால் வெண்மையைச் சேருங்கள்.

மின்னும் வெள்ளை உடுப்புகளில் உங்கள் குழந்தைகளைக்காண என்ன ஆனந்தமாயிருக்கும்! வெள்ளை ஆடைகளை கண்கூசும் அதிகப்படியான வெண்மையாக்கும்படி டினோபால் பிரத்தியேகமாய்த் தயாரானதென்பதை விவேகமுள்ள தாய்மார்கள் அறிவார்கள்.

மேலும், டினோபால் மிகச் சிக்கனமானது.

டினோபால் வெண்மையைப் பெற நேரமோ பணமோ விரயமாவதில்லை—ஒரு வாளி நிறைந்த ஆடைகளை வெண்மையாக்க கால் தேக்கரண்டி அளவே உங்களுக்கு தேவை! மேலும், டினோபால் வெண்மை நீடித்திருக்கும்: அதனால் உங்கள் ஆடைகளைத் துவைக்கும் ஒவ்வொரு தரமும் இம்முறையைச் செய்யும் அவசியமில்லை.

ஞாபகமிருக்கட்டும்—




டினோபால் என்ற வர்த்தகநேம் ஜே. ஆர். கெய்கி, எஸ். ஏ. பால், ஸ்விட்ஸர்லாந்து என்பவர்களுடைய ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்காகும்.



தயாரிப்பாளர்கள்:
சுஹ்ரித் கெய்கி லிமிடெட், வடிவாடி, பரோடா

சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ்:
சுஹ்ரித் கெய்கி ட்ரேடிங் லிமிடெட், த. பெ. 965, பம்பாய்-1. பி. ஆர்.






**பூ**தத்தாழ்வார் பாடுகிறார்:

தாம்உளரே தம்உள்ளம்
உள்உளதே

தாங்கள் இருக்கிறார்கள். தங்களுக்கு உள்ளமும் இருக்கிறது. உடம்புக்குள்ளேயே இருக்கிறது அது!

தாமரையின்
பூஉளதே ஏத்தும்
பொழுது உண்டே

திருமாலுக்கு அர்ச்சனை செய்வதற்காகத் தாமரைப் பூ இருக்கிறது. துதிப்பதற்கு அவகாசம் வேண்டிய அளவு இருக்கிறது.

— வாமன்
திருமருவு தாள்மருவு
சென்னியரே

[வாமன் - அழகு நிறைந்த பெருமான். திருமருவுதாள் - பெறக்கூடிய பாக்கியங்கள் அனைத்தும் கொண்ட திருவடிகளை. தாள் மருவு - அந்தத் திருவடிகளை நெருங்கி வணங்கும். சென்னியரே - தலையை யுடையவர்களே.]

அப்படி வணங்குகிறவர்கள் கொடிய நரகத்துக்குக் கொண்டு போகப்பட மாட்டார்கள்.

செவ்வே
அருநரகம் சேர்வது
அரிது

[செவ்வே - நன்றாக, சந்தேகமில்லை. அருநரகம் சேர்வது அரிது - நரகத்துக்குப் போவது துர்லபம்.]

பாபங்கள் செய்து நரகத்துக்கு உரியவர்களாயினும், பகவானின் தாளில் பக்தி செலுத்தினவர்கள் தண்டனையிலிருந்து விடுபடுவார்கள்.

— வாமன்
திருமருவு தாள்மருவு
சென்னியரே செவ்வே
அருநரகம் சேர்வது
அரிது.

திருமாலைத் தியானிக்க இந்த உடம்பினுள் உள்ளம் இருக்கிறது. அவனை அர்ச்சிக்கத் தாமரை மலர் இருக்கிறது. அவகாசமும் வேண்டிய அளவு இருக்கிறது. அவன் தாளிலே சூடுவதற்கு ஆண்டவன் வணங்கும்படியான தலையும் கொடுத்திருக்கிறான். வணங்கினால் பாவங்கள் அகலும் என்று ஆழ்வார் உறுதி கூறுகிறார்.

தாம்உளரே தம்உள்ளம்
உள்உளதே தாமரையின்
பூஉளதே ஏத்தும்
பொழுதுண்டே — வாமன்
திருமருவு தாள்மருவு
சென்னியரே செவ்வே
அருநரகம் சேர்வது
அரிது!

# விம்பிள்டன் வரேளா?



★ விம்பிள்டன் வரேளா? திங்கள்கிழமையிலிருந்து மைதானம் என் போட்டால் எள் விழ இடமில்லாது மக்கள் விம்பிள்டன் டென்னிஸ் போட்டியைக் காண அமர்ந்திருக்கிறார்கள். இதோ இதுதான் நடுமைதானம். விம்பிள்டனிலேயே பிரசித்தி வாய்ந்தது. இந்த மைதானத்தின் வாயிலில் ருட்யார்ட் கிப்ளிங்கின் பொன் மொழி பொறிக்கப்பட்டுள்ளது. ''வெற்றியோ தோல்வியோ எதை அடைந்தாலும் இரண்டையும் சமமாகக் கருதுங்கள்!''—இது பொன்னான மொழிதானே?

★ இங்கிலாந்தில் விட்மோர் ஜோன்ஸும், அவரது சகோதரர் டாக்டர் ஜோன்ஸும், 'பீல்ட்' பத்திரிகையின் ஆசிரியரோடு சேர்ந்து கமிட்டி அமைத்து, டென்னிஸ் ஆட மைதானத்தைத் தேடியலைந்தனர். 1869ம் வருஷம் விம்பிள்டனிலுள்ள மிஸ்டர் ஆல்பர்ட் டிக்ஸன், ஸ்டேஷனுக்கு அருகில் உள்ள வார்போல் ரோட்டிலுள்ள நான்கு ஏக்கர் மைதானத்தை அந்தக் கமிட்டிக்கு வாடகைக்கு விட முன்வந்தார். 495 பவுன் செலவில் இந்த மைதானம் ஒழுங்கு செய்யப்பட்டது. தோட்டக்காரன் குடிசை, சிறு வீடு, பிரமுகர், பெண்மணிகள் தங்கும் அறைகள் கட்டப்பட்டன. விம்பிள்டன் ஸ்டேஷனிலிருந்து மைதானத்துக்கு வரும் பாதை வருஷம் ஒரு பவுன் வாடகைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. இரண்டு பேர் மைதானத்தைக் கண்காணிக்க நியமிக்கப்பட்டனர். வால்ச் என்பவர் ரோலர் ஒன்றை வெகுமதியாகக் கொடுத்துத் தம் மகனை விம்பிள்டன் ஆயுள் அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளும்படி கேட்டார்.

★ அந்தக் காலத்திய டென்னிஸ் ஆட்டக்காரர்கள் உபயோகித்த மட்டைகள் சதுர வடிவம் படைத்தவை. கைப்பிடி இப்பொழுதுள்ளது போல் அவ்வளவு அழகு படைத்தது அல்ல. பந்துகள் கனம் குறைவாகவும் சிறிதாகவும் இருந்தன.

★ 1922ம் வருஷம் முதல் மகா யுத்தத்துக்குப் பிறகு 1,40,000 பவுன் செலவில் இப்பொழுதுள்ள விம்பிள்டன் மைதானம் உருவாகியது. புதிய நடு மைதானம் பதினைந்தாயிரம்பேர் அமர்ந்து பார்க்கலாம். முதல் மைதானத்தில் ஆறாயிரத்தைந்நூறு பேர்கள் இருந்து பார்க்கலாம். இந்தப் புதிய மைதானங்களில் விளையாட்டை இங்கிலாந்து மன்னர் ஐந்தாம் ஜார்ஜ் ஆரம்பித்து வைத்தார்.

★ விம்பிள்டன் டிக்கட்டுகள் விலையை உயர்த்திவிட்டாலும் அவற்றைப் பெறுவதில் உள்ள ஆவலும் போட்டியும் குறைந்துவிடவில்லை. டிக்கட் எண்களைக் குலுக்கிப் போட்டு அதிர்ஷ்டமுள்ளவர்களையே ஆட்டம் பார்க்க அனுமதிப்பார்கள். குலுக்கலில் தோல்வியுற்றவர்களுக்குப் பணம் திரும்பிவிடும்.

★ விம்பிள்டனில் பெண்கள் டென்னிஸ் போட்டி 1884ம் வருஷம் தொடங்கப்பட்டது. முதன் முதலில் பெண்கள் டென்னிஸ் போட்டியில் வெற்றி பெற்றவர் மிஸ் வாட்ஸன்.

★ பெண்கள் வர்ண உடை அணிந்து கொண்டு விளையாடுவது இந்த வருடம் தடைப்படுத்தப் பட்டுள்ளது. 'நல்ல ஆட்டத்துக்கு இது தடையாகும்' என்று அதிகாரிகள் குறிப்பிட்டுள்ளனர். இந்த வர்ண உடைப் பழக்கத்தை 1949ம் வருஷம் அமெரிக்க ஆட்டக்காரி கெஸ்ட்ருட் மோரன் விம்பிள்டனில் ஆரம்பித்துவைத்தாள்.

★ விம்பிள்டனில் பல தடவைகள் தனியார் ஆட்டத்தில் வெற்றி பெற்றுப் புதிய அத்தியாயத்தைத் தோற்றுவித்தவர் டோஹார்ட்டி. 1902ம் வருஷத்திலிருந்து 1906ம் வருஷம் வரை அவர் ஐந்து தடவை தொடர்ச்சியாக வெற்றி பெற்றது சரித்திரம் காணாத புதுமை.

★ அமெரிக்காவில் ஜாக் கிராமர் உலகின் தலைசிறந்த டென்னிஸ் ஆட்டக்காரர்களையெல்லாம் 'டென்னிஸை உத்தியோகமாக'க் கொள்ளும் 'புரொபஷனல்'களாக்கி வருபவர். விம்பிள்டன் வெற்றி வீரர் ஓல்மோடோ, 1956ம் வருட விம்பிள்டன் சாம்பியன் டோனி டிராபர்ட் ஆகியோரெல்லாம் இந்தக் 'கிராமர் ட்ரூப்'பைச் சேர்ந்தவர்கள்.

குண்டுமணி



மெக்கன்லி



மார்ட்டிமர்

இந்தக் கிராமர் நம் தேசிய விளையாட்டுக்காரர் கிருஷ்ணனையும் அவரது ஆட்டத் திறமையைக் கண்டு 'புரொபஷனலா'க்க என்ன வெல்லாமோ பிரயத்தனப்பட்டார்.

''நல்ல டென்னிஸ் ஆட்டக்காரர்களுக்கு எங்கள் ட்ரூப்பில் இடமுண்டு. கிருஷ்ணன் அற்புதமான ஆட்டக்காரர்!'' என்று விம்பிள்டன் வெற்றி வீரர் டிராபர்ட் கூறி யிருக்கிறார். கிருஷ்ணனை புரொபஷனலாகக் 'கிராமர் ட்ரூப்'பில் ஏற்றுக் கொள்ள அவர்கள் தயாராயிருக்கிறார்கள். கிருஷ்ணன்தான் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர் இன்னும் அமெச்சூர் கோஷ்டியில் இருந்து ஆடி வருகிறார். விம்பிள்டனில் முன்பு செமி பைனல் வரை வந்து ஸ்பெயின் தேசத்து மொரேனு, பிரபல ஆட்டக்காரர் ஆயாலா ஆகியோரைத் தோல்வியுறச் செய்துள்ளார்.

★ ''கிருஷ்ணன் 'கால்காஸ்' விநியோகஸ்தராகத் தொழில் துறையில் ஈடுபட்டுவிட்டாரே. இனி ஆட்டத்தை விட்டுவிடுவாரா?'' என்று டென்னிஸ் ரஸிகர்கள் சமீபத்தில் ஒருவருக்கொருவர் கவலையுடன் கேட்டுக்கொண்டனர்.

ஆட்டத்தை விடமாட்டார் என்பதற்கறிகுறியாக, திரு கிருஷ்ணன் இந்த வருஷம் விம்பிள்டனில் கலந்து கொள்ளச் சென்றிருக்கிறார். முதல் ரவுண்டில் இவருக்கே வெற்றி கிடைத்துள்ளது. அவரது நீண்ட நாளைய அவா இந்த வருடம் பூர்த்தியானால் இந்தியாவின் பெருமையும், அவரது திறமையும் சுடர்விட்டுப் பிரகாசிக்கும். இந்த வெற்றி கிடைப்பது அவ்வளவு சுலபமல்ல. ஆஸ்திரேலிய டென்னிஸ் வீரர் எமர்ஸன் சமீபத்தில் குயின்ஸ் கிளப் போட்டியில் வெற்றி பெற்றுவிட்டு விம்பிள்டனுக்கு வந்திருக்கிறார். எனினும் கிருஷ்ணன் அமெரிக்க ஆட்டக்காரர் ரால்ட்ஸனை தோல்வியுறச் செய்து மூன்றும் ரவுண்டுக்கு வந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது.



ரோஸ்வால்

# அறிவுக் கனலே, அருட் புனலே!

22

ரா. கணபதி

**பை**ரவி பிராம்மணிக்குத் தக்ஷிணே சுவரத்தில் இடம் ஒழித்துக் கொடுக்க வேண்டுமென்றே போல் ராணி ராஸ மணி அந்த 1861ம் ஆண்டில் அம்பிகை யின் அடியிணைகளை அடைந்து விட்டாள். 'காளி மாதாவின் கமல பதத்துக்கு ஏங்கும் ராணி ராஸமணி' என்று தனது அதிகார முத்திரையில் பொறித்திருந்த அந்தப் புனித ஜீவன், புனிதம் பரப்பும் ஒரு புண்ணியமூர்த்திக்குத் தலைநகராகத் தக்ஷிணேசுவரத்தை அமர்த்தித் தந்து விட்டுத் தேவியின் தாமரை அடிகளைத் தேடிச் சென்றுவிட்டது. 'திவ்விய மாதா வின் எட்டுச் சேடிகளில் ஒரு நாயிகை ராஸமணி; தேவி வழிபாட்டைப் பரப் பவே பிறந்தவள்' என்று ராமகிருஷ் ணர் கூறியதுண்டு.

ராஸமணியின் கடைசிக் காலத்தி லேயே அவருடைய பெண்களுக்குள் சொத்துக்கள் விஷயமாக உரசல் ஏற்பட்டதாகத் தெரிகிறது. அவள் மறைந்த பின்பு அது வலுத்தது. வழக்கு, வியாஜ்யங்கள் எல்லாம் நடந் தன. அவற்றின் முடிவு எப்படியானாலும் கடைசிப் பெண் ஜகதம்பா தாஸியும், அவளது கணவர் மதுராநாதரும் நல்ல சீரும் சிறப்பும் செல்வாக்குமுள்ள வாழ்க் கையைப் பெற்றனர். தக்ஷிணேசுவர ஆலய நிர்வாகம் மதுராநாதரின் தனித் தலைமைக்கு வந்தது நம்முடைய அதிர்ஷ் டம். அது காரணமாகத்தான், பூஜை எதுவும் செய்யாதிருந்தும் ராமகிருஷ் ணர் தொடர்ந்து தக்ஷிணேசுவரத்திலே தங்கியிருந்து பற்பல சாதனா மார்க்கங் களை அநுஷ்டித்து அறிந்து தர்மத்தின் எல்லாப் பிரிவுகளின் சத்தியத்தையும் நிரூபித்துக் காட்ட முடிந்தது. அவர் இவ்வாறு பல சாதனைகளை மேற்கொள் ளச் சகல வசதிகளும் செய்து தந்த மதுரா நாதருக்கு ராமகிருஷ்ண பக்தர்கள் பெரிதும் நன்றிக் கடன்பட்டுள்ளார்கள்.

**சா**தனா மார்க்க மொன்றில் ராம கிருஷ்ணரை முதன் முதலில் சாஸ்திரீய மாகப் பயிலு வித்தது பைரவி பிராம்மணிதான்.

பைரவி பிராம் மணி தக்ஷிணேசு வரத்துக்கு வடக் கில் கங்காதீரத்தி லுள்ள 'தேவி மண்டல கட்டம்' என்ற கிராமத் தில் இருந்து கொண்டு ராம கிருஷ்ணரை அநு தினமும் வந்து பார்க்கலானாள். ராம கிருஷ்ண ரைப் பஞ்சவடி யில் ராமனைக் கண்டவள், தேவி மண்டல கட்டத் தில் அவரைக் கிருஷ்ணனாகக் கண்டு, வெண் ணெயும் இனிப்புக் களும் எடுத்துக் கொண்டு பக்தி புஞ் ஜமாக தக்ஷிணேசுவரத்துக்கு வரு வாள். சிவப்புக் காசிப் பட்டு உடுத்தி, விரித்த தலையுடன், தனது பௌதிக மான சுந்தர முகத்தில் வாத்ஸல்யத் தின் ஆத்மிகமான சௌந்தர்யம் துலங்கக் கையில் நவநீதத்துடன் அவள் வருவதைக் கண்டால் யசோதா தேவியே வருகிறாளோ என்று தோன்றும் என குரு மஹராஜ் பிற்காலத்தில் மொழிந்ததுண்டு.

ராமகிருஷ்ணருக்கு சாஸ்திரங்களில் அப்பியாசம் அளித்தவர்களுக்கெல்லாம் பிற்காலத்தில் சகல வசதியும் செய்து தந்த மதுராநாதர் பைரவி பிராம் மணியின் புனிதம் சார்ந்த பெருமையை முதலில் புரிந்துகொள்ள வில்லை.

ஒரு நாள் பைரவி பிராம்மணி அவரை எதிர்ப்பட்டபோது, மதுரா நாதர், ''இந்தப் பைரவியுடைய பைரவர் எங்கே இருக்கிறாரோ?'' என்று கூட ஏளனமாகக் கேட்டதுண்டு.

தூய்மையில் திடமாக ஊன்றியிருந்த—ஊறியிருந்த—பைரவி அந்தக் கேள்வியால்

கலங்கி விடவில்லை. அவளது அப் பழுக்கற்ற தூய்மை அளித்திருந்த தெம்புடன் ஆலயத்தில் பொறித்திருந்த பைரவ மூர்த்தியின் இரு மூர்த்தத்தை மதுரா நாதருக்குச் சுட்டிக் காட்டினுள். ''அவர்தான் இந்தப் பைரவியின் பைரவர்'' என்று அழுத்தம் திருத்தமாக முகத்தில் அறைந்தாற் போல் விடை கூறினுள்.

பசுபதியே தன் பதி என்று அவ்வளவு நிச்சயமாக ஒருத்தி சொல்ல வேண்டுமென்ருல் அவளுடைய பக்தியும், சாதனையின் சீலமும் எவ்வளவு உன்னதமாக இருக்க வேண்டும்?

ஏனே அந்த வார்த்தைகள்கூட மதுராநாதரின் மனசைத் தெளிவிக்கவில்லை. ''அது சரி, உங்கள்

பைரவர் இருந்த இடத்தைவிட்டு அசையாதவராக அல்லவா இருக்கிறார்? நல்ல அகமுடையான்!'' என்று குத்தலாகச் சொன்னார்.

அப்போதும் பைரவி கோபவசமாகவில்லை. தெய்விகம் ததும்பும் குரலில், ''பாபுஜி! அசையாதவரை அசைக்க இயலாமலா, ஜடத்தை ஜீவனுக்க இயலாமலா நான் பைரவியாகி இருக்கிறேன்?'' என்றாள்.

மதுர் பாபுவின் உடல் முழுதும் ஒரு கம்பனம் உண்டாயிற்று. அசையாதவற்றை அசைத்து, ஜடத்தை ஜீவனுக்கும் சர்வேச்வரியே பேசுவது போல் அதென்ன அப்படிப்பட்ட ஓர் உறுதி இந்தப் பெண்ணுக்கு?

மன்னிப்புக் கேட்கிற பாவனையில் பிராம்மணியின் வதனத்தை நோக்கினார் மதுர் பாபு. அவளுடைய சிந்தனையெல்லாம் அடர்ந்து செறிந்து பைரவப் பிரம்மத்திடமே தோய்ந்திருப்பதை அந்த மதி முகம் காட்டியது.

குழந்தை உள்ளம் படைத்த ராமகிருஷ்ணர் மதுராநாதரிடம் சொன்னார்: ''எனக்கு ஏதோ உடம்புக் கோளாறு என்று நீங்கள் நினைத்து கங்கா பிரஸாத் ஸென்னைக் கொண்டு வைத்தியம் செய்கிறீர்கள். பைரவியோ எனக்கு ஏதும் கோளாறு இல்லை என்கிறாள். மகாபாவம் கூடியிருப்பதாலேயே நான் இப்படி இருக்கிறேனும். அதற்கும் மேலாக இவள் சொல்கிறாள் — நான் பரம புருஷனின் ஓர் அவதாரம் என்று.''

ராமகிருஷ்ணரிலேயே அம்பிகையையும் ஈசுவரனையும் கண்டிருந்த மதுராநாதருக்குக் கூட இந்தக் கூற்று மிகையாகத்தான் பட்டது. சாதாரண ஜீவனுகப் பிறந்து உயர் நிலையை அடைந்த மகான் என்றுதான் அவரால் பட்டாசாரியரை நினைக்க முடிந்ததேயன்றிப் புருஷோத்தமனின் அவதாரம் என்று கருத முடியவில்லை.

அப்போது பைரவியே அங்கு வந்தாள். மதுராநாதர் சற்றே இளக்காரமாக, ''பைரவி அம்மணியே, தசாவதாரங்கள்தான் உண்டு என்றே அடியேன் அறிந்திருக்கிறேன். தாங்கள் ஏகாதசாவதாரம் பற்றி....'' என்று கூறத் தொடங்கினார்.

முன்பு அவருக்கு விடையிறுத்தபோது தொனித்த அதே உறுதியுடன் இப்போதும் பைரவி பேசினாள். ''ஏன், ஸ்ரீமத் பாகவதத்தில் இருபத்து நாலு அவதாரங்களைப் பற்றிக் கூறியிருக்கிறதே! பகவத்கீதையில் பார்த்தசாரதி என்ன கூறியிருக்கிறான் என்று நினைவுபடுத்திக் கொண்டு பாருங்கள்: 'தர்மத்துக்கு எப்போதெல்லாம் ஊறு நேர்ந்து, அதர்மம் மண்டி வளருகிறதோ, அப்போதெல்லாம் நான் பிறப்பெடுக்கிறேன்' என்றே அவன் சத்தியப் பிரமாணம் செய்து தந்திருக்கிறான். இவ்வளவு முறைக்கு மேல் பிறக்க மாட்டேன் என்று எண்ணிக்கைக்கு வரம்பு கட்டவில்லை'' என்றாள்.

பைத்தியம் என்று பலரும், மனிதருள் உயர்ந்தவர் என்று ஒரு சிலரும் எண்ணியிருந்த ராமகிருஷ்ணரை ஒரேயடியாகத் தெய்வத்தின் நிலைக்கு உயர்த்தி விட்டாள் பிராம்மணி.

ஆலயச் சூழலில் இந்த விஷயம் சலசலப்பையும் கலகலப்பையும் ஏற்படுத்தி விட்டது. சிரித்துக் கேலி செய்தனர் சிலர்; பயந்து பீதி கொண்டனர் சிலர்; உருகி அன்பு செய்தனர் சிலர்.

''பண்டிதர்களை இங்கே வரவழையுங்கள். நான் சாஸ்திரங்களின் துணை கொண்டு ராமகிருஷ்ணரின் ஒவ்வொரு செயலையும் பரிசீலித்து அவர் அவதார புருஷர் என நிர்த்தாரணம் செய்து காட்டுகிறேன்'' என்று அறைகூவினாள் பிராம்மணி.

மதுராநாதருக்கும் ஒரு குதூகலம் ஏற்பட்டது. பிரக்யாதி பெற்ற வைஷ்ணவ பண்டிதராகிய வைஷ்ணவ சரணரையும், சாக்த சாதனைகளில் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்த கௌரிகாந்த தர்க்க பூஷணரையும் இன்னும் சிலரையும் அவர் தக்ஷிணேசுவரத்துக்கு வரவழைத்தார்.

வைஷ்ணவ சரணர் ராமகிருஷ்ணரை முதலில் கண்டபோது, ராமகிருஷ்ணர் அம்பாளை வணங்கி அவளை அப்படியே அகத்தில் நிறைத்துக்கொண்டு அந்த ஆதி சக்தியைச் சிவத்தில் கரைக்கும் பரம சாதனையில் தோய்ந்தவராக உடலெல்லாம் ஜ்வலிக்கக் காட்சி தந்தார்.

''நீங்களா, அவதாரமா? அல்லவே அல்ல!'' என்று கூறிய வைஷ்ணவ சரணரின் நாத்தழுதழுத்தது.

''ஆம், நீங்கள் அவதாரம் அல்ல. எந்தப் பராபர வஸ்து எல்லா அவதாரங்களையும் நிகழ்த்தியதோ அதுவே நீங்கள்'' என்று உணர்ச்சிக் கொந்தளிப்புடன் உரைத்தார் அவர்.

கௌரி காந்தர் வந்தார். 'பற்றுக்கோடு ஏதும் இல்லாத நான் ஆனைமுகன் அன்னையான உன்னையன்றி யாரை அடைக்கலம் புகுவேன்?' என்று தேவி அபராத க்ஷமாபண ஸ்துதியில் வரும் வாசகங்களை உரக்க மொழிந்தபடிதான் அவர் வாதம் புரிய விரும்பும் இடங்களில் பிரவேசிப்பது வழக்கம். அவரது சாதனையின் பலனுக அவர் இந்த மொழிகளைக் கூறியவுடன் ஒரு சக்தி கிளு

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிசோதனைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்முகத் துலக்குங்கள். இதன் வீரியமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் சேர்த்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிருர்கள்

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிருர்கள்.**

## உங்களுக்கும் ஒரு

# பிலிப்ஸ்

## ஸைக்கிள்

## அவசியம்

பளபளவென கண்ணைப் பறிக்கும் பிலிப்ஸ் ஸைக்கிள் உங்களைப் போன்ற இன்றைய சுறுசுறுப்புள்ள இளைஞர்களுக்காகவே பிரத்தியேகமாய்த் தயாரிக்கப்பட்டது. உயர்ந்த ரக எஃகினாலான இந்த ஸைக்கிள், உறுதியும், எவ்விதமான கரடு முரடான பணிகளைச் சமாளிக்கவல்ல சக்தியும் வாய்ந்தது. 70 வருட காலமாய் உலகெங்கும் புகழ் பெற்ற பிலிப்ஸ் ஸைக்கிள், டி. ஐ. ஸைக்கிள்ஸாரின் மிக்க நவீன இயந்திர வசதி கொண்ட தொழிற்சாலையில், உங்களுக்காக தயாரிக்கப்படுகிறது.




**PHILLIPS**

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ்

JWT-TIC-PH-2053a

நிறுத்து எழும். அவருடன் வாதிடுபவர் எவராலும் பேச முடியாமற் போகும். அவரே வெல்வார். ஆனால் தக்ஷிணேசுவரத்தில் அவர் பிரவேசிக்குப்போதோ, அவரினும் உரத்த குரலில் அவருடன் போட்டியிடுவது போல் ஓங்கி ஓங்கி ஒலித்த தொனியில், 'பற்றுக்கோடில்லாத எனக்கு, விநாயக ஜனனி, உன்னையன்றி யார் சரணம்?' என்ற சுலோகத்து அடியை ராமகிருஷ்ணர் மீண்டும் மீண்டும் கூவ, கௌரிகாந்தரால் தமது குரலை எழுப்பவே முடியாமல் போயிற்று. அன்றே, தம்மை விடப் பராசக்தியின் அநுக்கிரகத்துக்கு அதிகம் பாத்திரமான ஒரு புள்ளியிடம் தாம் வந்திருக்கிறோம் என்று அவருக்குப் புரிந்து விட்டது.

ஆக, பைரவி விரும்பிய அவை கூடுவதற்கு முன்பே பண்டிதர்கள் ராமகிருஷ்ணரின் பெருமையை அறிந்தனர்.

அவையும் கூடிற்று — ஆலயத்தின் சங்கீத மண்டபத்தில். அவதார விசேஷத்தை வெளிப்படுத்தப் போகிற பெருமிதமும், அதனைத் தான் உணரச் செய்த தனது சாதனைச் சிறப்பின் தெய்விகமும், குழந்தையின் பெருமையை மற்றவர்களுக்கு எடுத்துக் கூறுகிற தாயின் இனிமையும் சேர்ந்து பொலிந்தாள் பைரவி. வைஷ்ணவ, சாக்த கிரந்தங்களையெல்லாம் எடுத்துப் போட்டு அலசினாள்.

ராமகிருஷ்ணரின் அளப்பரிய தெய்வப் பிரேமை, இந்தக் கலியிலும் தெய்வ தரிசனம் பெற்ற அவரது ஆத்ம சுத்தம் இவற்றைக் கொண்டு அவரை ராதை, சைதன்யர் முதலிய பக்த மணிகளுடன் பைரவி ஒப்பிட்டாள். அவரது உள்ள நிலை மட்டுமின்றி உடலில் காண்கிற கொதிப்பு, அவ்வப்போது அவருக்கு எடுக்கிற நம்ப முடியாத பெரும் பசி இவையெல்லாம் கூட அவருடைய அமாநுஷ்ய சக்தியைக் காட்டுவதாகச் சொன்னாள். குருவின் துணையும் நூலின் துணையுமின்றித் தாமாகவே திவ்விய உன்னத அநுபவங்கள் வாய்க்கப் பெற்ற அவர் உலகுக்கு ஆன்மிகப் பெருமையை எடுத்துரைக்க வந்த அவதாரமே என்று ஐயம் திரிபற முழங்கினாள்.

பிறந்த நாளாகப் பரிசுத்தமும், சத்தியமும் நிறைந்திருந்தவர் ராமகிருஷ்ணர். பெண் ஆசையும், பொன் ஆசையும் இயல்பாகவே அவரிடம் சற்றும் இருக்கவில்லை. இவ்வாறு பிறந்ததிலிருந்து—அதாவது பிராயாசையின்றி—இயற்கையான உந்தல்கள் ஏற்படாமல் மானுடர் ஒருவர் எப்படி இருக்க முடியும்? 'ஒருவர் பிறவி எடுப்பதற்குக் காரணம் முற்பிறவியில் ஏதோ குறைபாடுகள் இருந்ததுதான்; குறைகளே இல்லாமல் வாழ்கிறவர்கள் வீடுபெறுவார்கள்' என்பது நம் நம்பிக்கை. எனவே பிறவி எடுக்கிறவர்களிடம் முந்தைய குறைபாட்டின் சாயல்கள் இருந்தே தீரும். இவற்றை வென்று அழியாப் பொருளில் அகத்தைப் பதித்தவர்கள் இங்கேயே முக்தி காணும் ஜீவன் முக்தர்கள். ராமகிருஷ்ணருக்கோ இவ்வாறு உள்ளக் குறைபாடுகளை அப்பியாசத்தினால் வெல்ல வேண்டிய அவசியமே யிருக்கவில்லை. எனவே அவர் பிறப்பு இறப்புக்கு ஆளாகும் சாமானிய மானுடர்களிலிருந்து வேறுபட்டவர்; ஜீவன்முக்தருக்கும் மேம்பட்டவர்; அவர் ஓர் அவதாரம் என்றே பைரவி பிராம்மணி நிர்த்தாரணம் செய்ய முயன்றாள்.



"அப்பாவுக்கு நான் பெயிலானது கூடக் கோபம் இல்லேடா! பழைய புஸ்தகமெல்லாம் செல்லாது, புஸ்தகம் மாறிப் போச்சு, புதுசா வாங்கணும்னு சொன்னதுதான் கோபம்!"

ராமகிருஷ்ணர் அவதாரம் என்று நிரூபிப்பதற்காகப் பைரவி பிராம்மணி புரிந்த முழுவாதமும் நமக்குத் தெரியவில்லை. ஆனாலும் அந்தப் பண்டிதர்கள் அவள் கூறியதை இறுதியில் ஒப்புக் கொண்டார்கள் என்பது 'லீலா பிரஸங்க'த்திலிருந்து தெரிகிறது.

நம் முன் தீபம் ஒன்று ஸ்வயம் பிரகாசமாகத் திகழும் போது அதற்கு ஒளியிருக்கிறது என்று வேறு யாரோ வாதப் பிரதிவாதத்தால் நிரூபிக்க வேண்டுமா?

"தாங்கள் அவதார புருஷர். தாங்கள் உலகைக் காக்க வந்த தெய்வ மனிதர்" என்று கூறிப் பண்டிதர்கள் ராமகிருஷ்ணரின் பாதம் பணிந்தனர்.

அவர் குழந்தையாகச் சிரித்தார்.

"நான் தெய்வமோ, இல்லையோ, அது எக்கேடு கெட்டுப் போகட்டும்.

என்னைப் பைத்தியம் இல்லை என்றீர்களே, அதுவே போதும்'' என்றார்.

தான் தெய்வமாக நினைத்த ராமகிருஷ்ணருக்கு ஆசாரியப் பதவி ஏற்று அவருக்குத் தாந்திரீக மார்க்கத்தில் பயிற்சி அளிக்கத்தொடங்கினாள்பைரவி. ஆனந்த பைரவியாகிய அகிலாண்டஜனனியின் சம்மதத்தோடு ராமகிருஷ்ணர் தந்திர சாதனையைப் பயிலத் தொடங்கினார்.

ஆலய நந்தவனத்தில் வடக்கேயுள்ள வில்வ மரத்தடியிலொன்றும், ராமகிருஷ்ணரின் தங்கக் கை வளர்த்த பஞ்சவடி அடியில் ஒன்றுமாக, தந்திரசாதனம் புரிய இரண்டு ஆசனங்கள் அமைத்தாள் பைரவி. யோகினி தந்திரத்தில் கூறியிருப்பது போல் ஒவ்வோரிடத்திலும் ஐந்து கபாலங்களைப் புதைத்து ஆசனங்கள் அமைத்தாள். எங்கிருந்துதான் அவள் உபகரணங்கள் தேடிக் கொண்டு வருவாளோ, ஆண்டவனும் அவளுடைய துணிவும்தான் அறியும்.

இரு இடங்களிலுமாகப் பல இரவுகளில் சாமானிய மக்களுக்கு அழகும், அற்புதமும், அச்சமும், அருவருப்பும் தரும் நானாவிதமான தந்திரங்களில் கதாதரருக்கு அப்பியாசமளித்தாள்.

ஒரு முறை சுருட்டி வைத்த காகிதம் மறுபடி பிரித்தாலும் தானாகச் சுருண்டு கொள்ளுமல்லவா? அதே போலத்தான் இயற்கையாகவே உயர் நிலைகளில் சுருண்டு புரண்ட கதாதரரின் உள்ளத்தை ஜீவ பாவத்துக்குக் கொண்டு வந்து சமன்படுத்தி சாஸ்திர முறையில் சுதந்திரமாக விடும் போது அவை பழைய உயர்நிலைகளுக்குச் சுருண்டன. மீன் குஞ்சுக்கு நீச்சல் பயிற்சி நடைபெற்றது.

ஜபம் செய்ய முற்பட்டவுடனேயே ஜபத்தின் லட்சியத்தில் ராமகிருஷ்ணரின் உள்ளம் பதிந்து விடும். மூலாதாரத்தில் மூண்டெழு கனலாகியகுண்டலினி சக்தியை எழுப்புவதற்கு அப்பியாசம் தொடங்கியவுடனேயே அது சிரஸில் ஸஹஸ்ராரத்துக்குக் குறுகுறுவென்று ஒரே பாய்ச்சலில் பாய்ந்துவிடும்; சிவப் பொருளில் ஊறி விடுவார் அவர்.

இன்ப நுகர்ச்சியில் மனசு ஈடுபட்டு விடுமோ என்று பயந்து அவற்றை விலக்கிச்செய்யும் பசுபாவ சாதனைகள், அதன் பின் புலனின்பத்தில் மனசைச் செலுத்தும் சூழலிலேயே அதை அடக்கி ஆளும் வீரபாவ சாதனைகள் இவற்றில் தேர்ந்து திவ்ய பாவத்தில் ஈடுபட்டார் ராமகிருஷ்ணர். தேவர்களும் மயங்கக் கூடிய சபலங்களை அப்போது தேவி அவருக்கு ஏற்படுத்த, அவற்றையும் வென்றார்.

புலன் இன்பத்தைப் பூரணமாக வென்ற புனிதத்துடன் அந்தப் புனிதத்தைப் பகிரங்கமான ஒரு சபையில் மானுடப் பெண் ஒருத்திக்குச் செய்த பூஜையில் வெளிப்படுத்தி, களங்கம் என்பதே தீண்டாமல் மானுடன் எவ்வளவு தெய்விகமாக வாழ முடியும் என்பதை மற்றவர்களுக்கும் எடுத்துக் காட்டினார் ராமகிருஷ்ணர்.

புறச் சடங்குகளாலும், அக உணர்வுகளாலும் அறுபத்து நாலு தந்திரங்களையும் அணுவும் பிறழாது அநுஷ்டித்து விட்ட ராமகிருஷ்ணரைக் கொண்டு பூர்ணாபிஷேகம் நிகழ்த்தினாள் பைரவி.

பரம்பொருளிலிருந்து நம்மைப் பிரிக்கும் தடைகளாக எவையுள்ளனவோ அவற்றை யெல்லாமே பரம்பொருளை அடையச் சாதனமாக்கிக் கொள்ளும் தந்திர சாஸ்திரங்களின் சத்தியத்தை ராமகிருஷ்ணர் நிரூபித்து விட்டார்!

இச்சமயத்தில் தமக்கு நேர்ந்த அற்புத அநுபவங்கள் சிலவற்றைப் பிற்காலத்தில் அவர் தமது சீடர்களுக்குக் கூறியதுண்டு.

உலகம் முழுவதையும் அம்பிகையின் ஸ்வரூபமாகக் காணத் தொடங்கி விட்டார் கதாதரர். நரிகளும் நாய்களும் தின்ற உணவின் மீதியைப் பிரசாதமாகப் புசித்தார். அசங்கியமான வார்த்தைகளைக் கேட்க நேர்ந்தாலும் தேவியின் வடிவாகிய அக்ஷ மாலையாக அவற்றைக் காணும் பக்குவம் பெற்றார்.

அம்பிகையின் பாதங்களில் நீர் வார்க்கும் போது தமது உடல், உள்ளம் இரண்டிலும் ஞானக்கினி பிரகாசிப்பதைப் பிரத்தியக்ஷமாகக் கண்டார். அறிவுக்கனலானார்!

குண்டலினி என்கிற பிராண சக்தி உறங்குகிற மூலாதாரத்திலிருந்து, ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா, ஸஹஸ்ராரம் வரையுள்ள கமலங்களெல்லாம் நன்றாக மலர்ந்து திறந்து கொண்டதாகக் கண்டார். பிராண சக்தி இவை ஒவ்வொன்றின் வழியாகவும் ஏறும் போது நவ நவமான காட்சிகளையும் அநுபவங்களையும் பெற்றார்.

ஆதிகாரணமாகிற ஒளி முக்கோணம் ஒன்றிலிருந்து உலகங்களெல்லாம் தோன்றுவதைக் கண்டார்.

விஞ்ஞானப்படி அதிர்வு அல்லது உரசலினால் ஏற்படாத சப்தமாக, இதய கமலத்தில் ஒலிக்கும் நாதப் பிரம்மமான அநாஹத த்வனியைக் கேட்டார். இச்சமயத்தில் மிருகங்கள், பட்சிகள் இவற்றின் ஒலியெல்லாம் கூட அவருக்கு அர்த்தமாயின.

தாம் அணுமாத்திரமாகக் கூட ஆகும் ஆற்றலை இச் சமயத்தில் அவர் பெற்றார். தமக்குச் சர்வ சித்திகளும் லபித்து விட்டன என்பதை உணர்ந்தார். ஆனந்தித்து விளையாட்டு விளையாடித் தமது ஆத்மிகத்தை விரயம் செய்யக் கூடாது என்று தெளிந்து, நிர்மல உள்ளத்துடன் தேவியைத் தியானித்தார். தாம் 'ஜலம் மேல் நடக்கலாம்; கனல்மேல் இருக்கலாம்' என்று அறிந்த அதே சமயத்தில் இவ்வாறெல்லாம் செய்யாமல் 'சிந்தையை அடக்கியே சும்மாயிருக்க' வேண்டும் என்ற ஞானத்தையும் பெற்றார்.

கங்கையிலிருந்து மாயையாகிய தேவி லாவண்ய உருவில் தோன்றி அழகுக் குழவி ஒன்றை ஈன்றெடுத்து அன்புசெய்வதையும், பிறகு கோர உருத் தரித்து அதே குழந்தையைப் புசிப்பதையும் கண்டார். காண்கிற உலகின் அழகுகள், அவலட்சணங்கள் இரண்டுமே புன்மையானவை என்பதை விளங்கிக் கொண்டார்.

இச்சமயத்தில் தேவி அவருக்கு எத்தனை எத்தனை திவ்ய வடிவங்களில்தான் தரிசனம் தந்தாள் என்று சொல்ல முடியாது. அவற்றுக்கெல்லாம் சிகரமாக, கரும்பு வில்லும், மலர்ப் பாணமும், பாச அங்குசமும் தரித்து மாதுளம் பூ வண்ணத்தில் சந்திர சேகரியாக விளங்கும் ஷோடசியைத் தாம் கண்டதாக உணர்ச்சியுடன் கூறுவார் ராமகிருஷ்ணர். சாந்தி நிறைந்த ஷோடசியின் சௌந்தரிய காந்தி அப்படியே கனிந்துருகி நாற் திசையிலும் பரவி ஒளி காந்தியதாகக் கூறியிருக்கிறார். அழகுப் பண்டமும், அமுதப் பாண்டமும், அன்புப் பிண்டமுமான இந்த ஷோடசியைத்தான் நாம் ராஜராஜேச்வரி யென்றும், மஹா திரிபுர சுந்தரி யென்றும், காமாக்ஷி என்றும், காமகோடி என்றும் ஏத்திப் பணிகிறோம்.

அநுபவங்கள் அவரது உள்ளத்தை மட்டும் துலக்காமல் உடலையும் ஒளி மயமாக்கின. பேரழகு கொழித்தது அவரது திருமேனியில். "தாயே, எனக்கேனடி இந்த உடலழகு? இந்த அழகை எடுத்துக் கொள்" என்று பவதாரிணியிடம் அலறினார் ராமகிருஷ்ணர். பிற்பாடு அந்த எழிலை தேவி குறைத்ததாகவும் குருமஹராஜ் கூறியதுண்டு.

இப்படி யெல்லாம் தெய்வாநுபவங்களைப் பெற்று, தெய்வம் என்றே போற்றப் பெற்றும் ராமகிருஷ்ணர் சிறிதேனும் உயர்வு உணர்வு இன்றிப் பச்சைப் பிள்ளையாகவே வாழ்ந்தார்.

அந்தச் சமயத்தில் பச்சை நிறத்துப் பிள்ளையாகிய ராம லாலா அவரைத் தேடி வந்தான்.



"எண்பது மைல் வேகத்தில் கார் ஓட்டியதற்காக உனக்கு ஐம்பது ரூபாய் அபராதம் விதிக்கிறேன்."

"நல்லதா போச்சுங்க எஜமான்! எண்பது ரூபாய் பந்தயம் கட்டி கார் ஓட்டி ஜெயிச்சேனுங்க! அப்படியும் அபராதம் போனால் முப்பது ரூவா லாபம் ஆச்சுதுங்களே!!"

ராமவத் சம்பிரதாயத்தைப் பின்பற்றும் ராம பக்தரான ஜடாதாரி தக்ஷிணேச்வரம் வந்தபோது அவர் பூஜித்த ராமலாலாப் பிரதிமையாகப் பச்சை நிறத்துப் பிள்ளை வந்தான். ராமகிருஷ்ணரின் பண்பட்ட அகத்தில் மலர்ந்த ரோஜாவாக வந்தான் அந்த ராஜாப் பையன்.

ரோஜாவேதான்! வண்ணம், மணம், மென்மை மூன்றிலும் மேன்மையான மலரை வழங்கும் ரோஜாச் செடியில் முட்களும் இருக்கின்றன அல்லவா? அதேபோல ஆனந்தாநுபவம் அளித்த பாலராமன் ராமகிருஷ்ணரைப் படாத பாடும் படுத்தி வைத்தான்.

ரோஜாவில் ஏன் முள் இருக்கிறது? மலரின் அழகைக் கவனியாதவரைக் குத்தித் தன்னிடம் இழுத்து, 'இதோ என்னைப் பார்' என்று சொல்வதற்காகத்தான். அதேபோல், தான் படுத்தி வைத்த பாட்டினாலேயே ராமகிருஷ்ணரைத் தன்பாற் படுத்திக் கொண்டான் லாலாராமன். ராமகிருஷ்ணர் எப்படி தேவியிடம் குழந்தையாக இருந்து அழுதும், சிரித்தும், சினந்தும், அடம் பண்ணியும் அவள் அன்பை வலியப் பெற்றாரோ அப்படியே இவர் அன்பைப் பெற வந்தான் அயோத்தியின் அரசிளங் குமரன்.

(தொடரும்)



சிவகாமியம்மா! நீங்கள் கூறப் போகும் ஒவ்வொரு விஷயமும் எங்களுக்கு மிக முக்கியமானது. இந்த அறையை நீதி மன்றமாக நினைத்துக் கொண்டு எங்களுக்கு நீங்கள் பதில் சொல்ல வேண்டும்.
அப்படியே ஆகட்டும்.




தனபால் வீட்டின் ஓர் அறையிலிருந்தபடி துரைசாமியும் ரகுநாதனும் பேசியதைக் கேட்டீர்கள். அதாவது கேட்கும்படி ஓர் ஏற்பாட்டைச் செய்திருந்தான் தனபால், இல்லையா? ஆனால் அவ்விருவரையும் நீங்கள் பார்க்கவில்லை.
தனபாலின் வீட்டை நோக்கி ரகுநாதன் வருவதைப் பார்த்தேன். துரைசாமி ரகுவிற்காக முன் ஹாலில் முன்னதாகவே வந்து காத்திருப்பதாகத் தனபால் கூறினான்.




நீங்கள் இருந்த அறையிலிருந்து ஒரு ஹாலுக்குச் செல்லலாம். அதே போல வேறு ஏதாவது அறைகளுடன் நீங்கள் இருந்த அறைக்குத் தொடர்பு இருந்ததா?
இல்லை.. என் அறையிலிருந்து முன் ஹாலுக்குச் செல்ல ஒரு வழியும் பின் பக்கம் செல்ல ஒரு வழியும் தான்.




முன் ஹாலை அடுத்து ஏதாவது அறைகள் இருக்கின்றனவா?
இல்லை... ஹாலுக்கு வெளியே வாசல். வாசலின் இருபக்கத்திலும் இரு அறைகள் இருந்ததாக ஞாபகம்...




ஒலி பெருக்கி மூலம் இருவரின் சம்பாஷணையைக் கேட்டீர்கள். அதில் ஒன்று ரகுநாதனுடைய குரல் தானா?
அன்றைக்கிருந்த மன நிலையில் அது ரகுவின் குரல் என்றே நம்பினேன். ஆனா...

தவிர...? தயங்காமல் சொல்லுங்கள்...

இருபத்தைந்து வருஷங்களாகி விட்டாலும் சற்று முன்பே கேட்டது போல அது என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அது ரகுவினுடையது போலவே தான்...

ரகுவினுடையது போல இருந்தது. ஆனால் ரகுவினுடையது இல்லை, அப்படித்தானே?

ஒலிபெருக்கி, டெலிபோன் இவைகளில் வரும் போது சிலரது குரல் மாறிக் கேட்பதில்லையா! ரகுவின் குரலும் அப்படி....

அது இருக்கட்டும். உங்களைத் தனியே விட்டுவிட்டுத் தனபால் ஹாலுக்குச் சென்றதும் முதலில் நீங்கள் ஒலிபெருக்கியில் கேட்ட ஒலி என்ன?

கொஞ்ச நேரம் எந்த ஒலியுமில்லை. அதன் பிறகு ஹால் கதவை மூடும் ஒலியும் பிறகு பேச்சும்...

காத்திருக்கும் துரைசாமியைச் சந்திக்க ரகுநாதனே ஹாலுக்குள் அழைத்து வந்து கதவை மூடிவிட்டுப் பேச்சை ஆரம்பித்திருக்க வேண்டும்.

அப்படிச் சிவகாமி நம்ப வேண்டும் என்பதே தனபாலின் திட்டம்.

அப்படியென்றால்?

துரைசாமி, ரகுநாதன் இவர்களின் சம்பாஷணை முடிந்து அவர்களை அனுப்பி விட்டுத் தானே தனபால் மறுபடி உங்களிடம் வந்தான்?

ஆமாம்

சரி, நீங்கள் அங்கிருந்து வெளியேறும் போது ஹாலைப் பார்த்தீர்களா?

பார்த்தேன். கூடத்திலே ஏற வாசல் பக்க ரிலைத்து தனபாலின் செல்லும்படி கொண்

அப்படி ஒரு பட்டது. மாடிச் சுவ ரினைத் புறமாகவே கேட்கச் டான். அப்போது ஹால் பக்கம் என் பார்வை சென்றது.

அப்போது ஹால் கதவு சாத்திய நிலையில் இருந்தது?

சாத்தப் பட்டுத் தான் இருந்தது.

துரைசாமி ரகுநாதன் சம்பாஷணையின் முடிவுக்குப் பிறகு கதவு திறக்கப்பட்டு மூடப்படும் ஒலியை நீங்கள் கேட்கவில்லையா?

இல்லை...! முறைப்படி அவர்கள் வெளியே செல்லக் கதவைத் திறந்த ஒலியையும் பிறகு மூடியதையும் நான் கேட்டிருக்க வேண்டுமே!

அப்படியொரு செயல் நடந்திருந்தால் தானே நீங்கள் கேட்டிருப்பதற்கு!

# உங்கள் கேசத்தை அழகுபடுத்த நிரூபணமான பாமாலிவ் வழி






## பாமாலிவ் பெர்ஃப்யூம்டு கோகோனட் ஹேர் ஆயில்...

உங்கள் கேசத்திற்கு போஷாக்கு அளிக்கிறது. பாமாலிவ் உபயோகிப்பதால் நீண்ட, செழிப்பான கேசம் இயற்கையாக வளருகிறது. ரோஜா, லவண்டர் அல்லது மல்லிகை—இம்மூன்று வசீகரிக்கும் சுகந்தங்களில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளுங்கள்.




## பாமாலிவ் கோகோனட் ஆயில் ஷாம்பு...

உயர்தரமான தேங்காய் எண்ணெய்யுடன் தனிப்பட்டு தயாரிக்கப்பட்ட பிரசித்தி பெற்ற கலவை. இது அழகுற சுத்தம் செய்யும் ஷாம்பு என்பதுடன், ஒரு கூந்தல் அழகு சாதனமும் ஆகும். பாமாலிவ்வின் செழிப்பான நுரை கூந்தலுக்கு கட்டுத்தைக் கொடுப்பதுடன் உங்கள் தலையையும் கூந்தலையும் தூய்தாக்கி பரிமள புத்துயிரூட்டுவதனால், புதிய ஆரோக்கியமான கேச வளர்ச்சி ஏற்படுகிறது.

**நவநாகரீக இந்தியப் பெண்டிர் கூந்தல் அழகிற்கு விரும்பியெடுப்பது பாமாலிவ்**

PCH-5.6-TAM.



சிறுவர் விருந்து

# வாத்து மேய்த்த ராஜகுமாரி





அந்தத் தேசத்தின் ராஜா இறந்து போய்ச் சில வருஷங்களாகி விட்டதால் ராணியே நாட்டை ஆண்டு வந்தாள். அவளுக்கு ஒரு பெண். அழகின் அவதாரமாக இருந்தாள் அவள். இளவரசி சிறு குழந்தையாக இருக்கும் போதே அடுத்த தேசத்து அரசர் அவளைத் தம் மகனுக்கு மணம் செய்து கொள்ளுவதாக வாக்களித்திருந்தார். ஆகவே இளவரசி மணப் பருவத்தை அடைந்ததும் அந்த நாட்டு வழக்கப்படி, அவளை மணக்க இருக்கும் ராஜகுமாரனின் ராஜ்யத்துக்கு இளவரசியை அனுப்பி வைக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலானாள் ராணி. மகளுக்கு வழித்துணையாக ஒரு வேலைக்காரியை அனுப்பி வைத்தாள். இளவரசியின் குதிரை மிக உயர்ந்த ஜாதிக் குதிரை. அதனால் பேசவும் முடியும். அதன் பெயர் 'பலாடா'.

இளவரசியை வழியனுப்பக் கோட்டை வாசல் வரை வந்த ராணி தனது கருள் குழலிலிருந்து ஒரு கற்றையைக் கத்திரித்துத் தன் மகளிடம் கொடுத்து, ''இதை என் நினைவாக வைத்துக் கொள். இது உன்னிடம் இருக்கும் வரை உன்னை எந்தத் துன்பமும் அணுகாது'' என்று சொல்லி அனுப்பினாள்.

இளவரசி வேலைக்காரி பின்தொடரப் பிரயாணத்தைத் தொடங்கினாள். ஒரு நாள் வெயில் ரொம்பக் கடுமையாக இருந்ததால் இளவரசிக்கு தாகம் எடுத்தது. தூரத்தில் ஒரு நதியைக் கண்ட இளவரசி தனது வேலைக்காரியிடம் தன் தாகத்துக்குத் தண்ணீர் கொண்டு வரும்படி கேட்டாள். ''நான் உன் வேலைக்காரியல்ல. வேண்டுமானால் இறங்கிப் போய்க் குடித்து விட்டு வா'' என்று பதில் கிடைத்தது.

அடுத்த ராஜ்யத்து மக்கள் போலி இளவரசியைக் குதூகலமாக வரவேற்றனர்.

அரசரது கவனத்தைப் பணிப் பெண் உடையிலிருந்த உண்மை இளவரசியின் தோற்றம் கவர்ந்தது. போலி இளவரசியிடம் அவளைச் சுட்டிக் காட்டி, ''அது யார்?'' என்று கேட்டார்.

''வழித் துணைக்கு என்னோடு அழைத்து வந்த பணிப் பெண் அவள். சோம்பேறியாக இல்லாதிருக்க அவளுக்கு வேலை கொடுங்கள்'' என்றாள் அந்தக் கொடியவள். அரசர் அவளை அரண்மனை வாத்துக்களை மேய்க்கும் இளைஞனுக்கு உதவியாக இருக்கும்படி சொன்னார்.

இளவரசியாக நடிக்கும் வேலைக்காரி தான் மணக்க இருக்கும் இளவரசனிடம், ''எனக்காக ஓர் உதவி செய்வீர்களா? உங்கள் வீரர்களிடம் சொல்லி நான் ஏறி வந்த குதிரையைக் கொன்று விடச் செய்யுங்கள். அதற்கு ஏதோ நோய். வழியெல்லாம் ரொம்பக் கஷ்டப்பட்டது'' என்றாள். உண்மை அதுவல்ல; பேசும் திறமை படைத்த அந்தக் குதிரை உண்மையைச் சொல்லி விட்டால் என்ன செய்வது என்ற பயம்தான் அவளுடைய இந்த ஏற்பாட்டுக்குக் காரணம். அவள் விருப்பப்படியே 'பாலாடா' கொல்லப்பட்டது. நடந்ததை அறிந்தபோது உண்மை இளவரசி துடித்துப் போனாள். தன் அருமைக் குதிரையின் தலையை நகரின் கோடியிலுள்ள ஒரு கோட்டை வாசலின் கதவின் இருண்ட பகுதியில் ஆணி அடித்துப் பொருத்தி வைக்கும்படி கொலையாளிகளிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டை போட்டுக் கொண்டு விடுவேன்'' என்றாள். அவள் விருப்பப்படியே நடந்தது. வாத்து மேய்ப்பவனுக்கு ஆத்திரமாக வந்தது.

மறு நாளும் இதே போல நடந்தது. இதனால் ஆத்திரம் அடைந்த அவன் மன்னரிடம் சென்று ''அந்தப் பெண் எனக்கு உதவியாக வரவேண்டாம்'' என்றான். மன்னர் காரணம் கேட்டபோது அவன், இளவரசி குதிரைத் தலையிடம் சென்று கண்ணீர் வடிப்பதையும், அது இவளுக்குப் பதில் சொல்லுவதையும், இவளது தலை முடியின் அழகையும், அதை அவிழ்ந்து விளையாடத் தான் விரும்பும்போது அவள் காற்றைக் கூப்பிட்டுத் தன்னை ஓட்டுவதையும் விவரித்தான். அதைக் கேட்ட மன்னர் வியப்படைந்தார். மறு நாள் அவனை வழக்கப்படி அவளுடன் செல்லும்படி சொன்னார். அவர்கள் வருமுன் தான் அந்தக் கோட்டைக் கதவின் அருகில் ஒரு மறைவிடத்தில் ஒளிந்து கொண்டார். எல்லாம் காட்டின் சொன்னபடியே நடந்ததைக் கண்ட அரசர் அரண்மனைக்குத் திரும்பினார்.

அவருக்கு எல்லா விஷயங்களும் புரிந்து விட்டன. தன் மகனைக் கூப்பிட்டனுப்பினார். அவன் யாருடன் பழகுகிறானோ அவள் வெறும் பணிப் பெண்தான் என்றும், உண்மை ராஜகுமாரி யார் என்பதையும் விளக்கினார்.

மறு நாள் அரண்மனையில் ஒரு பெரிய விருந்து. மணமகனை இளவரசனின் வலப்புறம் உண்மை இளவரசியும் இடப்புறம் போலி அரசகுமாரியும் அமர்ந்திருந்தனர். நன்கு அலங்கரித்துக் கொண்டிருந்த அரசகுமாரியை அந்த வேஷதாரியான கொடிய வேலைக்காரியால் கூட அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை.

இளவரசியினுல் தாகத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. குதிரையிலிருந்து இறங்கிச் சென்று நதிக் கரையில் குனிந்து தண்ணீர் குடிக்க லானுள். அப்போது அவளுக்குப் பாதுகாப் பாகத் தாயார் கொடுத்த குழந்தைறை ஆற்று நீரில் விழுந்து அடித்துக் கொண்டு போய் விட்டது. இதைப் பார்த்துக் கொண்டிருந்தாள் அந்த வேலைக்காரி. இப்படி ஒரு சந்தர்ப்பத்தைத் தான் அவள் எதிர்பார்த்திருந்தாள். இனி இள வரசிக்கு எந்த விதப் பாதுகாப்பும் கிடையாது என்பதைப் புரிந்து கொண்டாள் அவள்.

இளவரசி திரும்பி வந்தபோது தன்னுடைய குதிரையான 'பாலாடா'வில் அந்த வேலைக்காரி ஒய்யாரமாக உட்கார்ந்திருப்பதைக் கண்டு திகைத்தாள். "இனி என் குதிரையில்தான் நீ வர வேண்டும்" என்ருள் வேலைக்காரி. அது மட்டுமல்ல; இளவரசியின் உடைகளைத் தான் அணிந்து கொண்டு தன் உடைகளை இளவரசிக் குக் கொடுத்துக் கட்டாயப்படுத்தி அணிந்து கொள்ளச் செய்தாள். உண்மையைச் சொன்னுல் அவளைக் கொன்று விடுவதாக வேறு பயமுறுத்தி ளுள் அந்தக் கொடிய வேலைக் காரி. ஆனுல் நடந்த அவ்வளவையும் குதிரை 'பாலாடா' பார்த்துக் கொண்டிருந்தது.

டுக் கொண்டாள். அவர்களும் அவள் விருப்பப் படியே செய்தார்கள்.

மறு நாள் வாத்துக்களை ஓட்டிச் செல்லும் போது குதிரைத் தலையின் அருகில் வந்து அதைத் தடவிக் கொடுத்துக் கண்ணீர் வடித்தாள்.

"எனக்காகக் கண்ணீர் விடுகிருயே இளவரசி! உன் நிலையை உன் தாயார் அறிந்தால் அவள் உள்ளமே வெடித்து விடுமே" என்றது குதிரை. கண்ணீரைத் துடைத்துக் கொண்டு தன் தலை விதியை எண்ணி மனம் நொந்தபடி வாத்து மேய்க்கச் சென்ருள் இளவரசி. வாத்துக்களை நீரில் விரட்டி விட்டு அழகிய நீரோடையின் கரை யில் போய் அமர்ந்து கொண்டாள் அரசகுமாரி. தனது தலை மயிரை அவிழ்த்து விட்டுக் கோத லானுள். அவள் கருங்குழலைக் கண்ட வாத்து மேய்க்கும் வாலிபன் பிரமித்தான். அந்த அழகிய கூந்தலைத் தொட்டு விளையாடி மகிழ எண்ணி ளுன். அதற்காக அவளை நோக்கி ஓடி வர லானுன். அவன் எண்ணத்தை அறிந்த இள வரசி, "காற்றே! காற்றே! பலமாக வீசமாட் டாயா? கர்ட்டின்னின் தொப்பி பறந்து போகும் படி வீசு. தன் தொப்பிக்காக அவன் அதைத் தொடர்ந்து ஓடுவான். அதற் குள் நான் என் தலைமயிரைச் சீவி முடிந்து சிங்காரித்துக்

கோலாகலமான விருந்துக்குப் பிறகு அரசர் இளவரசியின் கதையை அப்படியே விருந்தினர் களுக்குக் கூறினுர். தம் சிறு வயதில் தான் எப்போதோ கேட்ட ஒரு கதையைப் போல் அவர் அதைக் கூறினுர். கதையை முடித்த அரசர் போலி அரசகுமாரியிடம் "இத்தகைய ஒருத்திக்கு என்ன தண்டனை கொடுக்கலாம்?" என்று கேட்டார். தன்னை மறந்த நிலையில் அந்தக் கொடியவளும், "அவளை மரப் பீப் பாய்க்குள் வைத்துக் கூரான நீண்ட ஆணிகளை அதைச் சுற்றி அடித்து அதை இரண்டு முரட்டுக் குதிரைகளைக் கொண்டு அவள் சாகும் வரை வீதிகளில் இழுத்துச் செல்லும்படி விரட்டி ஓட்ட வேண்டும்" என்ருள்.

"அப்படியே செய்வோம். இந்தத் தண்டனை உன் செய்கைக்கு ஏற்றதுதான். உன் குற்றத் துக்குத் தண்டனையை நீயே கூறி விட்டாய்" என்று அவள் வேஷத்தை விளக்கினுர் அரசர்.

பிறகு என்ன? உண்மை இளவரசி இளவர சனை மணந்து கொண்டு நீண்ட காலம் சந் தோஷமாக வாழ்ந்து வந்தாள்.

(க்ரிம் சகோதரர்களின் தேவ தைக் கதைகளின் தொகுப்பிலுள்ள 'கூஸ் கர்ல்' என்ற கதையை யொட்டி எழுதப்பட்டது இது.)



# இவற்றில் சரியான ஹமாம் சித்திரம் எது?



சுலபமான இந்த **ஹமாம்** போட்டி மாபெரும் ரொக்கப் பரிசுகளாக அளிக்கப்போகும் தொகை,

# ரூ. 25,000

**நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் இவ்வளவே!**

மேலே இலக்கமிடப்பட்ட ஹமாம் படங்கள் உள்ளன. யாவுமே ஒன்றுபோல் தோன்றலாம். ஆனால் இவற்றுள் ஒன்றுதான் சரியானது. வெள்ளைத் தாள் ஒன்றில் முத்து முத்தான எழுத்துக்களில் நீங்கள் எழுதவேண்டியவை :

(அ) சரியான ஹமாம் படத்தின் எண்.

(ஆ) 10 வார்த்தைகளுக்குள் அடங்கும்படியாக ஒரு விளம்பர வாக்கியம் (ஸ்லோகன்) கீழேயுள்ள மொழிகள் ஏதேனும் ஒன்றில் உங்கள் வாக்கியம் அமையலாம்:
ஆங்கிலம், ஹிந்தி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

(இ) உங்கள் பெயரும் முழு விலாசமும்.

**ஒவ்வொரு மொழிக்குமான பரிசுகள்:**

ஒவ்வொரு மொழிக்கும் 3 முக்கிய பரிசுகளும், 20 பரிவுப் பரிசுகளும் உண்டு.

**முதல் பரிசு ரூ. 2000/- இரண்டாவது பரிசு ரூ. 1000/- மூன்றாவது பரிசு ரூ. 500/-** மற்றும் ஒவ்வொன்றும் ரூ. 50/- பெறும் 20 பரிவுப் பரிசுகள்.

(பெரிய சைஸ்) ஹமாம் மேலுறைகள் இரண்டுடன் உங்கள் கூப்பன்களை அனுப்பவேண்டிய விலாசம்: ஹமாம் கன்டெஸ்ட் C/o டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட், ஆர்மி & நேவி பில்டிங், மகாத்மா காந்தி ரோட், பம்பாய்-1. ஒருவரே எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஆனால் ஒவ்வொரு கூப்பனுடனும் (பெரிய சைஸ்) ஹமாம் மேலுறைகள் இரண்டு அனுப்பியாகவேண்டும். சரியான ஹமாம் படத் தேர்வு, மற்றும் தனித்தனியே ஒவ்வொரு மொழியிலும் வரும் விளம்பர வாக்கியங்களின் சுயத் தன்மை ஆகியவற்றைக்கொண்டே போட்டிக்கூப்பன்கள் பரிசீலிக்கப்படும்.

**போட்டியின் முடிவு தேதி: 15, ஜூலை, 1963.**

ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் சரியான விடை எழுதினால், பரிசுத் தொகை சமமாகப் பங்கிடப்படும். நீதிபதிகளின் தீர்ப்பே முடிவானது. தீர்ப்பு சம்பந்தமாக கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ளப்படமாட்டாது.

பரிசு பெற்றவர்களின் பெயர்கள் 15, செப்டம்பர், 1963 பத்திரிகைகளில் அறிவிக்கப்படும்.

கவனிக்க: டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி, அதன் வினியோகஸ்தர்கள் அல்லது விளம்பர ஏஜெண்டுகளான போமாஸ் லிமிடெட் ஆகியவற்றின் ஊழியர்களுக்கோ அவர்களின் உறவினர்களுக்கோ இப்போட்டியில் கலந்துகொள்ள உரிமை கிடையாது.

**மறவாதீர் — ஒவ்வொரு மொழிக்கும் தனித்தனியே பரிசுகள் உண்டு!**

# சேவா ஸதனம்

"மகான் திருவள்ளுவர் கருதியது போல, சாதாரணமான குரலை உடைய குழந்தையின் மழலையே அந்தக் குழந்தையைப் பெற்றோர்களுக்கு யாழையும் குழலையும் விட இனியதாகத்தானிருக்கும். வீணையைக் காட்டிலும் இனிய குரலை ஒரு குழந்தை உண்மையிலேயே இறைவன் அருளால் பெற்றிருக்குமானால், அந்தக் குழந்தையின் மழலையும் மழலைச் சொல்லுடன் கலந்து வரும் குரலிசையும் அக்குழந்தையின் அன்னைக்கு எவ்வளவு ஆனந்தத்தை அளிக்கும்? அதிலும் அந்த மாதரசி வீணை வாத்தியத்தை நன்கு பயின்று நாதோபாசனை செய்து வந்தவரானால் அவர் எத்தகைய பாக்கியத்தைச் செய்த புண்ணியவதியாவார்?

அத்தகைய பாக்கியசாலியான அன்னை இன்று அகில இந்தியாவிலும் புகழ் பெற்று விளங்கும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களைப் பெற்றெடுத்துச் சங்கீத உலகத்துக்கு வழங்கிய பெருமை வாய்ந்த வீணை சண்முக வடிவு அம்மாள்தான்."

இவ்வாறாகக் கல்கி அவர்கள் முன்பொரு முறை எழுதினார்கள். ஆனால் இன்றைக்குக் கல்கி அவர்கள் நினைத்ததற்கும் மேலாக ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் புகழ் அகில இந்தியாவில் மட்டுமல்ல; அகில உலகுக்குமே பரவியிருக்கிறது. வருகிற ஆகஸ்டு மாதத்தில் இங்கிலாந்தில் அரச வம்சத்தினரின் ஆதரவுடன் எடின்பரோ நகரில் நடைபெறவிருக்கிற சங்கீத விழாவில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களும் கலந்து கொண்டு அந்த அகில உலக சங்கீத அரங்கிலே பாரத நாட்டின் தொன்மையான கலைச் செல்வத்தைச் சகலரும் உணரச் செய்யப்போகிறார்கள்.

இப்படி அவர் பெரும் புகழும் பெறுவதற்கு உறுதுணையாக இருந்தவர்கள் அவரது அன்னை வீணை சண்முகவடிவு அம்மாளும் கணவர் ஸ்ரீ சதாசிவம் அவர்களும் தான். அன்னை சண்முகவடிவு அம்மாள், பத்து வயது பூர்த்தியாகாத தமது மகளைத் தம்முடன் கச்சேரி மேடைகளில் அமர்ந்து பாடும்படி செய்து அதன் மூலம் தமது வீணை வாத்தியத்தின் நாதம் இனிதா அல்லது குழந்தை சுப்புலக்ஷ்மியின் குரலிலிருந்து பெருகியஇசை வெள்ளம் அதிக மதுரமானதா? என்று சங்கீத ரசிகர்கள் சர்ச்சையில் ஈடுபடும்படி செய்தார். பின்னர் ஸ்ரீ சதாசிவம் அவர்களைத் தமது கணவராகப் பெற்றதிலிருந்து ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் தொண்டு இசை உலகுடன் மட்டும் நின்றுவிடாது, அந்த இசையின் மூலமாகவே பல திக்குகளிலும் வியாபித்தது. நன்கொடைக் கச்சேரிகளின் மூலம் எத்தனை நல்ல காரியங்களுக்கு அவர் உதவியிருக்கிறார் என்பதைக் கணக்கெடுத்தோமானால் அதுவே இந்த வாரக் கல்கி இதழ் முழுவதையும் நிரப்பிவிடும்.

பாலயோகினி படத்தின் வெற்றி அளித்த தெம்புடன் புதிய படமெடுப்பது பற்றிச் சிந்திக்கத் தொடங்கிய டைரக்டர் கே. சுப்பிர





மணியம், தமது நண்பர் ஆர். பார்த்தசாரதி அவர்களையும் (தற்போது அகில இந்திய காதி கமிஷன் டைரக்டர்) அழைத்துக்கொண்டு ஸ்ரீ சதாசிவம் தம்பதிகளைக் காண வந்தார். தமது அடுத்த படத்தில் ஸ்ரீமதி எம். எஸ். நடிக்க வேண்டும் என்று டைரக்டர் ஸ்ரீ சுப்பிரமணியம் விரும்புகிறார் என்பதைப் புரிந்துகொண்ட ஸ்ரீ சதாசிவம் சற்றும் தயங்காமல் அதற்குச் சம்மதமளித்தார்.

தமது பத்தாவது வயதிலேயே 'மரகத வடிவு' என்ற செஞ்சுருட்டி ராகப் பாடலை ஆறு கட்டைச் சுருதியில் இசைத்தட்டில் பதிவாக்கி அதன் மூலம் தமிழ் நாடெங்கும் பிரசித்தி பெற்ற ஸ்ரீமதி எம். எஸ். அதற்குப் பத்து வருஷங்களுக்குப் பிறகு முதல் முதலாகச்



சேவாஸதனம் படத்தில் சிறப்பாக நடித்து, தமிழ்நாட்டில் தம் கீர்த்தியை உயர்த்திக் கொண்டார்.

பிரேம்சந்த் எழுதிய ஹிந்தி நாவலைத் தழுவியது சேவாஸதனம் திரைக் கதை. வயதான ஒருவருக்குச் சந்தர்ப்பச் சூழ்நிலை காரணமாக இரண்டாந்தாரமாக வாழ்க்கைப் படுகிறாள் சுமதி. கணவரிடமும் நாத்தனாரிடமும் ரொம்பவும் கொடுமைக்கு உள்ளாகிறாள். துன்பம் தாளாமல் ஆற்றில் விழுந்து உயிரை மாய்த்துக்கொள்ள நினைக்கையில் தன் கணவனாலேயே காப்பாற்றப்படுகிறாள். இறுதியில் தான் செய்த தவறுகளுக்கெல்லாம் வருந்துகிற கணவன் தேசாந்திரம் கிளம்பி விடுகிறான். சுமதி சேவாஸதனத்தில் சேர்ந்து விடுகிறாள். சீர்திருத்தக் கதைதான் என்றாலும் சிறந்த திரைக் கதையாக்கி இருந்தார்கள்.

சேவாஸதனம் ஷூட்டிங் நடந்துகொண்டிருந்த நாட்களில் ஒரு வேடிக்கையான சம்பவம் நிகழ்ந்தது. குழந்தை ராதா தன் தாயார் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களுடன் தினம் தினம் ஷூட்டிங்குக்கு வருவேன் என்று பிடிவாதம் செய்து போய் வருவது வழக்கமாகிவிட்டது.

ஒரு நாள் எப். ஜி. நடேசய்யர், ஸ்ரீ சதாசிவம் இல்லத்துக்கு வந்தார். குழந்தை ராதா அவர் தலையைக் கண்டாளோ இல்லையோ, ஒரே ஓட்டமாகத் தன் தகப்பனாரிடம் ஓடிச் சென்றாள். ''அப்பா! அம்மாவை ரொம்பக் கஷ்டப்படுத்தற அந்தப் பொல்லாத மாமா வருகிறார்! அவரை வீட்டுக்குள்ளே வர விடாதே! அனுப்பிவிடு!'' என்று கூறி ஒரே வடியாக அழ ஆரம்பித்து விட்டாள்.

நடிப்பை நிஜமென்று எண்ணிக் கொண்ட குழந்தைத் தன்மையை நினைத்து அனைவரும் சிரித்தார்கள். ஸ்ரீ எப். ஜி. நடேசய்யர் உண்மையில் ரொம்ப நல்லவர்தான் என்பதைக் குழந்தை ராதாவுக்கு எடுத்துச் சொல்லி அவள் அழுகையை நிறுத்துவதற்குப் பெற்றோர் ரொம்பச் சிரமப்பட்டுப் போனார்கள்!

இன்று ஜெமினி இருக்குமிடத்தில் முன்பு அமைந்திருந்த எம்.பி.பி.ஸி. ஸ்டுடியோவில் எடுக்கப்பட்ட இந்தப் படத்தில் பிற்காலத் திரைப் படங்களில் உள்ளது போல் ஹாஸ்யத்துக்கென்று தனியான பாகம் ஏற்றவர்கள் யாருமில்லை என்பதை விசேஷமாகக் கவனிக்க வேண்டும். நாத்தனார் குண்டம்மாளாகத் தோன்றியவர்தான் ஆங்காங்கே ஹாஸ்ய விருந்தும் அளித்து வந்தார். ''பூனை பாலைச் சாப்பிடவில்லை; குண்டம்மாள்தான் சாப்பிட்டாள்!'' என்று அவர் கூறுகிற கட்டத்தை நினைத்துக் கொண்டால் அன்று படம் பார்த்தோர் இன்றும் சிரிப்பார்கள்!

சேவாஸதனம் படத்தின் புகழுக்கு முக்கிய காரணம், முதல் காரணம் பாடல்கள்தான் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? ஸ்ரீமதி எம். எஸ். நடிக்க ஒப்புக்கொண்டார் என்றதும் கச்சேரி லிஸ்டையே திரைக் கதையில் புகுத்திவிட்டார் டைரக்டர் சுப்ரமணியம்! பாடல்களை இயற்றியவர்கள் திரு பாபநாசம் சிவன் அவர்களும் அவரது சகோதரருமாவார்கள். ''உன் உருவம் கல்லன்றி; ஸியாமசுந்தர; மாரமணன்; நீது சரண'' போன்ற பாடல்கள் தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் ரேடியோவிலும் இசைத் தட்டிலும் ஒலித்துக் கொண்டே இருந்தன.

''ஒளியே வடிவமாய் ஓங்குமோர் ஒப்பில் பரஞ்சோதி''யைப் பத்து வயது முதலே உள்ளமுருக வழிபடத் தொடங்கிய ஸ்ரீமதி எம். எஸ். அவர்களுக்கு அந்தப் பரஞ்சோதியின் அருள் பரிபூரணமாகக் கிட்டியிருப்பதில் வியப்பென்ன?






**நூ**ல் நிலைய சயன்ஸில் 'நிபுணராக' விளங்கும் திரு எஸ். ரங்கநாதன் பல வருஷங்களுக்கு முன் இங்கிலாந்தில் நூல் நிலையமொன்றில் லைப்ரரியனாகப் பணியாற்றி வந்தார். அப்பொழுது நடந்த சம்பவத்தை ஒரு பிரசங்கத்தில் குறிப்பிட்டார்.

ஒரு நாள் ஆங்கில மாணவி ஒருத்தி நூல் நிலையத்தில் நுழைந்தாள். அடிக்கடி அவரை வியப்புடன் பார்த்தாள் அவள். அவனை அவர் பார்க்கும்போது முகத்தைத் திருப்பிக் கொண்டுவிடுவாள். அந்தப் பெண் ஏதோ ஒரு புத்தகத்தைப் பார்த்து விட்டு அவரையும் பார்த்தாள். வெகு நேரம் கழித்து. '' 'டர்பன்' என்ற வார்த்தையை எப்படி உச்சரிப்பது?'' என்று அவரிடம் வந்து கேட்டாள் அவள்.

''சரியாகத்தான் உச்சரிக்கிறாயே! ஆமாம், இதற்காகவா இவ்வளவு நேரம் தயங்கினாய்?'' என்று வினவினார் ரங்கநாதன் வியப்புடன்.

''நானே அந்த வார்த்தையைக் கண்டுபிடிக்க எண்ணினேன்!''

''ஏன்? அகராதி ஒன்றில் பார்த்திருக்கலாமே?'' என்று கேட்டார்



**பொ**துக் கூட்டம் ஒன்றில் 'தமிழ் மொழியே இப்போது பேசும்' என்று திரு வி. க. அவர்களால் அறிமுகப்படுத்தி வைக்கப் பட்டவர் சொல்லின் செல்வர் பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள். அன்னாரைக் குறித்து ஸ்ரீமதி ஆ. ரா. இந்திரா எழுதுகிறார்: அப்போது சென்னை பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் ஏழு பேர் ஆராய்ச்சி மாணவர்களாய்ப் பயின்று வந்தோம். பேராசிரியருடன் அனைவரும் ஒரு நாள் விருந்துண்ண வேண்டும் என்று விரும்பினோம். நானும் திருமதி கனகசுந்தரியுமாகச் சேர்ந்து வீட்டில் சில பலகாரங்களையும் காப்பியையும் செய்து கொண்டு வரவேண்டும் என்னும் தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியது. விருந்து தினத்தன்று திரு சங்கரராஜு, ''எங்கே ஆர்டர் கொடுத்தீர்கள்? மிகவும் சுவையாக இருக்கிறதே!'' என்று கேட்டார். பேராசிரியர் எங்கள் இருவர் பக்கமும் தம் கையை நீட்டி ''இவர்கள் கைவண்ணம் இங்கு கண்டோம்'' என்றார்கள். அவ்வளவுதான், எங்கள் நகையொலி விண்ணுலகில் கம்பன் இதயத்தைப் போய்த் தொட்டிருக்க வேண்டும்! சொல் விருந்து எத்தகைய நல் விருந்தையும் எவ்வளவு எளிதாக வென்று விடுகிறது என்பதைக் கண்டேன்.



**ஒ**ரு சமயம் நான் பாபநாசத்துக்குச் சென்றிருந்தேன். எதற்காகப் போனேன் என்று கேட்டால் நீங்கள் ஒருவேளை சிரிப்பீர்கள்; சிலர் அனுதாபப்படுவீர்கள். பி. ஏ. பரீட்சைக்கு மூன்று தடவை போய் மூன்று தடவையும் தவறி விட்டேன். இதனால் வாழ்க்கை கசந்து போயிருந்தது. பாபநாசத்தில் கல்யாணி தீர்த்தம் என்பதாக ஓர் இடம் இருக்கிறதென்றும் அதிலேதான் ஆசிரியர் வ. வே. சு. ஐயர் விழுந்து உயிரை இழந்தார் என்றும் கேள்விப்பட்டிருந்தேன். அந்தப் பெரியாரைப் பின்பற்றலாம் என்றுதான் பாபநாசம் போனேன்!

பாபநாசம் கோயிலுக்குப் பக்கத்தில் பளிங்கு போன்ற தெளிந்த நீரோடும் நதியின் கரையில் உட்கார்ந்து யோசித்தபோது, எதற்காக உயிரை விட வேண்டும் என்றே தோன்றி விட்டது! இதோ இந்த மரங்களில் எத்தனை பட்சிகள் எவ்வளவு ஆனந்தமாகப் பாடிக் கொண்டு வாழ்கின்றன. இதோ இந்தக் குரங்குகளைப் பார்க்க



**மாணவர்களுக்கு**

**பாடசாலைகளும் கல்லூரிகளும் புனிதமான தொழிற்சாலைகள். அங்கே சிறப்பு வாய்ந்த மனிதத் தன்மை என்னும் அரிய பொருள் உற்பத்தி செய்யப்படுகிறது.**

**—மகாத்மா காந்தி**

---

லைப்ரரியன். "அகராதியில் அந்த வார்த்தை இல்லையே! இருந்தாலும் நானே கண்டு பிடித்து விட்டேன்!" என்று பெருமைப் பட்டாள் அந்த ஆங்கில மாணவி.

இங்கிலாந்து தேசத்து மாணவ மாணவிகளின் விடா முயற்சிக்கும் புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்கின்ற ஆர்வத்துக்கும் பண்புடன் பழகுகிற விதத்துக்கும் நல்லதொரு உதாரணமாக மேற்கூறிய சம்பவத்தைக் கூறினார் திரு ரங்கநாதன்.



---

இராஜாஜி மன்றத்தில் ஓர் இரங்கற்கூட்டம் நிகழ்ந்தது. அப்போது திரு ம.பொ.சி. யின் காலைத் தவறுதலாகச் சேதுப் பிள்ளை மிதித்து விட்டார். வலி தாங்காமல் 'ஐயோ!' என்றார் ம. பொ. சி. திடுக்கிட்ட பேராசிரியர் தம் தவற்றினை உணர்ந்தார். 'அடடா! தலைவரின் தாளா? மன்னியுங்கள்' என்று அவர் கூற ம. பொ. சியோ, "இந்தத் தமிழைக் கேட்டவுடன் என் வலியெல்லாம் எங்கோ போய் விட்டது!" எனக் கூறி மகிழ்வுடன் நடை போட்டார்!



---

லாமே, பி. ஏ. பட்டம் பெறவில்லையே என்று அவைகள் கொஞ்சமாவது கவலைப் படுகின்றனவா?

அறிவில்லாத பிராணிகளும் பட்சிகளும் இவ்வளவு உல்லாசமாக வாழ்க்கை நடத்தும் போது நான் மட்டும் பி. ஏ. பரீட்சை தேறவில்லை என்பதற்காக ஏன் உயிரை விட முயற்சி செய்ய வேண்டும்?

**கல்கி—"ஒற்றை ரோஜா"**



---



**ந**மது மதிப்புக்குரிய தலைவர் ராஜாஜி அவர்கள் சிறு பையனாக இருந்த போது ஹொசூர் பள்ளியில் தமது பாடங்களைச் சரிவரப் படிப்பதே கிடையாது. பங்களூர் ஹிந்து சென்ட்ரல் காலேஜில் சேர்ந்த பிறகும் இதே பழக்கம் நீடித்தது; மாறவேயில்லை. பரீட்சை நெருங்கும்வரை பேசாமல் இருந்துவிட்டுப் பின்னர் இரவோடு இரவாக எல்லாவற்றையும் கரைத்துக் குடிக்க முயலுவான் ராஜகோபாலன். அவன் தகப்பனார் அவனைச் சட்டக் கல்லூரியில் சேர்க்கச் சென்னைக்கு அழைத்து வந்தார். கல்லூரியில் சேருவதற்கான பரீட்சை, நாளை நடக்கவிருந்தது என்றால் இன்று இரவு தன் ஹோட்டல் அறையில் உட்கார்ந்து பௌதிகப் பாடத்தைப் படித்தான் ராஜகோபாலன். டைனமிக்ஸ், ஸ்டாடிக்ஸ் என்ற இரு பிரிவுகளுக்கும் தனித் தனி வினாத்தாள்கள் உண்டு. ஸ்டாடிக்ஸ் படித்து முடிப்பதற்குள் ராஜகோபாலனின் தகப்பனார் நேரமாகிவிட்டதென்பதால் படுக்கப் போகும்படி மகனுக்கு உத்தரவிட்டார். இதன் பலனாக ராஜகோபாலனுக்கு ஸ்டாடிக்ஸில் நல்ல மார்க்குகள் கிடைத்தன. டைனமிக்ஸில் பூஜ்யம் தான்! எனினும் ஸ்டாடிக்ஸில் கிடைத்த நிறைய மார்க்குகளே கல்லூரியில் புகுவதற்குப் போதுமானதாயிருந்தது.

கடைசி நிமிஷம்வரை பாடங்களைப் படிக்காமலிருந்ததற்குக் காரணம் கேட்டால் அதிசயமாயிருக்கும்! பள்ளியில் படிக்கும் காலத்திலேயே ராஜகோபாலனுக்குக் கண் பார்வை சரியில்லை. கரும் பலகையில் எழுதப்பட்டிருப்பது என்ன என்றே அவனுக்குத் தெரியவில்லை. மூக்குக் கண்ணாடி வாங்கித் தருமாறு தன் தகப்பனாரைக் கேட்டுக் கொண்டான். முடியாது என்றுவிட்டார் அவர். அந்நாட்களில் நாற்பத்தைந்து வயதுக்குக் குறைந்து சாதாரணமாய் யாரும் மூக்குக் கண்ணாடி அணிவதில்லை. ராஜகோபாலனின் தகப்பனார், மகன் வெறும் பகட்டுக்காகக் கண்ணாடி கேட்கிறான் என்று கருதினார்!

தனது பன்னிரண்டாவது வயதில் மெட்ரிக் பரீட்சை எழுத உட்கார்ந்தபோதுதான் மூக்குக் கண்ணாடி அணிந்து உலகைப் பார்த்தான் ராஜகோபாலன். நட்சத்திரங்களையும் மரத்தின் இலைகளையும் தனித்தனியே தெளிவாகக் காண முடிந்தது அற்புதமான ஒரு புதிய அனுபவமாயிருந்தது. எனினும் இதன் பிறகும் நீண்ட காலத்துக்குக் கண் கோளாறின் விளைவான தலைவலியால் அவன் அவதிப்பட நேர்ந்தது. சென்னை சட்டக் கல்லூரியில் சேர்ந்தபோது ராஜகோபாலனுக்கு வயது பதினேழுதான்!

தமது இருபத்தியோராம் வயதிலேயே ராஜாஜி அவர்கள் கொலைக் குற்றம் சாட்டப்பட்ட ஒருவனுக்காகக் கோர்ட்டில் வாதாட ஆரம்பித்து விட்டார்!

**[ஆதாரம் - மோனிகா பெல்டன் அம்மையார் எழுதிய 'நான் ராஜாஜியைச் சந்திக்கிறேன்' என்ற ஆங்கில நூல்.]**

சமீபத்தில் இங்கிலாந்துக்குச் சென்றிருந்த போது நமது ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் ஆக்ஸ்போர்டுக்குப் போயிருந்தார். 1936க்குப் பிறகு டாக்டர் ராதாகிருஷ்ணனுக்கும் ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலைக்கும் நெருங்கிய தொடர்பில்லாமல் போயிற்று. என்றாலும் தொடர்ந்து பதினறு வருஷங்களுக்குத் தத்துவ ஞானப் பேராசிரியர் என்ற பதவியை வகிக்கத் தகுந்தவாறு ஆக்ஸ்போர்டு தனது சட்ட திட்டங்களையும் விதிமுறைகளையும் மாற்றி அமைத்துக்கொண்டது. இதிலிருந்து ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலை டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்களை எந்த அளவுக்கு மதிக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

இங்குள்ள படங்களில் இரு பகுதிகளாய் நீங்கள் காணும் ஆக்ஸ்போர்டு நகரில் இண்டியன் இன்ஸ்டிடியூட் என்பதாக ஒன்றிருக்கிறது. 1884 அக்டோபர் 14ந் தேதி ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலை துணைவேந்தரால் திறந்து வைக்கப்பட்ட இந்தக் கட்டடத்தின் வாயிலில் சலவைக் கல்லில் சமஸ்கிருதத்தில் பொறிக்கப்பட்ட எழுத்துக்கள் உள்ளன. அவை தெரிவிப்பதாவது:

---

ஹாரோ பள்ளியில் படிக்கும் போது கத்திச் சண்டை ஒன்றினைத் தவிர வேறு எதிலும் வின்ஸ்டன் சர்ச்சில் நல்ல பெயர் எடுக்கவில்லை. கணக்கு, லத்தின், பிரெஞ்சு எல்லாம் அவனுக்கு வேம்பாய்க் கசந்தன. ஆனால் ஸாண்ட்ஹர்ஸ்ட் ராணுவக் கல்லூரியில் சேர்ந்ததும் நிலைமை அடியோடுமாறி விட்டது. வின்ஸ்டன் 'ஹானர்ஸு'டன் பாஸ் செய்தான்.

இந்த ராணுவக் கல்லூரியை விட்டு வெளியேபோனால் லீவுப் புத்தகத்தில் மாணவர்கள் தங்கள் பெயரைப் பதிவுசெய்து விட்டுச் செல்ல வேண்டும் என்பது நடைமுறை. இதை ஒரு நாள் மறந்து விட்டு வெளியே சென்று விட்டான் சர்ச்சில். போன இடத்தில் மேஜர் பால் அவர்களைச் சந்திக்க நேர்ந்ததும் திடுக்கிட்டான். எனினும், லீவு புத்தகத்தை அவர் இன்னும் பார்த்திருக்க மாட்டார், அதற்கு முன்னால் நாம் திரும்பச் சென்று நம் பெயரைப் பதிவு செய்து விடலாம் என்ற கருத்தில் அவசரம்அவசரமாய்க் கல்லூரிக்குத் திரும்பினன்.

லீவுப் புத்தகத்தைப் புரட்டினான் வின்ஸ்டன். அதில் அன்றையத் தேதிக்குண்டான பக்கத்துக்கு வந்தான். பக்கத்தின் மேலே மேஜர் பாலின் கையெழுத்து இருந்தது! அன்றைக்கு யார் யார் லீவு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அவர் ஏற்கனவே பார்த்திருந்தார்! மேஜர் பால் கண்டிப்பான மனிதராயிற்றே! என்ன தண்டனை கொடுப்பாரோ? வின்ஸ்டனுக்கு மனம் திக்திக் என்று அடித்துக் கொண்டது. விசனத்துடன் புத்தகத்தை மூடப் போன தருணத்தில் அப்பக்கத்தின் மேலே, லீவுப் பட்டியலில் முதல் பெயராகத் தனது பெயர் மேஜர் பால் அவர்களின் கையெழுத்திலேயே எழுதப்பட்டிருப்பதைப் பார்த்தான்.

ராணுவத்தில் உயர்தர அதிகாரிகள் ஒருவரோடு ஒருவர் எப்படிப் பழக வேண்டும் என்பதற்கு ஒரு நல்ல படிப்பினையாக இருந்தது இந்தச் சம்பவம். இதன் பிறகு வின்ஸ்டன் இது போன்று ராணுவ விதிமுறைகளை அலட்சியம் செய்வதேயில்லை.

---

இன்றைக்குச் சுமார் பத்துப் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னர் ரசிகமணி டி. கே. சி. அவர்களுக்கும் ஸ்ரீமதி ருக்மிணி தேவிக்கும் கீழ் வருமாறு சம்பாஷணை நடைபெற்றது.

ருக்மிணி தேவி : உங்களைக் கல்வி மந்திரியாக்கினல் என்ன செய்வீர்கள்?

டி.கே.சி.: நம் நாடு உஷ்ண நாடு. ஆகவே பள்ளிக்கூடங்கள், காலேஜுகள் அவ்வளவையும் கூரையால் வேய்ந்துவிடும்படி கட்டளை இடுவேன்!

ருக்மிணி தேவி : அப்படியானல் எங்களுக்குத்தான் முதல் பரிசு. எங்கள் கலாக்ஷேத்திரம் முழுவதும் கூரை வேய்ந்த குடிசைதான்!

ரசிகமணி: கொஞ்சம் பொறுங்கள்; லைப்ரேரிகளை எப்போதும் பூட்டக்கூடாதென்றும் புத்தக பீரோக்கள் எப்போதும் திறந்தே இருக்க வேண்டும் என்றும் கட்டளை இடுவேன். நம் நாடு உஷ்ணப் பிரதேசம். புத்தகங்கள் மட்டிலும் எதற்குப் புழுங்கித் தவிக்க வேண்டும்?

ருக்மிணி தேவி: அதிலும் நாங்கள்தான் சமர்த்து! நீங்கள் சொல்கிறபடிதான் நாங்கள் லைப்ரேரியை நடத்துகிறோம்.



"இந்தக் கட்டடம் கீழை நாடுகளின் விஞ்ஞானங்களுக்காக அர்ப்பணிக்கப்பட்டதாகும். கடவுள் அருளால் இந்தியாவின் அறிவுச் செல்வமும் இலக்கியமும் என்றும் மங்காத நிலையில் வைத்துப் போற்றப்படட்டும். இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் உள்ள நட்பு சதா வளரட்டும்."

**டா**க்டர் ராதாகிருஷ்ணனின் அமெரிக்க விஜயத்தின் போது துரதிர்ஷ்டவசமாக ஜனாதிபதி கென்னடி ஒரு சிறிய தவறு செய்து விட்டார். "அமெரிக்காவில், ஒரு கல்லூரிப் பேராசிரியரை ஜனாதிபதியாக்கும் அளவுக்கு நாங்கள் இன்று வரை செல்லவில்லை" என்று கூறிய போது ஜனாதிபதி கென்னடி தம்மைப் போலவே டெமொக்கிராட் கட்சியைச் சேர்ந்த உட்ரோ வில்ஸனை அடியோடு மறந்து விட்டுப் பேசியிருக்கிறார். பிரின்ஸ்டன் சர்வகலாசாலையில் பேராசிரியராகப் பணியாற்றிப் பின்னர் ஜனாதிபதியானவர் உட்ரோ வில்ஸன். ஆசிரியராயிருந்துஅரசியலுக்குத் தாவியவர்கள் உண்மையில் அதிர்ஷ்டசாலிகள்தானா?



---

**1907** அக்டோபரில் கேம்பிரிட்ஜ் டிரினிடி காலேஜில் சேருகையில் நேருவுக்கு வயது பதினேழு. அங்கே மூன்று வருஷங்களும் அதன் பின்னர் வக்கீல் படிப்புக்காக லண்டனில் இரண்டு வருஷங்களும் தங்கி இருந்தார் ஜவாஹர்.

இடையில் ஒரு முறை 1911ல் ஸ்ரீ ஸ்ரீ பிரகாசா நேருவைத் தமது நண்பர் ஒருவர் வீட்டில் சந்திக்க நேர்ந்தது. மேனாட்டுப் பாணியில் கச்சிதமாக உடையணிந்து வந்த நேரு, குளிருக்கு அடக்கமாய்க் கதகதவென்று எரிந்துகொண்டிருந்த நெருப்பினருகே நின்று கொண்டார். பற்பல விஷயங்களைப் பற்றியும் பிரசங்கம் புரிவது போல் நீண்ட நேரம் பேசினார். இரவு வெகுநேரமாகி விட்டது. பஸ், பாதாள ரயில், டாக்ஸி எதுவுமே ஓடாத நேரம் அது. விடைபெற்றுக் கொண்டு பிரகாசாவும் நேருவும் கிளம்பி வீதியில் இறங்கினார்கள். பிரகாசாவின் இருப்பிடம் அருகிலேயேதான் இருந்தது. ஆனால் ஜவாஹரின் ஜாகை சற்றுத் தொலைவில் இருந்தது.



"எப்படி வீடு போய்ச் சேரப் போகிறாய்?" என்று கேட்டார் பிரகாசா.

"என்னைப் பற்றிக் கவலைப்படாதே! என்னைக் கவனித்துக் கொள்ள எனக்குத் தெரியும்!" என்று கூறிப் போய் விட்டார் நேரு.

"இதே போன்ற பதிலைத் தான் நேரு இன்றைக்கும் தருவார்" என்கிறார் ஸ்ரீ ஸ்ரீ பிரகாசா. "ஏனெனில் அவரிடம் மாறுதல் ஏதும் உண்டாகிவிடவில்லை."

— பிராங் மொரேஸ் எழுதிய 'ஜவாஹர்லால் நேரு' என்ற நூலிலிருந்து.

கி கி கி

நண்பனுடன் மாட்னி சினிமாவுக்குப் போக ஆசைப்பட்ட ஒருவன்: இன்றைக்கு நாம் தத்துவ ஞான வகுப்புக்குப் போகாமல் நின்று விட்டால் என்ன?

அவன் நண்பன்: இன்னொரு நாளாயிருந்தால் பரவாயில்லை. ஆனால் இன்றைக்கு நீ சொல்கிறபடி கேட்க முடியாது. ஏனெனில் இன்று எனக்குத் தூங்கியாகணும்!

---

ரசிகமணி: என் உத்தரவுகளை எல்லோரும் நிறைவேற்றிவிட்டார்களா என்று ஒரு முறை சுற்றிப் பார்த்து வருவேன்.

ருக்மிணி: நிறைவேற்றாதவர்களை?....

ரசிகமணி: கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுவேன்!

ருக்மிணி தேவி: அப்புறம்?

ரசிகமணி: அப்புறம் நன்றுபோல் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் காலேஜுகளிலும் தீயை வைக்க உத்தரவிடுவேன். மாணவர்களையும் பெற்றோர்களையும் நீயின் மண்ணெண்ணெய் கொண்டு வந்து கொட்டும்படி வேண்டிக் கொள்வேன். அவ்வளவுதான்!

தற்காலத்துப் படிப்பு முறையை வெறுத்தவர் டி. கே. சி. "படிப்பு என்றால் ஆனந்தமயமாக இருக்க வேண்டும்; மாணவர்களைச் சித்திரவதை செய்வது அல்ல" இப்படி அடிக்கடி கூறுவார். ரசிகமணியின் உன்னதமான கொள்கையை அறியாத சிலர் டி. கே. சி. படிப்பே வேண்டாம் என்கிறார் என்று உளறுவர்.

— எஸ். ஷண்முகசுந்தரம் எழுதிய 'டி. கே. சி. யார்' என்ற நூலிலிருந்து.






கல்லூரிச் சங்கம் ஒன்றுக்குத் தலைமை தாங்க ஒரு பெரியவர் வந்திருந்தார். பேச்சுக்கிடையே ''நடந்து போன விஷயங்களை நினைந்து உருகக் கூடாது. உடனடியாக மறந்துவிட வேண்டும்!'' என்று உபதேசித்தார். வரலாற்று மாணவன் ஒருவன் எழுந்து, ''இது எங்கள் சரித்திரப் பேராசிரியருக்குத் தெரியவில்லையே!'' என்று முணுமுணுத்தான்.



ஃஃஃ

ஹாஸ்டலில் அந்த நான்கு மாணவர்களும் ரொம்பப் பொல்லாதவர்கள் என்று பெயரெடுத்திருந்தனர். கான்டீனில்தான் அவர்கள் அட்டகாசம் அதிகமாயிருக்கும். அதிலும் சர்வர் ஷண்முகத்தை அவர்கள் படாத பாடு படுத்தி வைப்பார்கள். ஸ்வீட்டிலிருக்கும் ஸ்பூனை மேஜை அடியில் ஒளித்து விட்டு ஸ்பூன் வைக்கவில்லை என்பான் ஒருவன். ஈ ஒன்றைப் பிடித்துக் கொண்டு வந்து காப்பியில் போட்டு விட்டுத் திரும்பி எடுத்துக் கொண்டு போ என்பான் மற்றொருவன். ஒரு நாள் அந்நால்வரில் ஒருவனுக்கே மனசு இரங்கி விட்டது. அவன் சொன்னான்: ''ஷண்முகம்! நீ ரொம்ப நல்ல ஆளப்பா. பரம சாது. உன்னைப் படுத்தி வைப்பது பாவம்! இனி மேல் நாங்கள் உனக்கு ஒரு தொந்தரவும் தருவதில்லை என்று தீர்மானித்திருக்கிறோம்.'' மற்ற மூவரும் ஏகமனதாக இதை ஆதரித்தார்கள்.

''சரி, நானும் நாளையிலிருந்து உங்கள் காப்பியில் டிகாக்ஷனுக்குப் பதில் பூட்பாலிஷைக் கரைக்கும் பழக்கத்தை விட்டு விடுகிறேன்!'' என்றான் ஷண்முகம்.

பம்பாயின் கல்வி மந்திரியாக இருந்த பி. பரஞ்சபே மெட்ரிக்கில் கணக்குப் பரீட்சை எழுத அமர்ந்த போது மூன்று மணி நேரம் அவகாசம் தரப்பட்டிருந்தது. ஒன்றரை மணி நேரத்தில் பரஞ்சபே விடைத்தாளைக் கண்காணிப்பாளரிடம் தந்துவிட்டான். ''கேள்வித் தாளைக் கண்டு இப்படி அதிர்ச்சி அடையலாமா நீ?'' என்று அநுதாபத்துடன் கேட்டார் கண்காணிப்பாளர்.

''எல்லாக் கேள்விகளுக்கும் பதில் எழுதி முடித்தாகி விட்டது'' என்று பரஞ்சபே சொன்னதும் அவர் அயர்ந்து விட்டார்.

பிரிதொரு சமயம் கல்லூரிப் பரீட்சைகளின் ரிஸல்ட் பத்திரிகையில் வெளியான தினத்தன்று கிராம மக்கள் பரஞ்சபேயின் வீட்டுக்கு வந்து அவனுடைய பெற்றோர்களிடம் மகன் பெயிலானதைத் தெரிவித்து ஆறுதலும் கூறிச்சென்றனர்.

ஆனால் அவர்கள் ஒரு சிறு தவறு செய்து விட்டார்கள். ஒரே ஒரு மாணவன் மட்டும் முதல் வகுப்பிலே தேறியிருந்தான். ஒரே எண்ணாதலால் அது அவர்கள் கண்ணில் படவில்லை. அந்த ஒரே மாணவன் பரஞ்சபேதான்!



மாணவர்களில் ஒருவன், ''கம்பனையும் வள்ளுவனையும் மறந்த பின்னரும் மக்கள் நான் இயற்றப் போகின்ற நல்ல கவிதைகளைப் படிப்பார்கள்!'' என்றான்.

இதைக் கேட்டுக் கொண்டே வந்த பேராசிரியர் ''உண்மை! கம்பனையும் வள்ளுவனையும் மறந்த பின்னர் மக்கள் கண்டிப்பாக உன் கவிதைகளைப் படிப்பார்கள்! ஆனால் அந்த நாள் வரப்போவதுமில்லை! மக்கள் உன் கவிதைகளைப் படிக்கப் போவதுமில்லை!'' என்றார்.



ஃஃஃ

''காலேஜில் நீ கற்ற விஷயங்களில் மிகவும் கஷ்டமானது எது?'' என்று கேட்டார் தகப்பனார். மகன், ''சிகரெட் புகைச் சுருள்கள் விடுவது!'' என்றான்.

இந்த ஹாஸ்யம் ஒரு புறம் இருக்க இதோ அந்தக் கொடிய பழக்கம்பற்றிய சில விவரங்கள்: 1951ல் அமெரிக்காவில் உள்ள கான்ஸர் ஸொஸைட்டி ஓர் ஆராய்ச்சி நடத்தியது. 1,87,783 பேர்களை 44 மாதங்களுக்குப் பரிசோதித்தார்கள். அந்தக் கால அளவுக்குள்ளாக அவர்களில் 7,316பேர்கள் இறந்து போனார்கள். இவர்களில் 4,651 பேர்களே இயற்கையாக மரணம் எய்தினார்கள் என்றும் 2,665 பேர்கள் அதிகமாக சிகரெட் பிடிப்பதால் மரணத்தைத் தருவித்துக் கொண்டார்கள் என்றும் கணக்கிட்டிருக்கின்றனர்.

இப்படி புகை பிடித்துச் சாவைத் தருவித்துக் கொண்டோரில் இருதயம் பாதிக்கப்பட்டவர்கள் 52 சதவிகிதம்; நுரை ஈரலில் கான்ஸர் உருவானதால் மடிந்தவர்கள் 13.5 சதவீதம். மீதமுள்ள 34.5 சத வீதத்தினரை சிகரெட் புகை வேறு பல விதங்களில் பாதித்திருக்கிறது.

சிறு வயதிலேயே புகட்டுங்கள்...
சிறந்த முறையில் புகட்டுங்கள்...
காலையில் முதல் வேலையாக ஒரு முறை
இறுதியாக இரவில் ஒரு முறை
வாய்கொப்பளிக்க

# லிஸ்டரின்!

—வாழ்நாள் முழுதும்
அவர்களுக்குப் பாதுகாப்பு!



பழக்கம் படிவதற்கு வாகானது இளமைப் பருவம்! லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தைப் புகட்டுவதற்கு இதைவிட வாய்ப்பான சமயமும் உண்டோ! அன்றாடம் அதிகாலை ஒரு தடவை, இரவு ஒரு தடவை லிஸ்டரின் கொண்டு வாய் கொப்பளித்தால் கிருமிகளினின்று நாள் முழுதும் காத்துக்கொள்ளலாம். பட்ட மாத்திரத்திலே கிருமிகளைக் கொன்று மூச்சிலே இனிமை தவழச் செய்வது லிஸ்டரின் ஆண்டிஸெப்டிக் (நச்சுமுறி மருந்து).

திடமுடன் முன்யோசனையைக் கைக்கொள்ளுங்கள்! தினம் இருமுறை லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தை இப்போதே துவக்குங்கள்!

**வாய்நிறைந்த சுகாதாரத் தூய்மைக்கு வழி: லிஸ்டரின்; இன்றும் என்றும் உங்கள் துணை!**




**வார்னர்-லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி**
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யூ.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது).

WL-I79/8.TN

# பொன் விலங்கு

## இருபத்தாறுவது அத்தியாயம்

நண்பன் குமரப்பனுடைய அந்தக் கடிதம் அவனுடன் நெருக்கு நேர் உட்கார்ந்து பேசுவதைப் போல் சுவை நிரம்பியதாக இருந்தது. மனமும், உணர்ச்சிகளும் தளர்ந்து போய்க் கல்லூரியிலிருந்து அறைக்குத் திரும்பியிருந்த அந்த மாலை வேளையில் அப்படியே மதுரைக்குப் பறந்து போய் நண்பனோடு வையையாற்று மணலில் நேரம் போவது தெரியாமல் உட்கார்ந்து பேச வேண்டும் போன்ற தவிப்பை அந்தக் கடிதம் உண்டாக்கியிருந்தது. வரி பிறழாமல் அழகிய [கையெழுத்துக்களால் நேராக எழுதும் வழக்கம் குமரப்பனிடம் உண்டு. எப்போதாவது சத்தியமூர்த்தியும் மற்ற நண்பர்களும் அந்தக் கையெழுத்தைப் பற்றிப் புகழ்ந்தால், ''எண்ணங்களில் கோணல் இல்லாதவர்களுக்குக் கையெழுத்தும் கோணல் இல்லாமல் தானே இருக்கும்?'' என்று பெருமிதத்தோடு குறும்புத்தனமாகச் சிரித்துக் கொண்டே பதில் சொல்வான் குமரப்பன். அவனுடைய கர்வத்தில் கூட ஒரு நியாயம் இருக்கும். தன்னிடம் இருக்கிற திறமையை மற்றவர்கள் புகழ்ந்தால் மட்டுமே இப்படிக் குறும்புத்தனமாகவோ, நகைச்



சுவையாகவோ மறுமொழி கூறுவான். இல்
லாத திறமைக்காக யாராவது பொய்யாய்ப்
புகழத் தொடங்கினாலோ அதற்குக் கிடைக்கிற பதில் சூடா
யிருக்கும். குமரப்பனைப் போல் பொருளாழமும், குத்தலும்,
குறும்பும் நகைச்சுவையுமாக உரையாடும் துணிவைக் கூடப்
பிறரிடம் காண்பது அருமையாக இருக்கும். அந்தச் சாயங்
கால வேளையில் எந்தவிதமான வேகமும் பரபரப்புமில்லாமல்,
வாழ்க்கையே மெல்ல நகர்ந்து கொண்டிருக்கிற மல்லிகைப்
பந்தலைப் போன்ற ஒரு மலை நாட்டு நகரத்தின் மாடி வராந்தா
வில் குமரப்பனின் கடிதத்தோடு உட்கார்ந்து அவனைப் பற்றிச்
சிந்திப்பதே சுறுசுறுப்பையும் துணிவையும் தருகிற அநுபவ
மாக இருந்தது. குத்து விளக்கில் பிரசுரம் செய்
வதற்காகக் கண்ணாயிரத்தோடும், உதவியாசிரிய
ரோடும் மோகினியைப் பேட்டி காணச் சென்றதைப்
பற்றியும், அப்போது மோகினியின் வீட்டில் நிகழ்ந்த

மணிவண்ணன்



## நீங்கள் பொலிவுடனிருக்க சார்மிஸ் உபயோகியுங்கள்!

புதுமை பெறுக...

இதம் பெறுக...

நளினமாய் இருங்கள்

நாள் முழுதும்!

இளமையையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும் சார்மிஸ் டால்கம் பவுடர் நீங்கள் நாள் முழுதும் நளினமாயிருக்க உதவுகிறது. உன்னத மனோரம்மிய மணம்கொண்ட சார்மிஸ் உங்களுக்கு சுகத்தையும் புத்துணர்ச்சியையும் அளித்து, உங்கள் அழகை நன்கு சோபிக்கச் செய்கிறது!

# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய மணத்துடன் கூடிய டால்கம் பவுடர்

வற்றைப் பற்றியும் அந்தக் கடிதத்தில் சத்தியமூர்த்திக்கு எழுதியிருந்தான் குமரப்பன். அந்தக் கடிதத்தில் மோகினியைப் பற்றி மிகவும் பெருமையாக எழுதியிருந்தான். குத்து விளக்கில் வெளியிடுவதற்காகத் தான் எடுத்த மோகினியின் உருவப் படங்கள் இரண்டிலும் ஓரோர் பிரதி கடிதத்தோடு இணைத்திருப்பதாகவும் குறிப்பிட்டிருந்தான். அந்தக் கடிதத்தை மற்றொரு முறையும் படிக்கத்தோன்றியது சத்தியமூர்த்திக்கு.

''........ சித்திரா பௌர்ணமியன்று இரவு வையையாற்று மணலில் நீயும் நானும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த போது நீ கூறியிருந்த ஒரு வாக்கியத்தை மோகினியைப் பேட்டி காண்பதற்காகச் சென்றிருந்த தினத்தில் மறுபடியும் நினைத்தேனடா சத்தியம்! 'மோகினியைப் போன்றவர்களின் துன்பத்துக்காக யாரும் இயக்கம் நடத்த மாட்டார்கள். அவர்கள் இப்படியே இந்தக் கவலைகளோடு வெந்து அழிய வேண்டியதுதான்' என்று நீ அன்று கூறிய போது நான் உன்னை மறுத்துப் பேசினேன். இப்போது நேரில் போய்ப் பார்த்து விட்டு வந்த பின்பு எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. இந்த மாதிரி வீடுகளில் ஏதோ ஒரு கலையையும் யாரோ பல மனிதர்களையும் நம்பி வாழுகிற சராசரியான பெண்களைப் போல் மோகினியும் இருந்து விட்டால் வம்பில்லை. அவளால் அப்படி இருக்க முடியாது. நரகத்தின் நடுவே தன் ஒருத்தியினுடைய நினைப்பினாலும், செயல்களாலுமே சொர்க்கத்தைப் படைத்துக் கொண்டு வாழ முயல்கிறாள் அவள். மோகினியைப் பேட்டி காண்பது என்ற பெயரில் கண்ணாயிரமும் முத்தழகம்மாளும் வேறு ஏதேதோ காரியங்களைச் சாதித்துக்கொள்ள முயன்றார்கள். அத்தனை அடக்குமுறைக்கு நடுவிலும் அந்தப் பெண்ணிடம் ஓரளவு தன்னம்பிக்கையும், தைரியமும் மீதமிருப்பதைப் பார்த்து நான் ஆச்சரியப்பட்டுப் போனேனடா, சத்தியம்! 'உங்களுடைய ஆண்டாள் நடனத்தை நீங்களே மனம் விரும்பி, உணர்ச்சி மயமாகவும் பரிபூரணமாகவும் ஆடிய தினத்தைப் பற்றிய அநுபவத்தை நீங்கள் 'குத்து விளக்கு' வாசகர்களுடன் பங்கிட்டுக் கொண்டு கூற முடியுமா?' என்றாற் போல் பேட்டியில் ஒரு கேள்வி கேட்கப்பட்டது. 'மஞ்சள்பட்டி சம்ஸ்தானத்தில் - நவராத்திரியின்போது ஜமீன்தார் முன்னிலையில் ஆட நேர்ந்த சமயத்தில்தான் இவள் பரிபூரணமாக உணர்ந்து ஆடினாள்' என்று கண்ணாயிரமும் முத்தழகம்மாளும் இந்தக் கேள்விக்குத் தாங்களாகவே முந்திக் கொண்டு பதில் சொன்னார்கள். ஆனால் மோகினி இந்தப் பதிலை மறுத்துவிட்டு, 'சித்திரா பௌர்ணமியன்று தமுக்கம் பொருட் காட்சியில் ஆடியபோதுதான் நான் என்னை மறந்த இலயிப்போடு ஆண்டாளாகவே மாறி ஆடினேன். அதைப் போல் வேறெந்தத் தினத்திலும் பெருமிதமாக நான் ஆடியதில்லை' எனப் பதில் கூறினாள். இந்தப் பதில் அவளுடைய துணிவை நான் புரிந்துகொள்ளத் துணை செய்தது. கண்ணாயிரமும் முத்தழகம்மாளும் அவளைப் படுத்திய பாட்டில் பாதிப் பேட்டி நடந்து கொண்டிருந்தபோதே அவள் அழுகையை அடக்க முடியாமல் தவித்ததை என் கண்களாலேயே பார்த்தேன். பேட்டி முடிந்ததும் அவள் அழுதுகொண்டே எழுந்திருந்து மாடிக்குப் போனாள். இந்தக் கடிதத்தோடு நான் உனக்கு அனுப்பியிருக்கிற படங்களில் சிரித்துக் கொண்டிருக்கிற மோகினியைப் பார்த்தால் இதே படங்களைப் பிடித்து முடித்த சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் கண் கலங்கி அழுதிருக்க முடியும் என்பதைக்கூட நீ கற்பனை செய்ய முடியாது. ஆனால் வாய் விட்டுக் கதறியோ, அல்லது வாய் விட்டுக் கதற முடியாத மௌனத் துடனோ, அவள் சதா காலமும் எதற்காகவோ அழுது கொண்டிருக்கிறாள் என்பது மட்டும் உண்மை. அவளுடைய முகத்தையும் கண்களையும் மிக அருகில் பார்க்கும்போது இரவிவர்மா வரைந்திருக்கிற கலைமகளின் தெய்விகத் திருவுருவம் நினைவு வருகிறதடா சத்தியம். படத்தில் சிரித்துக் கொண்டிருப்பது போல் அவள் எப்போதாவது தப்பித் தவறிச் சிரித்தால் கூட அந்தச் சிரிப்பில் 'இலட்சுமீகரம்' நிறைந்திருக்கிறது. 'திருமகளைச் சரண் புகுதல்' என்ற தலைப்பிலே மகா கவி பாரதியார் எழுதியிருக்கும் கவிதையை நீ படித்திருப்பாயடா சத்தியம். அந்தக் கவிதையிலே திருமகள் எங்கெங்கே வாசம் செய்கிறாள் என்பதைச் சொல்லும்போது 'பரிசுத்தமான கன்னிப் பெண்களின் நகைப்பிலும் அவள் வாசம் செய்வதாக'ப் பாரதியார் பாடியிருக்கிறார். மோகினியின் சிரிப்பிலோ திருமகளும், கலைமகளும் சேர்ந்து வாசம் செய்வதாக எனக்குத் தோன்றுகிறது. 'மானிடவர்க்கென்று பேச்சுப் படின் வாழுகில்லேன்' என்று கண்களில் நீர் நெகிழக் கதறிக்கொண்டே ஆடும் போது அவளைப் பார்த்தால் மெய்

சிலிர்க்கிறது. அவனுடைய அம்மாவும் கண்ணாயிரமும் அவனை எப்படி எப்படியோ ஆட்டிப் படைக்க முயலுகிறார்கள். ஆண் மக்கட் காவல் இல்லாத இந்த மாதிரிக் குடும்பம் ஒன்றும் இதற்கு ஆலோசகராகக் கண்ணாயிரத்தைப் போல் ஒரு வரம்பில்லாத போலி மனிதனும் வாய்த்து விட்டால் மேலே சொல்லுவதற்கு ஒன்றுமே இல்லை. எந்த வகையிலாவது தன்னைப் பெரிய மனிதனாக நிரூபித்துக் கொண்டு சமூகத்தில் உலாவ வேண்டுமென்று ஆசைப்படுகிறவன் கண்ணாயிரம். மோகினியும் முத்தழகம்மாளும் தன் சொற்படி கேட்கிறவர்கள் என்று பிறர் புரிந்துகொள்ளுவதனால் கண்ணாயிரத்துக்குச் சில சௌகரியங்கள் இருந்து வருகின்றன. ஏழு எட்டு இடங்களுக்கு மோகினியோடும் முத்தழகம்மாளோடும் இப்படிப் போய்ப் பார்த்துப் பேசிச் சிரித்து விட்டு வருவதனால் நாலைந்து இடங்களில் தன்னை ஞாபகம் வைத்துக் கொண்டாலும் கண்ணாயிரத்தின் விளம்பரத் தொழிலுக்கு அல்லது தொழில் விளம்பரத்துக்கு அது லாபகரமான காரியம்தான். இந்த லாபகரமான காரியத்துக்குத் தன்னையும், ஒரு கருவியாகக் கண்ணாயிரம் பயன்படுத்திக் கொள்ள முயலுவதும் அப்படிப் பயன்படுத்திக் கொள்வதற்கு அம்மா தெரிந்தும் தெரியாமலும் உடன்படுவதும் புரியப் புரிய மோகினி மனம் குமுறுகிறாள். ஆனால் கண்ணாயிரம் யாருடைய மனக் குமுறலைப் பற்றியும் எதற்காகவும் கவலைப்பட மாட்டான் என்பதை நான் அறிவேன். யார் யாரை எப்படி வழிக்குக் கொண்டு வரவேண்டும் என்று தெரிந்தவன் கண்ணாயிரம். வெண்டைக்காய்ப் பொரியலையும், எலுமிச்சம்பழ ஊறுகாயையும் பற்றியே இருபத்து நான்கு மணி நேரமும் பேசிக் கொண்டு திரிகிற சாப்பாட்டுப் பிரியரான பெரிய மனிதரிடம் கண்ணாயிரமும் அதைப் பற்றியே பேசுவான். அப்படிப்பட்டவருக்கு எப்போதாவது எதற்காகவாவது கடிதம் எழுதினால்கூட அந்தக் கடிதத்தில் எங்காவது ஓரிடத்தில் கீழ்க்காணும் வாக்கியத்தைக் கண்ணாயிரம் நிச்சயமாக எழுதியிருப்பான்.

'இரண்டு நாளைக்கு முன் நம் வீட்டில் வெண்டைக்காய்ப் பொரியல் வைத்திருந்தார்கள். நன்றாக வாய்த்திருந்தது: ஆனால் அதை ருசித்துச் சாப்பிடுவதற்கு நீங்கள் அருகில் இல்லையே என்று நான் வருந்திய வருத்தம் கொஞ்ச நஞ்சமில்லை.'

கண்ணாயிரம் தானே ஒரு வீட்டுக்கு விருந்துச் சாப்பாடு சாப்பிடப் போய் விட்டுத் திரும்பி வந்த பின்பு அந்த வீட்டுக்குரியவருக்கு நன்றி தெரிவித்து எழுதுகிற கடிதமானால் அதில் மேற்படி வாக்கியம், 'சென்ற வாரம் உங்கள் வீட்டு விருந்துச் சாப்பாட்டில் பரிமாறிய வெண்டைக்காய்ப் பொரியலைப் போல் இந்தப் பிறவியில் இதுவரை வேறெங்கும் நான் சாப்பிட நேர்ந்ததில்லை; இனியும் நேரப் போவதில்லை' என்று மாறி அமைந்திருக்கும். யாரோடு பேசினாலும், யாருக்கு எழுதினாலும் அந்த விநாடி வரையிலும் அதற்கப்பாலும் அவர்களுக்காகவே தான் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பதைப் போல் ஒரு பிரமையை உண்டாக்கி விடுவதில் கண்ணாயிரத்துக்கு நிகர் கண்ணாயிரம்தான்.

................. கடிதத்தின் இந்தப் பகுதியைப் படித்துக் கொண்டிருந்த போது, 'கண்ணாயிரத்தைப் போன்றவர்கள் நாலைந்து பேரோ அல்லது கண்ணாயிரத்திடமுள்ள தன்மைகள் உள்ள நாலைந்து பேரோ இல்லாதவர் எங்குமே கிடையாது போலிருக்கிறதடா குமரப்பன்! மல்லிகைப் பந்தல் கல்லூரியிலும் அந்த மாதிரி மனிதர்கள் சிலரை நான் சந்தித்து வருந்திக் கொண்டிருக்கிறேன்' என்று வாய் விட்டுக் கதற வேண்டும்போல் இருந்தது சத்தியமூர்த்திக்கு. வாழ்க்கையில் கண்ணெதிரே நடந்து போகிற நல்லவர் கெட்டவர்களைக் குமரப்பன் எவ்வளவு நன்றாகப் படித்து உணர்கிறான் என்றெண்ணி நண்பனை வியக்கவும் தோன்றியது அவனுக்கு. நண்பனுடைய கடிதத்தை ஒருமுறைக்கு இருமுறையாகப் படித்தபின் மோகினியின் புகைப்படங்களை மறுபடியும் பார்த்தான் அவன். அந்தப் படங்களில் அபிநயக் கோலத்தோடு அவள் சிரித்துக் கொண்டிருக்கிற சிரிப்பையும் பார்த்தான். அந்தச் சிரிப்பில் தெரிந்த இலட்சுமீகரத்தையும் தெரியாமல் மறைந்திருந்த சோகத்தையும் கூட அப்போது அவனால் புரிந்து கொள்ள முடிந்தது. இன்பதற்கு மட்டுமல்லாது இன்னப் படுவதற்கென்றே அமைந்தாற் போன்ற அந்த அழகுப் பல் வரிசை அவன் நினைவில் நிறைந்தது. அதே கடிதத்தில் குமரப்பன் மேலும் எழுதியிருந்தான்: ''கண்ணாயிரத்தைப் போல் எப்படியாவது வாழ்ந்துவிட வேண்டுமென்று நியாயத்தை மீறிய வேகத்துடனே ஓடி வருகிறவர்களுக்கு வாழ்க்கையின் எல்லா வழிகளும் தாராளமாக

எழிலின் எல்லையை எட்ட...

# "'ஹேஸலின்' ஸ்னோ"

மேனிக்கு மென்மையாக மெருகிடுவதிலே தன்னிகரற்றது
"'ஹேஸலின்' ஸ்னோ." மென்மையான,
எண்ணெய்ப் பசையற்ற இவ்வழகுப் பொருள்
சருமத்துக்கு மழமழப்பையும் வனப்பையும் ஊட்டுகிறது.
பவுடர் படிவதற்கெனவோ அல்லது தனிப்பட்ட
முறையிலோ உபயோகித்து உங்கள் சருமத்துக்குப்
பொலிவுடன் கூடிய பாதுகாப்பை அளியுங்கள்.
"'ஹேஸலின்' ஸ்னோ" அரம்பையர் குலத்தின்
பரம்பரை அழகுசாதனம்.




பர்ரோஸ் வெல்கம்
தயாரிப்பு



SWY-II-TAM

# மில்க் ஆப் மக்னீஷியா என்பது என்ன?

**இது மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைடின் எமல்ஷன். அமில நாசினியும் மலமிளக்கியுமான இது இரைப்பை சம்பந்தமான (அஜீரணக்) கோளாறுகளின் சிகிச்சையில் ஏராளமாக உபயோகப்படுத்தப்படுகிறது.**

மில்க் ஆப் மக்னீஷியாவிற்கு, மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைட் மிக்ஸ்சர் B.P., மெக்னீஷியா மாக்மா யு. எஸ். பி., க்ரீம் ஆப் மக்னீஷியா B. P. போன்ற பெயர்களும் உண்டு. எப்பெயரால் அழைக்கப்பட்டாலும் இதன் அடிப்படையான பொருள் ஒன்றே. மேலும் ஒரு அங்கீகாரமான ஔஷதகாரண விதியின் கண்டிப்பான நியதிக்கும், பிரமாணத்திற்கும் தக்கபடி இது உற்பத்தி செய்யப்படுகிறது. இது எந்த வர்த்தகப் பெயரில் விற்பனை செய்யப்பட்டாலும் சரி அப்பெயர் தயாரிப்பாளரை சுட்டிக் காட்ட அனுகூலமாகுமே தவிர இதன் தரத்தை உயர்த்தவோ, தாழ்த்தவோ செய்யாது.

இருந்தபோதிலும், விற்பனைப் பெயர், வாடிக்கையாளரை பொறுத்த மட்டில் மிகவும் முக்கியம். ஏனென்றால் நன்கு தெரிந்த ஒரு பெயர் அவருக்கு தயாரிப்பாளரின் நம்பகத்தன்மையைப் பற்றி உறுதியளிக்கிறது. இக்காரணத்தினால் தான் கணக்கற்ற வாடிக்கையாளர்கள் அன்றாடம் 'மந்த்' (MandH) மில்க் ஆப் மக்னீஷியாவை வாங்குகிறார்கள். இது யுனைடெட் ஸ்டேட்ஸ் ஔஷதகாரண விதிகளின்படி தயாரிக்கப்பட்டு குணத்திற்கும் தரத்திற்கும் நன்கு பரிசீலனை செய்யப்படுகிறது. ஆகையால் இதன் தரமும், தூய்மையும் கேள்விக்கு இடமற்றதாக விளங்குகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, மற்ற எல்லா 'மந்த்' (MandH) தயாரிப்புகளைப் போலவே, மருந்துகள் தயாரிப்பதில் 50 வருடங்களுக்கு மேலாக உள்ள அனுபவத்தின் சிறப்பையும் பெற்றுள்ளது.

வும் எதிர்ப்பின்றியும் இறந்தே வைக்கப் பட்டிருக்கின்றன. மோகினியையும், உன்னையும் என்னையும் போல் நிதானமாக நடந்து வருகிறவர்களுக்கும் நியாயத்தையும் அதனால் வருகிற துன்பங்களையும் ஏற்றுக்கொண்டு செல்ல விரும்புகிறவர்களுக்கும் வாழ்க்கையின் எல்லா வழிகளிலும் ஏதாவதொரு தடை காத்துக்கொண்டிருக்கிறது. 'கார்ட்டூன்' படத்தில் யாராவது ஒருவர் சிரிப்பதாக நான் வரைந்தேனானால் 'அவர் சிரித்துக் கொண்டிருக்கிறார்' என்ற தோற்றம் முக்கியமல்ல! எதற்காக என்ன பாவனையில் சிரித்துக் கொண்டிருக்கிறார் என்ற குறிப்புத்தான் முக்கியம். அதைப் போல் மனிதன் வாழ்கிறான் என்பதை விட, எப்படி எதற்காக வாழ்கிறான் என்பதுதான் முக்கியம். ஆனால் கண்ணாயிரத்தைப் போன்றவர்கள் 'எதற்காக வாழ்கிறார்கள்?' என்ற கேள்வி தங்களைப் பற்றிப் பிறரிடம் எழுவதற்குக் கூட அவகாசம் கொடுக்காமல் அத்தனை வேகமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆமை முயல் கதையில் 'ஸ்லோ அண்ட் ஸ்டடி வின்ஸ் தி ரேஸ்' (மெதுவாகவும் நியாயமாகவும் போய்ப் பந்தயத்தில் வெற்றியடையலாம்) என்று மூன்றாவது வகுப்பில் நீயும் நானும் படித்த நீதி போதனை இப்போது இந்த வயதுக்கும் இந்த நாள் அநுபவங்களுக்கும் ஏற்றாற் போல் புதிய தொனியுடன் எனக்கு இன்னும் ஞாபகம் வருகிறதடா சத்தியம். உலகத்தின் அநியாயங்களையும், பரபரப்பையும் பார்த்து நாம் பொறுமை இழந்து போகிற சமயங்களில் இந்த நீதிக் கதையின் மேலும் இதை எழுதியவன் மேலும் கோபம் கோபமாக வருகிறது. துன்பங்களால் பொறுமை இழந்து தவிக்கும் சில சமயங்களில் நீதி நூல்களையும், அற நூல்களையும் வாழ்க்கையில் நன்றாக ஏமாறிய அப்பாவிகள் ஒன்று சேர்ந்து கொண்டு எழுதி வைத்திருப்பார்களோ என்று கூடத் தோன்றி விடுகிறது. இப்படித் தோன்றுவது பாவமாயிருக்கலாம். ஆனாலும் 'இப்படி நினைப்பது பாவம்' என்ற எச்சரிக்கையோடு சேர்த்தே நாம் நினைக்கிற பாவங்கள் இல்லையா? அவற்றில் இதையும் ஒன்றாக வைத்து நமக்கு நாமே மன்னித்துக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. இன்னும் நிறைய எழுத வேண்டுமென்று நினைக்கிறேன். ஆனால் இப்போது நேரமில்லை. அவற்றை இன்னொரு கடிதத்தில் எழுதுகிறேன்' என்று முடித்திருந்தான் குமரப்பன். அந்தப் பெரிய கடிதத்தை இரண்டாம் முறையாகவும் மூன்றாம் முறையாகவும் படிக்கும் போது எல்லா இடங்களையும் படிக்காமல், முக்கியமான இடங்களை மட்டுமே சத்தியமூர்த்தி திரும்பப் படித்திருந்தான். ஆனாலும் அன்று மாலையில் அவன் மனம் உணர்ந்து தவித்த தனிமையிலிருந்தும் சூனியத்திலிருந்தும் அவனை விடுதலை செய்திருந்தது அந்தக் கடிதம். கல்லூரியில் வார்டனும் சக ஆசிரியர்களும், உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசிப் பழகும் நிலையை நினைத்து மனம் வெந்து கொண்டே அரை நாள் விடுமுறை எடுத்துக் கொண்டு அறைக்குத் திரும்பியிருந்தவனை அந்தக் கடிதம் வலிமையுள்ளவனாக்கியிருந்தது. கடிதத்தையும் அதனோடிருந்த புகைப்படங்களையும், அறைக்குள் மேஜை டிராயரில் கொண்டு போய் வைத்துவிட்டுப் பூட்டிக்கொண்டு சாப்பிடப் புறப்பட்டான் சத்தியமூர்த்தி. மாலையும் இரவும் கலந்து மயங்குகிற அந்த வேளையில் மல்லிகைப்பந்தல் நகரத்தின் இதயம் போன்ற பகுதியாகிய 'லேக் சர்க்கிள்' கலகலப்பாக இருந்தது. கார்களின் ஹாரன் ஒலிகளும், பச்சையும், சிவப்புமாக மின்னி மறையும் விளக்கு ஒளிகளும், கூட்டம், கூட்டமாக ஆண்களும், பெண்களுமாய்ச் சிரித்துப் பேசிக் கொண்டு போகும் மனிதர்களின் குரல்களும், வானொலி இசையும், ஏரியில் படகுகள் நீரைக் கிழிக்கும் ஓசையுமாகச் சூழ்நிலையில் உயிரோட்டம் நிறைந்திருந்தது. சாலையின் இரு பக்கத்திலும் பாக்கு மரங்கள் பாளை வெடித்துப் பூத்துக் குலை தள்ளியிருந்தன போலும்! அந்த வாசனை வீதியெல்லாம் நிறைந்து பெருமைப்படுத்திக்கொண்டிருந்தது. எப்படி எந்தச் சொற்களினால் வருணித்து முடிக்கலாமென்று நினைக்கவும் முடியாத மங்கலமான வாசனையாயிருந்தது அது. கோயில் மூலக் கிருகத்தின் புனிதமும்



மல்லிகை பிச்சிப் பூக்களின் மயக்கும் தன்மையும், கஸ்தூரியின் கமகமப்பும் எல்லாம் சேர்ந்தாற் போன்ற நறுமணமாயிருந்தது. இந்த நறுமண வீதியில் நடந்து போய்க் கொண்டிருந்த போது சத்தியமூர்த்திக்கு வேறு ஒரு வாசனையும் ஞாபகம் வந்தது. மோகினியின் வீட்டில் மல்லிகைப் பூக்களும் அகிற்புகையும் மணந்து கொண்டிருந்த சாயங்கால வேளை ஒன்றில் அவளோடு அமர்ந்து பேசிக் கொண்டிருந்ததை நினைத்தான் அவன். வாசனைக்கும் மனிதனுடைய ஞாபகங்களுக்கும் ஏதோ ஒரு நுணுக்கமான தொடர்பு இருக்க வேண்டும் போலும். லேக் அவென்யூவில் தன்னுடைய மாடி அறையிலிருந்து சத்தியமூர்த்தி ஒவ்வொரு நாள் வைகறையிலும் படியிறங்கிக் கீழே வரும்போது 'ராயல் பேக்கரி' வாசலில் படரவிட்டிருக்கும் கொடி மல்லிகை பொல்லென்று பூத்துக் கொட்டியிருக்கும். காலை நேரத்தின் குளிர்ச்சி நீங்காத சூழலில் அந்தப் பூக்களின் வாசனையை நுகர்கிற முதல் மனிதனாக அதைக் கடந்து மேலே நடந்து தெருவுக்குள் போவதற்கு முன்பாகச் சத்தியமூர்த்தி ஒரு கணம் அந்த இடத்தில் தயங்கி நிற்பது வழக்கம். அந்த இடத்தில் நின்றால் நேர் எதிர்ப் பக்கம் வெள்ளி உருகி மின்னுகிறதோ என ஏரிக்கு அப்பால் தெரியும் மலைமுகட்டில் ஓர் அருவி மலையே சிரித்துக் கொண்டிருப்பது போல் தெரியும். அந்த அருவியைப் பார்த்து வியந்து கொண்டே, 'மலை நகைத்தனைய வெள்ளருவி' என்று பாடப்பட்டிருக்கும் அழகிய இலக்கியத் தொடரையும் நினைத்துக்கொண்டு மேலே செல்வது அவன் வழக்கம். அந்தக் கொடி மல்லிகைப் பூக்களின் வாசனையில் தயங்கி நிற்கும் போது, சில வாரங்களுக்கு முன்பு சங்கீத விநாயகர் கோயில் தெருவின் அந்தச் சின்னஞ் சிறு வீட்டில் முருகன் படத்திலிருந்து தவறிக் கழுத்தில் விழுந்த மல்லிகைப் பூமாலையும் அந்த மாலையோடு மாலையாகச் சேர்த்துத் தோள்களைப் பற்றிய கைகளும் அவற்றின் நறுமணமும் சத்தியமூர்த்தியின் நினைவில் தோன்றி நிறைவது உண்டு. அந்தப் பூக்களின் வாசனையை நினைக்கும்போது அவனால் மோகினியையும் சேர்த்து நினைக்காமல் இருக்க முடியாது. அன்றிரவு பாக்கு மரங்கள் பூத்து மணக்கும் வீதி வழியே இரவுச் சாப்பாட்டுக்காக உணவு விடுதிக்குச் சென்றபோதும், அதே வழியாகத் திரும்பி வந்தபோதும், அவன் நினைவுகளை மோகினியே ஆண்டுகொண்டிருந்தாள். அறைக்குத் திரும்பியதும் மேஜை விளக்கைப் போட்டு டிராயரிலிருந்து அந்தப் புகைப்படங்களை எடுத்துப் பார்த்தான் அவன். நீலப் பட்டுப் போர்த்த மேஜை விளக்கின் அடங்கிய மெல்லொளியில் உயிருள்ள மோகினியே 'கவிஞரின் யாத்திரை'யில் வருகிற சிற்றுருவம் போலத் தத்ரூபமாகச் சிரித்துக் கொண்டிருந்தாள். 'மந்தமாருத நடையிற் — சிந்தும் நகையொடு சிவந்த இதழ்கள்' — என்று நவநீத கவியின் பாடல் ஒன்று ஆரம்பமாகும். அந்தப் பாடலின் பெயர் 'கன்னிமைக் கனவுகள்' என்பது. அந்தப் பாடல் வரியையும் நினைத்துப் படத்தில் சிரித்துக் கொண்டிருக்கிற மோகினியையும் பார்த்தான் சத்தியமூர்த்தி. அந்த நிலையில் பதிலுக்குத் தானும் சிரிக்க வேண்டும் போலப் பாவித்துக் கொண்ட காரணத்தால் அப்போது அவன் இதழ்களும் அந்தப் படத்தை நோக்கி மலர்ந்தன. மறு நாள் காலையில் கல்லூரி வகுப்புக்களில் செய்ய வேண்டிய சொற்பொழிவுகளுக்காகச் சிந்தனை செய்தும் இரண்டொரு புத்தகங்களைப் படித்தும் சில குறிப்புக்கள் எடுக்க வேண்டியிருந்தது. இரவு எட்டரை மணியிலிருந்து ஒன்பதரை மணி வரை ஒரு மணி நேரம் அந்தக் காரியத்தைச் செய்து விட்டுப் படுக்கச் சென்றான் சத்தியமூர்த்தி. அன்றென்னவோ அவனுடைய ஞாபகத்தில் மோகினியே இருந்தாள். சித்திரா பௌர்ணமியன்றே தான் பெருமிதமாக ஆண்டாள் நடனத்தை ஆடியதாகக் குத்துவிளக்கு பேட்டியில் அவள் மறுமொழி கூறினாள் என்று அறிந்ததும் சத்தியமூர்த்தி அவளுடைய அன்புக்காகப் பெருமிதப்பட்டான். சித்திரா பௌர்ணமியன்று நாட்டியம் முடிந்ததும் அவளோடு தனிமையில் பேசிக் கொண்டிருந்தபேச்சும் அவனுக்கு நினைவு வந்தது. அன்று அவன் எதைச் செய்தாலும் அவளுடைய நினைவிலேயே போய் முடிந்தது. எதைத் தொடங்கினாலும் அவளுடைய நினைவோடுதான் ஆரம்பமாயிற்று. குளிர்ந்த காற்றும் பாக்கு மரங்களின் பூத்த நறு மணமுமாக அறைக்குள் படுக்க சில விநாடிகளில் ஆழ்ந்து உறங்கிப்போயிருந்தான் சத்தியமூர்த்தி. அன்றிரவு உறக்கத்தில் அவன் ஒரு கனவு கண்டான். உறங்குவதற்கு முந்திய ஞாபகங்களும், நினைவுகளும் பொருத்தமாகவும், பொருத்தமின்றியும், இணைந்தும், இணையாமலும் அந்தக் கனவாக விளைந்திருந்தது

எல்லா விதத்திலும் அந்தக் கனவின் நிகழ்ச்சிகள் அபூர்வமாகவும் இருந்தன.

ஃ ஃ ஃ

பிரம்மாண்டமான பெரிய பெரிய கட்டிடங்கள், வரிசை வரிசையாக அணி வகுத்திருக்கும் ஓர் அழகிய வீதி தெரிகிறது. அந்த வீதியின் நடுவே கிழிந்த சட்டையும் அழுக்கடைந்த வேட்டியுமாக அத்தகைய வீதியின் அழகுக்கும் செழிப்புக்கும் சிறிதுகூடப் பொருத்தமில்லாத பிரகிருதியாகச் சத்தியமூர்த்தி நடந்து போய்க் கொண்டிருக்கிறான். அவனுடைய முகம் பொலிவிழந்து, தளர்ச்சியாகவும் சோர்ந்தும் தெரிகிறது. வாழ்க்கையில் நீதி நேர்மைகளுக்காகப் போராடிப் போராடிச் சலித்த சலிப்பு நடையில் தெரிகிறது. ஆனால் அந்தச் சலிப்பான வேளையிலும் அவனுடைய வலது கால்தான் நடப்பதற்கு முந்திக் கொண்டிருக்கிறது. அப்படி அவன் அந்த வீதியில் நடந்து போய்க் கொண்டிருக்கும் போது நடு வழியில் ஒரு சம்பவம் நேரிடுகிறது. வீதியின் வலது சிறகில் உல்லாச மாளிகையாய்த் தெரியும் ஒரு பெரிய வீட்டின் பளபளப்பான சலவைக் கல் படிகளில் பாதசரங்களும், கொலுசுகளும், சலங்கையும் ஒலிக்க—ஒலிகளின் இனிமையெல்லாம் ஒன்றாகி நடந்து வருவது போல் அவசர அவசரமாகப் படி இறங்கி ஓடி வந்து ஒரு பெண் மின்னலாய் எதிர் நின்று அவனை வழிமறிக்கிறாள். அவள் விடுபட்டு இறங்கி வந்த வீட்டிற்குள்ளிருந்து சகல விதமான வாத்தியங்களின் இனிய ஒலிகளும் அவளைத் தேடி மீண்டும் அழைப்பது போல் ஒலித்துக் கொண்டிருக்க அந்த ஒலிகளைச் சிறிதும் பொருட்படுத்தாமல் தன் இதயத்தில் இடைவிடாமல் ஒலித்துக் கொண்டிருக்கும் வேறு ஓர் ஒலிக்கு மதிப்பு அளிக்கிறவளாய் அவனருகே வந்து நின்றாள் அவள். சிறிது நேரம் ஒன்றும் பேசத் தோன்றாமல் கண்கலங்கி, நீர் மல்க நின்ற பின் அவள் கீழே குனிந்து, நெடுந் தூரத்து வழிநடையால் புழுதி படிந்து பொலிவும் நிறமுமற்றிருந்த அவனுடைய பாதங்களைத் தொட்டுத் தன் கண்களில் ஒத்திக் கொள்கிறாள். அந்த நிலையில் அவனுடையதோ பிச்சைக்காரனுக்கேற்ற பஞ்சைக் கோலமாக இருந்தது. அவளுடையதோ தெருவில் இறங்கி வந்து மண்ணின் மேல் நிற்கவே கூசும் அப்சரஸின் அழகுத் தோற்றமாயிருந்தது. எதிரே வந்து நிற்கிறவளை அவன் பார்க்கிற பார்வை விழித்த பின் கனவைப் பார்ப்பது போல் வேற்றுமையானதாக இருக்கிறது. அவளுடைய வணக்கத்தையும் அன்பையும் ஏற்றுக் கொள்ளத் தயங்கியவனாக மெல்லிய குரலில் அவன் சொல்கிறான்:

"என்னுடைய புழுதி படிந்த கால்கள் நீ தொழுவதற்குத் தகுதியற்றவை பெண்ணே!"

இந்த வார்த்தைகளைச் சொல்லும் போது தன்னுடைய சொல்லும் நாவும் குழறிப்போய்த் தடுமாறுகிறான் அவன். அவளோ பிடிவாதமாக அவனையே தொழுகிறாள்.

"ஐயா! அப்படிச் சொல்லாதீர்கள். இந்தக் கால்களில் வந்து படிந்திருப்பதனாலேயே தூசிக்கும் கூடத் தொழத் தக்க மதிப்பு ஏற்படுகிறது" என்று கண்களில் நீர் நெகிழ அவன் கால்களில் வீழ்ந்து கதறுகிறாள் அவள்.

"இந்த ஏழையைத் தொழுவதனால் ஒரு பயனுமில்லை" என்று தன்னை விடுவித்துக் கொண்டு மேலே நடக்க முயல்கிறான் அவன்.

"ஆதரவற்றதெல்லாம் ஏழைதான்! அந்த விதத்தில் உண்மையும் ஏழையாயிருப்பதில் தவறில்லை" என்கிறாள் அவள்.

"உன்னுடைய இந்த அன்பு எனக்குப் பூட்டும் விலைமதிப்பற்ற விலங்காக இருக்கிறது பெண்ணே! இந்த விலங்கைக் கழற்றினாலும் எனக்கு வேதனை. கழற்ற முடியாவிட்டாலும் வேதனை" என்று அவன் பதிலுக்குக் கதறுகிறான்.

ஃ ஃ ஃ

இவ்வளவில் அவனுடைய கனவு அரைகுறையாகக் கலைந்து போய் விடுகிறது. சரியாக இந்தக் கனவு தொடங்கிக் கலைந்து சத்தியமூர்த்திக்கு விழிப்பு வந்த போது விடியற்காலை ஐந்து மணிக்கு மேலாகியிருந்தது. விழித்து எழுந்த பின் நீராடுவதற்காகக் குளியலறைக்குள் புகுந்த போதும், உடை மாற்றிக் கொண்டு தலை சீவுவதற்காகக் கண்ணாடியில் முகம் பார்த்துக் கொண்ட போதும் அவன் மோகினியைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தான். மாடியிலிருந்து காப்பி அருந்தி வருவதற்காகக் கீழே படி இறங்கியபோது எதிரே தெரிந்த அருவியும், அருகே பூத்து மலர்ந்திருந்த மல்லிகையும் சேர்ந்து அவன் நினைப்பை அண்டின. 'கால நடையினிலே உன்றன் காதல் தெரியுதடீ' என்று முணுமுணுத்தபடி மெல்ல மேலே நடந்தான் சத்தியமூர்த்தி.

(தொடரும்)




"பத்திரிகைத் தொழில் என்பது கல்யாணத்தைப் போன்றது: பிரம்மச்சாரிக்குக் கலியாணம் செய்துகொள்ள வேண்டும் என்பதில் அளவிட முடியாத ஆசை. கலியாணத்தைப் பற்றி அவன் காண்பவை யெல்லாம் பொற் கனவுகள். கலியாணம் செய்து கொண்டவனுக்கோ, 'ஏனடா, கலியாணத்தைப் பண்ணிக் கொண்டோம்? இந்த வாழ்க்கையிலிருந்து விடுபடுவது எப்படி?' என்ற தவிப்பு. இதைப் போலத் தான் பத்திரிகைத் தொழிலில் புகுவதற்கு ஒவ்வோர் எழுத்தாளனுக்கும் ஆசை; அதில் அகப்பட்டுக் கொண்டவனுக்கோ, 'இதை உதறிவிட்டு வேறு வேலை செய்ய மாட்டோமா?' என்ற கவலையும் ஏக்கமும்!"

மேற்கண்டவாறு சொல்லுவாராம் தமிழ் நாட்டுப் பத்திரிகை ஆசிரியர் ஒருவர்.

அச்சடிப்பதற்கு உபயோகிக்கப்படும் கறுப்பு மைக்கு மந்திர சக்தியோ மாய சக்தியோ இருக்கிறது என்று கூறுவாராம் வேறொருவர். "இந்த மையைத் தொட்டு விட்டால் போதும். அப்புறம் ஜன்மத்துக்கும் விடாது. கறுப்பு மை அப்பேர்ப்பட்ட பொல்லாத மை!" என்று அவர் சொல்லுவது வழக்கமாம். கறுப்பு மை என்ற ஆகுபெயரால் அவர் குறிப்பிடுவது பத்திரிகைத் தொழிலையே.

மேற்சொன்ன அனுபவசாலிகள் கூறியதில் துளிக்கூடப் பொய் கிடையாது. அவை நூற்றுக்கு நூறு உண்மையான அநுபவ வாசகங்கள் என்பதை நானும் கண்டுகொண்டேன். சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் சர்க்கார் குமாஸ்தா வேலை பார்த்துக் கொண்டிருந்த நான், பத்திரிகைத் தொழிலின் மீது இருந்த மாயக் கவர்ச்சியால் இழுக்கப்பட்டு, பார்த்துக் கொண்டிருந்த வேலையையும் ராஜிநாமாச் செய்து விட்டுச் சென்னைக்கு வந்து கறுப்பு மையைத் தொட்டேன்.

**நா**ன் வெறும் எழுத்தாளனாக மட்டும் இருந்த போது கதை கட்டுரை, கவிதை, மொழிபெயர்ப்பு முதலியவற்றை எழுதிக் கொண்டிருந்தேன். அந்த ஆரம்ப காலத்தில் நான் எழுதிய மட்டாகமான கதை கட்டுரைகளைக்கூட மாற்றாமல் அப்படியே பிரசுரித்து வந்த ஓர் ஆசிரியர், நான் எழுத்தில் ஓரளவு தேர்ச்சியும், பக்குவமும் அடைந்த பின்பு அவருடைய பத்திரிகையில் அவருக்குக் கீழ் உதவி ஆசிரியர் வேலை செய்யத் தொடங்கியதும், என் நல்ல கதைகளையும் கட்டுரைகளையும் கூடத் "திருத்த" ஆரம்பித்தார்; அபத்தமான சில மாறுதல்களைச் செய்தார்; சிலவற்றைப் பிரசுரிக்காமல் நிராகரிக்கவும் செய்தார். இத்தனைக்கும் அவருக்கு ஒரு சிறுகதையைச் சிறுகதையாக எழுதவோ அடையாளம் கண்டு கொள்ளவோ முடியுமா என்றால், முடியாது. எனக்கு வந்த ஆத்திரத்துக்கு எல்லையில்லை. 'உன்னைவிட நான் கெட்டிக்காரன்' என்று காட்டிக் கொள்ளும் நோக்கத்துடனேயே அவர் ஏதாவது மாறுதல் செய்யவும் கதைகளைத் திருப்பிக் கொடுக்கவும் ஆரம்பிக்கவே, இந்தப் பத்திரிகையை விட்டு வெளியேறும் வரை ஏதுவும் எழுதுவதில்லை என்று விரதம் வைத்தேன். துரதிர்ஷ்டவசமாக அந்த விரதம் நான் விரும்பாமலே இன்னும் நீடிக்கிறது. ஆடிக்கு ஒன்று அமாவாசைக்கு ஒன்றாக எழுதுவதே என் வழக்கமாகி விட்டது.

**ஓ**ர் அரசியல் வாரப் பத்திரிகையில் என்னை வலுக் கட்டாயமாகக் கொண்டு போய்ச் சேர்த்தார் ஒரு நண்பர். அந்தப் பத்திரிகையின் ஆசிரியரும் (முதலாளியும் அவரே) என் நண்பரும்




*சிறுகதை எழுத்தாளர்களின் வரிசையில் முன்னணியில் நிற்பவர் திரு கு. அழகிரிசாமி. தம்முடைய பத்திரிகை அநுபவங்களை இவர் சுவைபடக் கூறுகிறார். கறுப்பு மையின் சக்தியைக் கூறும் அழகே தனிதான்.*

உயிர்த் தோழர்கள். ஆசிரியர் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையில் கிடந்ததால், அந்தச் சமயத்தில் அவருக்கு உதவி செய்ய வேண்டும் என்பதற்காக, பத்திரிகையை வெளியிட்டு வரும் முழுப் பொறுப்பையும் என் நண்பர் என்னிடம் ஒப்படைத்தார். எனக்கு உதவியாக இருவரையும் நியமித்தார்கள். ஆசிரியர் என்று என் பெயர் போடப்படாவிட்டாலும் நான்தான் நடைமுறையில் ஆசிரியனாக இருந்தேன். தலைமை ஆசிரியர் படுக்கையில் இருந்ததால் காரியாலயத்துக்கு வருவதே இல்லை.

அந்தப் பத்திரிகையில் துக்கச் செய்தியைக்கூடக் காரசாரமாக, கனல் கக்கும் பாஷையில்தான் எழுத வேண்டும்!

நானும் அவ்வாறே எழுதி வந்தேன்!

ஒரு சமயம் சட்ட சபைத் தேர்தல் வந்தது. அதில் காங்கிரஸ் அபேட்சகராகத் தம்மை நியமிக்கும்படி, வல்லபாய் பட்டேலின் தலைமையில் அமைக்கப்பட்டிருந்த தேர்தல் கமிட்டிக்கு ஒரு தியாகி மனுச் செய்திருந்தார். இந்தத் தியாகியின் பெயரைச் சௌகரியத்துக்காக, ''கப்பையா'' என்று வைத்துக் கொள்வோம். இந்தக் கப்பையாவைக் காங்கிரஸ் அபேட்சகராக நிறுத்தாமல், ''ராமையா'' (இதுவும் கற்பனைப் பெயரே) என்ற ஒருவரை நிறுத்தி விட்டார்கள். ராமையா எப்படிப்பட்டவர் என்று எனக்குத் தெரியாது. அவர் எப்படிப்பட்டவராக இருந்தாலும் எனக்குக் கவலை இல்லை. நாடறிந்த உண்மைத் தியாகி கப்பையாவை அபேட்சகர் ஆக்காதது எனக்கு ஆத்திரத்தை உண்டுபண்ணியது. உடனே என் ஆத்திரத்தைக் கொட்டி ஒரு கட்டுரை எழுதினேன்.

எழுதியதை அச்சுக்குக் கொடுத்தேன். மறு நாள் வெளியாகப் போகும் இதழில் கட்டுரை வரவேண்டும் என்று அச்சக மேஸ்திரியிடம் கட்டளை பிறப்பித்து விட்டு வீட்டுக்கு வந்து விட்டேன்.

**எழுத்தும் தொழிலும்**

மறு நாள் ஒரு நண்பரின் கலியாணத்துக்குப் போயிருந்தேன். அந்தக் கலியாணத்துக்கு என் நண்பர்கள் பலரும் மேற்படி கப்பையாவும் வந்திருந்தார்கள். எல்லோரும் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். சிவபூஜை வேளையில் கரடி நுழைந்தது போல் என் நண்பர் ஒருவர் திடும் பிரவேசமாக அந்த இடத்துக்கு வந்தார். அவர் கையில், நான் வேலை பார்க்கும் பத்திரிகையின் பிரதி ஒன்று இருந்தது.

''ஐயா, ஆசிரியரே! உங்கள் பத்திரிகை யாரை ஆதரிக்கிறது? கப்பையாவையா? ராமையாவையா?'' என்று கேட்டார் நண்பர்.

''ஏன் எதற்காகக் கேட்கிறீர்கள்?'' என்றேன்.

''உங்கள் பத்திரிகையை இப்பொழுதுதான் பார்த்தேன். முதல் பக்கம் ராமையாவை ஆதரிக்கிறது; கடைசிப் பக்கம் கப்பையாவை ஆதரிக்கிறது! அதனால்தான் சந்தேகம் வந்து உங்களைக் கேட்கிறேன்'' என்றார் நண்பர்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. உடனே பத்திரிகையை வாங்கிப் பார்த்தேன். எல்லோரும் என்னையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். கப்பையாவும் ஓர் அசட்டுச் சிரிப்புடன், சாப்பிடுவதை நிறுத்தி விட்டு என்னைக் கவனிக்கலானார்.



# அபாரசக்தி

கு.அழகிரிசாமி

கப்பையாவைப் புகழ்ந்தும் ராமையாவை இகழ்ந்தும் நான் எழுதிய முழுப் பக்கக் கட்டுரை கடைசிப் பக்கத்தில் வெளியாகியிருந்தது. பத்திரிகையின் வழக்கம் போல் எழுதியவரின் பெயர் போடப்படவில்லை. இதே போலவே, எழுதியவரின் பெயரின்றி முதல் பக்கத்தில் வெளியாகியிருந்த வேறொரு கட்டுரை, ராமையாவை இந்திரன் சந்திரன் என்று புகழ்ந்து, அவரே சட்ட சபையில் ஸ்தானம் வகிக்க அருகதை உடையவர் என்றும் கூறி, கப்பையாவைக் கண்டபடி திட்டியிருந்தது!




"இது என்ன ?"

"பையன் சர்டிபிகேட்டு...."

"சரி, அந்தக் கையிலே ?"

"பையனை ஒண்ணாங்கிளாஸிலே சேர்க்கிறதுக்காக மந்திரி, எம். எல். ஏ., எம்.எல்.ஸி., மேயர், ஜட்ஜ் முதலான பெரிய மனுஷா எல்லாம் கொடுத்திருக்கிற சிபாரிசுக் கடிதங்கள்."

---

இதை எழுதியவர் பத்திரிகையின் தலைமை ஆசிரியர்! அவர் நோய்ப் படுக்கையிலிருந்து தட்டுண்டு தடுமாறி எழுந்து உட்கார்ந்து, மிகுந்த சிரமத்தின் பேரில் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு இப்படி எழுதியிருக்கிறார் என்பது பின்னும் தெரிந்தது.

கல்யாண வீட்டில் அத்தனை பேருக்கும் நடுவில் நான் எப்படிச் சமாளித்து எப்படி வெளியே வந்தேன் என்பதை நினைக்கும் போது எனக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது.

மறு நாளும் அதற்குப் பிறகு இரண்டு நாட்களும் வழக்கம் போல் நான் ஆபீசுக்குப் போனேன். நான்காம் நாள் பத்திரிகையின் ஆசிரியர் தள்ளாடிக் கொண்டே காரிலிருந்து இறங்கி ஆபீசுக்குள் நுழைந்தார். எனக்குத் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. அவர் உள்ளே வந்து சாவதானமாகத் தமது ஆசனத்தில் அமர்ந்தார். எதுவும் பேசாமல் ஏழெட்டுக் கடிதங்களை மட்டும் என் முன்னே நீட்டினார். வாங்கிப் பார்த்தேன். அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியாக இருந்தது.

எல்லாக் கடிதங்களும் தவற்றைச் சுட்டிக் காட்டி ஏளனம் செய்வதாயிருந்தன.

நான் பயந்து நடுங்கிக் கொண்டே, "நீங்கள் இந்த மாதிரி எழுதப் போகிறீர்கள் என்று முன்கூட்டியே தெரிந்திருந்தால்...." மென்று விழுங்கிக் கொண்டே இழுத்தேன்.

அதற்கு ஆசிரியர் என்ன பதில் சொன்னார் தெரியுமா? "இதைப் பற்றி ஏன் கவலைப் படுகிறீர்கள்? இவர்கள் இப்படித்தான் எதையாவது எழுதிக் கொண்டிருப்பார்கள். நீங்கள் இந்தக் கடிதங்களை லட்சியம் பண்ணவே வேண்டாம்!" என்றார்.

உண்மையிலேயே இந்த உலகத்தில்தான் இருக்கிறேனா என்ற சந்தேகமே வந்து விட்டது எனக்கு.

ஆசிரியரின் துணிச்சலைக் கண்டு மிரளுவதா? அவர் எனக்கு அளிக்கும் சுதந்திரத்தைக் கண்டு வியப்பதா? பெருந்தன்மையைக் கண்டு மகிழ்வதா? எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

**வா**ரப் பத்திரிகையை விட்டபின் ஒரு மாதப் பத்திரிகைக்கு ஆசிரியன் ஆனேன். அந்தச் சமயத்தில் ஒரு சினிமாப் பத்திரிகையின் முதலாளி என்னிடம் வந்து, "ஸார்; நமது பத்திரிகைக்கு ஓர் ஆசிரியர் தேவை. அந்தப் பொறுப்பை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா? அல்லது வேறு சரியான ஆள் யாரையாவது சிபாரிசு செய்கிறீர்களா?" என்று கேட்டார்.

"உங்கள் பத்திரிகைக்கு ஆசிரியராக இருக்கும் தகுதி ஒரே ஒருவருக்குத்தான் இருந்தது. அவர் இப்போது உயிரோடு இல்லையே என்று வருத்தமாக இருக்கிறது" என்றேன்.

"யார் ஸார் அவர்?" என்றார் ஆவலோடு.

நான் உடனே, "மகாத்மா காந்தி!" என்றேன்.

"மகாத்மா காந்தியா? என்ன ஸார் நீங்கள், இப்படிப் பேசுகிறீர்கள்! சினிமாப் பத்திரிகைக்கு மகாத்மா காந்தி ஆசிரியரா?" என்று சங்கடப்பட்டார் அவர்.

"ஆம், ஐயா. அவருக்குத்தான் சேர்ந்தாற் போல் இருபது நாள் முப்பது நாள் உண்ணாவிரதம் இருந்து பழக்கம். அதற்காகச் சொன்னேன்" என்று நான் கூறினேன்.

"என்ன சார், விளையாடுகிறீர்களே" என்று சொல்லிக் கொண்டே எழுந்து போய் விட்டார்.

நல்ல வேளையாக அவருடைய பத்திரிகை இரண்டு மூன்று மாதங்களில் மறைந்து விட்டது. அது அப்படி அற்பாயுளில் மறைந்திரா விட்டால், அதன் ஆசிரியர்கள் பலரும் அற்பாயுளில் மறைந்திருப்பார்கள்! அவர் சம்பளம் கொடுக்கும் அழகு அப்படி!

**இ**தன் பிறகு தினசரிப் பத்திரிகை ஒன்றின் ஆசிரியர் ஆனேன் நான். இந்தப் பதவி எனக்குக் கிடைத்தது, மலாயாவின் தலைநகரான கோலாலம்பூரில்.

அப்போது வெளியூரைச் சேர்ந்த ஒரு கடைச் சிப்பந்தி ஒரு கடை முதலாளியைப் பற்றிப் புகார் செய்து ஒரு கடிதம் எழுதியிருந்தார். அந்த முதலாளி சிப்பந்திகளை மிகவும் கொடுமைப்படுத்தியதாகவும் சட்ட விரோதமாக எட்டு மணி நேரத்துக்கு அதிகமாக வேலை வாங்குவதாகவும், சில நாட்களில் கடையைப் பூட்டி வைத்துக் கொண்டு உள்ளே நள்ளிரவு வரை சிப்பந்திகளை வேலை செய்யச் சொல்லுவதாகவும், எனவே சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அந்த முதலாளி மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் அந்தச் சிப்பந்தி எழுதியிருந்தார். புனைபெயருடன் எழுதப்பட்ட

டாக்டரின் நண்பர்: நீயே ஒரு டாக்டராயிற்றே! இன்னொரு டாக்டரைக் கூப்பிடுவானேன்? உன் மனைவியின் நோயை நீயே பார்த்துக் குணப்படுத்த முடியாதா?

டாக்டர்: முடியும். ஆனால் அவர் பீஸ் ஐந்து ரூபாய். என் பீஸ் இருபது ரூபாய். நஷ்டப்படலாமா? லாபத்தைப் பார்க்க வேண்டாமா?

அந்தக் கடிதம், ''ஆசிரியருக்குக் கடிதங்கள்'' என்ற பகுதியில் வெளி வந்து விட்டது. வெளியிட்டவர் ஓர் உதவியாசிரியர். அந்தப் பகுதியைக் கவனித்துக் கொள்ளுவது அவரது பொறுப்பு. இந்தக் கடிதம் வெளியான தினத்தன்று மாலையிலேயே பிரஸ்தாப முதலாளி காரியாலயத்துக்கு நேரில் வந்து விட்டார். அவர் சுமார் முப்பது மைல் தூரத்தில் உள்ள ஒரு சிறு நகரில் பெரிய வியாபாரி என்றும் அவர் வாயாலும் பிறர் சொல்லவும் கேள்விப்பட்டேன். அவர் ஒரு முஸ்லிம் என்பது இங்கே குறிப்பிட வேண்டிய விஷயம்.

பத்திரிகையைப் புரட்டி என்னிடம் காட்டி, ''இக் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கும் முதலாளி நான்தான். இதை எழுதியவரின் உண்மைப் பெயர் என்ன?'' என்று அவர் கேட்டார்.

''கடிதங்கள் எழுதியவர்களின் உண்மைப் பெயரை நாங்கள் சொல்லுவது வழக்கமல்ல. அது முறையும் ஆகாது. இது பொய்க் கடிதம் என்றால், நீங்கள் மறுப்பு எழுதிக் கொடுங்கள், வெளியிடுகிறோம்'' என்றேன்.

''மறுப்பா? இந்தக் கடிதத்துக்கு அது வேறு கேடா? உங்களால் பெயரைச் சொல்ல முடியுமா? முடியாதா? முடியாது என்றால், நான் கோர்ட் மூலம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுகிறேன். என் சொத்துக்களை இழந்தாலும் சரி, நான் ஒரு கைபார்க்காமல் விடமாட்டேன். நான் வருகிறேன்'' என்று அவர் எழுந்து விட்டார்.

நான் அவர் கோபத்தைத் தணிக்கும் முறையில், ''ஏன், என்ன விஷயம்? இவ்வளவு தூரம் ஏன் கோபப்படுகிறீர்கள்?'' என்றேன்.

''நீங்கள் இந்தக் கடிதத்தை வெளியிட்டிருக்கிறீர்களே, இதில் குறிப்பிட்டிருக்கும் இந்த அரபு வார்த்தைக்கு என்ன அர்த்தம் என்று உங்களுக்குத் தெரியுமா? இந்த வார்த்தையைச் சொல்லி அவன் என்னைத் திட்டியிருக்கிறான். ஒரு முஸ்லிமைப் பார்த்துச் சொல்லக் கூடாத ஒரு பாவகரமான வார்த்தை இது. எந்த முஸ்லிமும் இதைக் காதால் கேட்கவும் பொறுக்க மாட்டான்'' என்றார் அவர்.

''தவறு என்றால் வருந்துகிறோம். எங்களுக்கு உண்மையில் அந்த வார்த்தைக்கு அர்த்தம் தெரியாது. தெரியாமல் வெளியிட்டதற்கு நீங்கள் கோபம் கொள்ளக் கூடாது'' என்று என்னென்னவோ சொல்லியும் அவர் கோபம் கொஞ்சமும் தணியவில்லை. மேற்கொண்டு எதுவும் பேசாமல் வெளியே போய் விட்டார்.

அந்தப் பயங்கரமான அரபு வார்த்தைக்கு யாரிடம் பொருள் கேட்பது என்று யோசித்துக் கொண்டிருந்தேன். எங்கள் காரியாலயத்தைச் சேர்ந்த ஒருவர், ''மலாயா முழுவதற்குமே இஸ்லாம் மத குருவாக இருக்கும் ஒரு பெரியவருக்குப் போன் பண்ணிக் கேட்டு விடலாம்'' என்று யோசனை சொல்லிக் கொண்டே அவருக்குப் போன் செய்தார்.

மலாயாவில் இஸ்லாம் ராஜாங்க மதம். அங்கே மத குருவுக்கு அபராதம் விதிப்பது உட்படப் பல அதிகாரங்களும் உண்டு என்பதை இங்கே தெரிந்து கொள்ள வேண்டும்.

என் நண்பர் அவருக்குப் போன் செய்த தினம் வெள்ளிக்கிழமை, மாலை நேரம். அப்பொழுதுதான் அந்த மதகுரு பள்ளி வாசலுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தாராம்.

''இந்த வார்த்தைக்கு என்ன அர்த்தம்?'' என்று நண்பர் கேட்டாரோ இல்லையோ, அவர் மிகுந்த கோபாவேசம் கொண்டு, ''அட, பாவி! இன்று வெள்ளிக் கிழமை. நான் பள்ளி வாசலுக்கு ஆசார அநுஷ்டானங்களுடன் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். இந்த நேரத்தில் இந்தப் பாவகரமான வார்த்தையைச் சொல்லித் தொலைத்தாயே! நீ நாசமாய்ப் போக!......'' என்று மலாய் மொழியிலேயே சபித்து விட்டார்!

என் நண்பரின் வாய் குழறியது; கைநடுங்கியது; டெலிபோன் ரிஸீவர் நழுவி மேஜை மீது 'டமார்' என்று விழுந்தது.

கடிதத்தை வெளியிட்ட உதவி ஆசிரியர் அவர் பக்கத்தில் இடிந்து போய் உட்கார்ந்து விட்டார்! பிறகு, வேறு ஒரு நண்பரைப் பிடித்து அவரிடம் நான் நடந்த கதையை யெல்லாம் சொன்னேன். அதைக் கேட்டு விட்டு, ''அப்படியா? நீங்கள் அர்த்தம் தெரியாமல் கடிதத்தைப் போட்டிருக்கக் கூடாது. சரி, நடந்தது நடந்து விட்டது. அந்த முதலாளி என் நண்பர்தான். அவரிடம் நானே நேரில் பேசிச் சமாதானப்படுத்தி அனுப்பி வைக்கிறேன். நீங்கள் கவலைப்பட வேண்டாம்'' என்று சொல்லிக் கைகொடுத்தார்.

அப்படியே அவர் தலையிட்டு, அந்த முதலாளியைச் சமாதானப்படுத்தி அனுப்பியும் வைத்தார்.

இந்த அனுபவத்தின் பிறகு, எந்தக் கடிதத்தையும் பல முறை படித்துப் பார்த்த பிறகே பத்திரிகையில் வெளியிடலானேன்.

ஆசிரியத் தொழிலில் இப்படி எதிர்பாராத அதிர்ச்சிகளும் உண்டு, ஆபத்துக்களும் வரும் என்பதை அப்புறம் தெரிந்து கொண்டேன். ஆனால் எத்தனை ஆபத்துக்கள் ஏற்பட்டாலும் சரி, எத்தனை நாள் உண்ணாவிரதம் இருக்க நேர்ந்தாலும் சரி, எத்தனை அநாவசிய விரோதங்களைச் சம்பாதித்தாலும் சரி, இந்த ஒரு தொழில்தான் எனக்குப் பிடித்த தொழில். அதுதான் கறுப்பு மையின் அபார சக்தி! இந்த மைக்கு முன் எந்த மந்திரவாதியின் மையும் நிற்கவே முடியாது!

# பத்தினிக் கோட்டம்

## ஜெகசிற்பியன்

### அத்தியாயம் 29

### மாமனிதர்!'

ஒரு கணம் தயங்கிச் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்ட பழையாறைச் சோழர் தணிந்த குரலில் கூறினார்: ''இந்த விஷயத்தை வில்வேலியிடம் தெரிவிப்பதற்காகவே இப்போது இங்கு வந்தேன்; அவர் வருவதற்கு நேரமாகும் போல் இருப்பதால் உங்களிடமே அதைச் சொல்லி விடலாம் என்று நினைக்கிறேன்!.... அதாவது, இந்த அரண்மனைக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருந்த பல்லவ இளவரசன் கோவிந்தவர்மன் தப்பியோடி விட்டான் அல்லவா?....''

''ஆமாம்; அதற்கென்ன இப்போது வந்தது?'' என்று சுவாரசியமாகக் கேட்டான் விநயாதித்தன்.

''பெரிதாக ஒன்றுமில்லை!...அந்தக் கோவிந்தவர்மன் தப்பியோடக் காரணமாய் இருந்தவன் யார் என்ற விவரத்தை இன்றுதான் அறிந்து கொண்டேன்...''

''யார் அந்தப் பதர்?''

''பல்லவ ஆபத்துதவி வீரனை இளங்காரிக்குடையான் என்பவன்தான் அந்தத் துணிகரக் காரியத்தைச் செய்தவனும். அவனுடைய இல்லம் இங்கே, ஆலம்பாக்கத்தில் இருக்கிறதாம்.....''

''அப்படியா! அந்த நீசப் புழுவை இன்னமும் ஏன் உயிரோடு விட்டு வைத்திருக்கிறீர்கள்?''

''வில்வேலியிடம் ஒரு வார்த்தை சொல்லிக் கொண்டு....''

''வேண்டாம், மாதுலரே! நாமே அவனுக்குத் தகுந்த தண்டனை அளிப்போம். இப்போது அவன் ஆலம்பாக்கத்தில்தானே இருக்கிறான்?''

''இருக்கலாம்....''

''என் காவல் வீரர்களை அனுப்பி இதோ, அவனைப் பிடித்து இழுத்துக் கொண்டு வரச் சொல்கிறேன்!''

''அப்படிச் செய்யக் கூடாது, இளவரசே! நாம்தான் அவனை நேரில் போய்ப் பிடித்து வர வேண்டும். ஏனென்றால் அவன் சரியான ஜகஜாலப் புரட்டன்; நமது காவல் வீரர்களை எளிதில் ஏமாற்றி விட்டு ஓடி விடுவான்.''

ஒரு கண யோசனைக்குப் பின், ''அப்பேர்ப்பட்ட ஒரு பயங்கரப் பேர்வழியைப் பிடிக்கும் சிரமத்தை நாம் ஏன் மேற்கொள்ள வேண்டும்? இதையெல்லாம் தளபதி வில்வேலியிடமே விட்டு விடலாமே!'' என்றான் விநயாதித்தன் பயந்த குரலில்.

''இளவரசர் சொல்வது சரிதான். ஆனால், வில்வேலி வரும் வரையில் இந்தக் காரியத்தைத் தாமதப்படுத்துவது நல்லதல்ல என்று எனக்குப் படுகிறது. காரணம், பல்லவ இளவரசனின் வலக்கரம் போன்ற அவனைப் பிடித்து விட்டால், அப்புறம் கோவிந்தவர்மனைப் பிடிப்பது மிக எளிதாகி விடும். இன்றையச் சூழ்நிலையில் இவ்விருவரையும் ஒரு நாள்கூட வெளியே விட்டு வைக்கக் கூடாது'' என்று படபடத்தார் பழையாறைச் சோழர்.

முகத்தைச் சுளித்துத் தயங்கிய விநயாதித்தன், ''என்னையா கூப்பிடுகிறீர்கள்?'' என்று முணுமுணுத்தான். பிறகு, ''சரி; என் மாதுலரின் விருப்பத்துக்கு மாறாக நான் நடக்கக்கூடாது!'' என்றவாறு எழுந்து தொலைவில் நின்ற காவல் வீரர்களைப் பார்த்து, ''எங்களோடு இருபது பேர் வர வேண்டும்! ஊம், சீக்கிரம்!'' என்று மிடுக்காகக் கட்டளையிட்டான்.

''எதற்கு இளவரசே, நமக்கு இருபது பேர் காவல்? இந்தச் சிறு விஷயத்தை நாம் இருவருமே கவனித்துக் கொள்ளலாமே!'' என்றார் பழையாறைச் சோழர்.

''எனக்காக அல்ல, மாதுலரே! உங்களுக்குத் துணையாகத்தான் அவ் வீரர்களை வரச் சொல்



கிறேன்!'' என்று சிரித்தான் விநயாதித்தன்.

அடுத்த சில விநாடிகளில், இருபது காவல் வீரர்கள் பின்தொடர, ஆலம் பாக்கத்தை நோக்கி அவ்விருவரும் தம் குதிரைகளைச் செலுத்தினர்.

★

இளங்காரிக்குடையானின் இல்லத்துக்கு எதிரேயுள்ள பல்லவபுரம் சாலையின் ஒரு மரத்தடியில் நின்று தம் இடையில் தொங்கிய குறுவாளின் முனையைத் தொட்டுக் கூர் பார்த்தபடி குரூர முகத்துடன் விழிகளை உருட்டிக் கொண்டிருந்த பழையாறைச் சோழர், அந்த இல்லத்தின் உள்ளிருந்து கடகடவெனச் சிரித்துக் கொண்டே வெளியே வந்த சளுக்கிய இளவரசன் விநயாதித்தனை வெறித்து நோக்கினார்.

''எனக்குத்தான் எதைக் கண்டாலும் இரண்டிரண்டாகத் தெரிகிறது என்றால், என் அருமை மாதுலர் என்னைவிட மோசமாய் இருக்கிறாரே! ஒருகால் பல்லவபுரத்துக்கு வருமுன்னரே அவர் மதுவருந்தி யிருப்பாரோ!'' என்று சிரிப்பை அடக்கமாட்டாமல் சிரித்தவாறு சற்றுத் தொலைவில் நின்ற தன் காவல் வீரர்களைக் கைதட்டி அழைத்துவிட்டு அவர் எதிரில் வந்து நின்றான் விநயாதித்தன்.

காவல் வீரர்கள் விரைந்து வருவதைக் கண்டு கத்தி முனையை வருடிக் கொண்டிருந்த தம் கையைச் சட்டென்று விலக்கிவிட்டு நிமிர்ந்த பழையாறைச் சோழர், ''என்ன இளவரசே! அந்தத் துரோகிப் பயல் இளங்காரி இல்லையா?'' என்று அவசரமாக வினவினார்.

''போங்கள், மாதுலரே! வீணாக நீங்களும் ஏமாந்து, எனக்கும் சிரமம் கொடுத்து விட்டீர்கள்! ஒரு வேளை தம் மகளை எனக்கு மணம் முடித்துக் கொடுக்கு முன் இப்படி ஏதாவது சொல்லி என்னைப் பரீட்சிக்க விரும்பினீர்களோ என்னவோ!'' என்று சலிப்புடன் குழைந்த விநயாதித்தன், ''நல்ல வேடிக்கை இது! யாரோ ஒரு இடைச்சியின் இல்லத்தைத் தவறுதலாகக் காட்டி விட்டீர்கள் மாதுலரே! அங்கே இளங்காரியும் இல்லை, முதுங்காரியும் இல்லை; வயதான ஒரு மூதாட்டியும், எழிலார்ந்த பருவக் குமரி ஒருத்தியும்தான் இருக்கிறார்கள்!'' என்றான் வெடிச் சிரிப்புடன்.

இதைக் கேட்டுப் பழையாறைச் சோழரின் முகம் பேயறைப்பட்டதுபோல் வெளுத்துச் சிறுத்தது. பரபரப்புடன் தலைதூக்கி அந்த இல்லத்தின் சாளரத்துப் பக்கம் தம் பார்வையை ஓட்டினார். அங்கே, மிரண்ட நிலையில் நடுநடுங்கிக் கொண்டு நின்றார்கள், அநந்தமதியும் சோழ இளவரசி இளங்கோப்பிச்சியும்!

பழையாறைச் சோழருக்குத் தெரியாமல் தன் வீரன் ஒருவனுக்குக் கண்ணால் ஏதோ சாடை காட்டி விட்டுத் திரும்பிய விநயாதித்தன், ''சரி; வாருங்கள், மாதுலரே! பல்லவபுரத்துக்குப் போவோம். அங்கு போய் மற்ற விஷயங்களைப் பேசிக் கொள்ளலாம்'' என்றவாறு தன் குதிரையை நோக்கி நடந்தான்.

இந்தச் சமயம், அந்தப் பல்லவபுரம் சாலை வழியே ஒரு புரவி பயங்கரமாகக் கனைத்துக்கொண்டே புயல் வேகத்தில் பாய்ந்து வந்தது. அந்தக் குதிரையின் முதுகிலே சளுக்கியத் தளபதி வில்வேலி குற்றுயிரும் குறையுயிருமாகத் தொங்கலாடிக் கொண்டிருந்தார்!

இந்தக் காட்சியைப் பார்த்துக் குலை நடுங்கி விட்ட விநயாதித்தன், ''என்ன இது கோரம்!'' என்று பயப் பிராந்தியுடன் குழறிக்கொண்டே பின்னால் திரும்பினான். அங்கு நின்றிருந்த பழையாறைச் சோழரைக் காணோம்!

★

''ஆமாம் அன்பரே, அதுதான் உண்மை! அதுவே முற்றிலும் உண்மை!'' என்று அமைதியாகக் கூறித் தம் வெண்ணிறத் தாடியைக் கோதியவாறு சிரித்தார் பரவாதிமல்லர்.

திகைப்பும் பிரமிப்புமாக மரமரத்து உட்கார்ந்திருந்த பெரும்பிடுகு முத்தரையர் திடுமெனத் தலைதூக்கி, ''என்ன!... என் செவிகளில் இறங்கிய சேதிகள் அனைத்தும் உண்மைதாமா?'' என்று கனவுக் கிறக்கத்தில் உளறுவது போல் குழறிக் கேட்டுக் கொண்டே தம் காதுகளைப் பரபரப்புடன் குடைந்தவாறு விழித்து நோக்கினார்.

''உண்மைகளை விற்றே இவ்வுலகத்தில் வாழ்ந்துவிட முடியும் என்று உறுதியாக நம்பிக்கொண்டிருக்கும் ஓர் எளிய கலைஞனின் வாயிலிருந்து வெளிவந்த சொற்கள்தாம் தங்கள் செவியில் இறங்கியிருக்கின்றன அன்பரே!'' என்றார் பரவாதிமல்லர் களங்கமற்ற புன்முறுவலுடன்.

முத்தரையருக்கு ஏற்பட்ட வியப்பும் திகைப்பும் மிகுதியாயின. குழப்பத்துடன் தம் பார்வையை வலப் பக்கமாகத் திருப்பினார் அவர்.

''டிக்கட்!''

பரிசோதகர் கேட்கவும் அவர் தம் டிக்கட்டை எடுத்துக் காட்டினார். அவர் அருகில் ஒரு சிறு பாலகன் அமர்ந்திருந்தான். பரிசோதகருக்கு அவன் வயது மூன்றுக்கு மேல் இருக்கும் போலப் பட்டது. ''இந்தப் பையனின் வயது என்ன?'' என்று கேட்டார்.

''கிட்டத்தட்ட இரண்டரை ஆகப் போகிறது!'' என்றார் தந்தை.

''ஆனால் இரண்டரை வயதாகப் படவில்லையே!''

''மெய்தான். இவன் உண்மையான வயதைக் கேட்டால், ஒன்றரை தான் ஆகிறது. திருஷ்டிப்பட்டு விட்டால் என்ன செய்வது என்று கொஞ்சம் கூடச் சொல்லி வைத்தேன்!'' என்று தந்தை சமாளித்தார்.

பெருவளநல்லூரிலிருந்து பல்லவபுரத்துக்குச் செல்லும் சாலையின் மருங்கே அமைந்திருந்த அந்தப் பழைமையான ஜீனாலயத்துக்குப் பின்னால்—சமண ஐயனாரின் யானை வாகனத்து மேடையருகில் — வெடிப்பும் துடிப்புமாக நின்று கொண்டிருந்த அடித்துதவி இளங்காரிக் குடையான் தன் பெரிய கண்களை உருட்டி அவரை எச்சரிப்பது போல் வெறித்துப் பார்த்ததைக் கண்டு விழிப் படைந்தவராய் வெடுக்கென்று நிமிர்ந்த முத்தரையர், ''கவிஞரே! தாங்கள் சொன்ன விவரங்களை என்னால் ஜீரணிக்கவே முடியவில்லை! தயவுசெய்து அவற்றை மீண்டும் ஒரு முறை சொல்லுங்கள் !'' என்றார் அவநம்பிக்கை செறிந்த அடித் தொண்டையில்.

ஜீனாலயத்து வலப்புற மண்டபப் படியில் அமர்ந்திருந்த சேதியக் கவிஞர் தமது நரையோடிய புருவங்களை மேலுயர்த்திக் குறும்பாகச் சிரித்தவாறு சாந்தம் நிறைந்த குரலில் கூறினார் : ''பழையாறைச் சோழரைப்பற்றி நான் தெரிவித்த விவரங்களைத்தானே கேட்கிறீர்கள்? நீங்களும், இந்த நாட்டு மக்களும் அவரைப்பற்றி இப்போது என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ, அதற்கு அவர் முற்றிலும் மாறானவர்; வேறானவர் !''

முத்தரையர் இதைக் கேட்டு அலட்சியமும் வெறுப்புமாகக் கடகடவெனச் சிரித்தார். ''நல்ல கதை! நயமான கற்பனை! கல்லிலே காட்ட வேண்டிய திறமையைச் சொல்லிலே காட்டத் துணிந்து விட்டார் என் மதிப்புக்குரிய கவிஞர்!''

பராவாதிமல்லரின் முகம் கண்டிச் சிறுத்தது. மெல்லப் பெருமூச்சு விட்ட அவர், ''என்ன செய்வது, நண்பரே? மாபெரும் மனிதர்களையெல்லாம் நம்மைப் போன்றவர்களுக்கு முதலில் இந்த வகையில்தான் சித்திரித்துக் காட்டுகிறது விதி !''

''ஹாம்! அந்தப் பச்சைத் துரோகி பழையாறைச் சோழர் மாபெரும் மனிதராம்! கையகல நிலப் பரப்பின் ஆட்சிப் பதவி நீடிக்க வேண்டும் என்பதற்காக ஓர் அந்நியப் படையெடுப்பாளனின் முன் கைகட்டித் தலை வணங்கி நிற்கத் துணிந்தவர், பிறந்த பொன்னாட்டின் புனிதத்தைக் காக்கத் திராணியில்லாமல் நகமும் சதையும்போல் கூடிக் குலாவி வந்த பல்லவக் கொற்றவரது நல்லெண்ணத்தையும் நட்டையும் கொன்றுவிட்டு அவரது ஜன்மப் பகைவனிடம் போய்ச் சரணாகதியடைந்த கோழை, தமது சொந்த சுகபோக வாழ்வுக்காகத் தம் குலப்பெருமை, இனப்பெருமை, மொழிப் பெருமை, சமயப்பெருமை ஆகிய அனைத்தையும் உதறித் தள்ளிச் சளுக்கியனுடன் சம்பந்தி உறவு கொள்ள முற்பட்ட நயவஞ்சகர் மாபெரும் மனிதராம்! செவியால் கேட்டாலே அருகதையற்ற பொய்ப் புகழ் பேச்சு இது!''

''அரசியல் சாஸ்திரத்தைக் கரை கண்ட சந்திரலேகைச் சிற்றரசரா இப்படி ஆத்திரமடைந்து பேசுகிறார்? என்னால் நம்பவே முடியவில்லையே!'' என்று இதமாகக் கூறி மென்மையாகப் புன்னகை புரிந்தார் பராவாதிமல்லர்.

முத்தரையரின் முகம் கோபத்தால் சிவந்து கொந்தளித்தது. தம் மலை போன்ற உடலைப் பயங்கரமாகக் குலுக்கிப் புரட்டிக்கொண்டு நிமிர்ந்த அவர், ''கவிஞரே! கல்லையும் மண்ணையும் கவி பாட வைக்கத்தான் உங்களுக்குத் தெரியுமே தவிர அரசியல் சூதாடிகளின் கபட நாடகங்களை நீங்கள் அறிய மாட்டீர்கள். பாம்பின் பாதச் சுவடு பாம்புக்குத்தான் தெரியும். பழையாறைச் சோழரின் வஞ்சக விளையாட்டங்களை இந்தச் சந்திரலேகைச் சிற்றரசன்தான் அறிவான். தயவுசெய்து இனி அவரைப் பற்றி என்னிடம் ஏதும் சொல்லித் தங்கள்மீது நான் வைத்திருக்கும் உயர்வான எண்ணத்தைச் சரித்துவிடாதீர்கள்!'' என்றார் கடுகடுத்த குரலில்.

பராவாதிமல்லர் ஒரு கணம் அவரையே உற்றுப் பார்த்தார். பிறகு மெல்லத் தம் பார்வையை மேல்நோக்கி நிமிர்த்திக் கொண்டு நெஞ்சடைக்கக் கூறினார்: ''விதியை வெல்ல மனித

ரால் ஆகாது என்பது முற்றிலும் உண்மையே போலும்! இல்லையானால், இந்தப் பழம் பெருமை வாய்ந்த பல்லவ நாட்டுக்குக் கதிமோட்சம் கிட்டக்கூடிய சந்தர்ப்பமும் சூழ்நிலையும் உருவாகி வரும்போது அவற்றைத் தகர்க்கும் கருவியாக என் அருமை நண்பர் முத்தரையரே இத்தனை பிடிவாதத்துடன் முன் வந்து நிற்பாரா?''

அலுப்பும் சலிப்புமாக முகத்தைச் சுளித்த முத்தரையர், ''கலைஞரே! என்னை ஏன் இப்படிச் சோதிக்கிறீர்கள்? பழையாறைச் சோழரின்மேல் நான் கண்ணை மூடிக்கொண்டு எந்த விதப் பழிபாவங்களையும் சுமத்தி விடவில்லை. என்னிடம் அவர் நேருக்கு நேர் நின்று தெரிவித்த முடிவுகளைக் கொண்டே அவருடைய புதிய போக்கைப் புரிந்து கொண்டேன். அவர் சொன்னபடியே இன்றுவரை நடந்து வருகிறார் என்பதையும் பல சம்பவங்களின் மூலம் அறிந்து கொண்டேன். இந்த விவரங்களைப் பல முறை உங்களிடம் நான் எடுத்துக் கூறியும் அவற்றை ஏற்காமல், அந்த வஞ்சக மனிதரை மகா புருஷராக்கிக் காட்டுவதிலேயே குறியாய் நிற்கிறீர்களே, ஏன்?'' என்று வினவினார்.

இளநகை புரிந்த பரவாதிமல்லர், ''இதற்கு நான் என்ன பதில் சொல்ல முடியும்? 'அரசியல் சாஸ்திரத்தைக் கரை கண்ட முத்தரையரா இப்படி அவசரப்பட்டுப் பேசுகிறார்' என்றுதான் நான் மீண்டும் ஆச்சரியப்பட்டுக் கொள்ள வேண்டும்!'' என்றார்.

''அப்படியானால் பழையாறைச் சோழர் எங்களுக்கு எதிராகச் சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் சேர்ந்து நிற்கிறார் என்ற முடிவு தவறானது என்பதுதான் தங்கள் கருத்தா?''

''அதில் எள்ளத்தனையும் சந்தேகம் இல்லை நண்பரே!''

''அவருடைய அந்த முடிவை அவரே சொல்லக் கேட்டேனே?''

''வீழ்ந்துபட்ட பல்லவ நாட்டின் விடுதலைக்காகத் தறுகண் ஆண்மையுள்ள தனியொரு மனிதர் செய்ய முன் வந்த நிகரற்ற தியாக சாகசமாகவே நீங்கள் அதைக் கொள்ள வேண்டும்.''

''அதாவது?....''

''எதிரியின் எதிரியாக நில்லாமல், எதிரியின் நண்பனாக நின்று, எதிரியின் எதிரி செய்யக் கூடிய காரியத்தைச் செய்யவே அவர் உங்களிடமிருந்து பிரிந்து சென்றார்.''

''காதால் கேட்பதற்கே கசப்பான விஷயம் இது!''

''கசப்பு இனிப்பு பற்றி நான் கருத்துரை வழங்கவில்லை நண்பரே! உண்மை எது என்பதையே உங்களிடம் இப்போது சொல்லிக்கொண்டிருக்கிறேன். வீரத்தை மட்டுமே வழிபடும் உங்களால் அவருடைய அந்த விவேக முடிவு கசப்பாகத்தான் தோன்றும். ஆனால் புகழ்

★ சபைக்கு ஓர் இருப்பிடமாக விளங்கிய மகான் வி. கிருஷ்ணசுவாமி அய்யர் அவர்களின் நூற்றாண்டு விழா சென்ற 15-6-63 அன்று சென்னை சமஸ்கிருதக் கல்லூரியில் சிறப்பாக நடைபெற்றது. ராஜாஜி, முன்ஷி, சி.பி. ராமசுவாமி அய்யர், லட்சுமணசுவாமி முதலியார், திரு. வி. ராஜமன்னார் முதலியவர்கள் கிருஷ்ணசுவாமி அய்யரின் அரும்பண்புகளையும் செயல் திறமைகளையும் நினைவு கூர்ந்து பேசினார்கள்.



ராமு: கிட்டு! பரீட்சையில் தேறவிட்டால் நீ தற்கொலை செய்து கொண்டுவிடுவேன் என்று பயமுறுத்திக்கொண்டிருந்தாயே!

கிட்டு: ஆமாம். ஆனால் என் அப்பா என்ன சொல்லி விட்டார் தெரியுமா? 'தற்கொலை — சிற்கொலை செய்துகொள்ள முயன்றாயானால், உயிரை வைத்துக் கொன்று போட்டு விடுவேன், ஜாக்கிரதை!' என்று கடிந்து கொண்டார். அதனால்தான்!

மிக்க ஒரு நீண்ட இராஜ பரம்பரையில் வந்த பழையாறைச் சோழர் வெறும் வீரத்தை மட்டும் நம்பிக் கொண்டிருப்பவராய் இருக்க முடியாது; விவேகத்தையும் அவர் துணை சேர்க்க முற்படுவார்.''

''இந்தத் திடீர் ஞானோதயம் அவருக்கு ஏன், எதனால் ஏற்பட்டது என்பதை விளக்க முடியுமா கலைஞரே?''

''அதற்குப் பல காரணங்களும், காரணகர்த்தர்களும் உண்டு! காரணகர்த்தர்களில் நீங்களும், நமது மாமன்னர் பரமேசுவரவர்மரும், அவரது இளவல் கோவிந்தவர்மரும் முக்கியமானவர்கள். உலகில் மனிதராய்ப் பிறக்கும் எல்லாருமே ஏதேனும் ஓர் இலட்சியத்தைக் கொள்ளத்தான் செய்கிறார்கள். ஆனால் அப்படி ஏற்கும் இலட்சியத்தை எல்லாருமே எட்டிப் பிடித்து விடுவதில்லை. இலட்சியங்களை உருவாக்கிக் கொள்வது சுலபம்; அவற்றை அடைவது மட்டும் அத்தனை எளிதல்ல. இதற்குக் காரணம், இலட்சியத்திலுள்ள பற்று அதை அடையும் மார்க்கத்தில் இல்லாமல் போய் விடுவதுதான்! அந்நிய ஆதிக்கத்தில் வீழ்ந்துபட்ட பல்லவ நந்திக் கொடியை அதன் பழைய ஒளி வானில் உயர்த்திப் பறக்கவிட வேண்டும் என்பதே உங்கள் இலட்சியம்; இந்தப் புனித இலட்சியத்தை அடைய உங்களுக்குத் தெரிந்த ஒரே வழி போர்! படை திரட்டிச் சளுக்கியருடன் போரிடுவது ஒன்றேதான் அந்த இலட்சியத்தை அடைவதற்கான ஒரே வழி என்பது உங்களுடைய திடமான முடிவு. உண்மையில் இது சரியான முடிவே. ஆனால் இந்த முடிவின் வழி சென்று நீங்களாகவே செயல்பட உங்களுக்கு உரிமையோ சக்தியோ இல்லை. யாருக்காக அந்த இலட்சியத்தை மேற்கொண்டீர்களோ அவருடைய பரிபூரண ஆதரவும் சம்மதமும் ஒத்துழைப்பும் இருந்தால் தான், அதற்கெனக் கண்ட அவ்வழியில் உங்களால் அடியெடுத்து வைக்க முடியும். அதாவது, பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரின் அனுமதியும் கட்டளையும் கிடைத்தால்தான் அந்த ஆதிக்க எதிர்ப்புப் போருக்கு நீங்கள் ஆயத்தம் செய்ய முடியும். துரதிர்ஷ்டவசமாக ஆரம்ப நாள் முதலே அவரின் ஒத்துழைப்பு உங்களுக்குக் கிடைக்க வில்லை. ஏதோ ஒரு விந்தை மனப்பான்மையைத் தம்முள் வளர்த்துக்கொண்டு விட்ட அவரை அவ்விஷயமாக அணுகினபோது எல்லாம் உங்களுக்குத் தோல்வியே கிடைத்திருக்கிறது. ஆயினும் நீங்கள் விடாமல் அந்த ஒரே முயற்சியிலேயே முனைந்து நின்றீர்கள். ஏனென்றால் உங்களுக்குத் தெரிந்த ஒரே வழி அது ஒன்றுதான். இதற்கிடையே இந்த நாட்டின் நிலைமை என்ன ஆயிற்று? தன்னை எதிர்ப்பார் யாரும் இல்லை எனத் தெரிந்துகொண்ட சளுக்கிய விக்கிரமாதித்தன் தனது ஆதிக்கத்தை இங்கே நிரந்தரமாக்கிக் கொள்வதில் வெகு தீவிரமாக முனையலானான். கட்டளைகள் பிறந்தன. வரிகள் வசூலிக்கப் பட்டன. பொன்னாலும் மணியாலும் அவனுடைய பொக்கிஷம் கொழுத்து வீங்கியது. படை பலம் இரட்டிப்பாகியது. இவற்றோடு நில்லாமல் நமது புனிதமான சமண சமயத்தின் பெயரையும் தன் ஆதிக்க ஆட்சியை உறுதிப்படுத்திக் கொள்வதில் துணிந்து இறங்க முற்பட்டான். இவ்வளவுக்குப் பின்னும் நீங்கள் அந்த ஒரே வழியையே நம்பிக் கொண்டிருந்தீர்கள். பரமேசுவரவர்மரும் அந்த வழியில் உங்களை நடக்க விடாமல் கட்டிப் போட்டு வைத்திருந்தார். இந்த நிலை இன்னும் கொஞ்ச காலத்துக்கு நீடித்தால், அப்புறம் எத்தனை படைகள் திரட்டி வந்து எத்தனை ஆண்டுகள் போரிட்டாலும் சளுக்கிய விக்ரமாதித்தனைப் பல்லவ நாட்டின் மண்ணிலிருந்து அகற்ற முடியாதென்பது தெளிவாகத் தெரியலாயிற்று. இதையெல்லாம் கூர்ந்து கவனித்துச் சிந்தித்த பழையாறைச் சோழர் உடனே தம் இலட்சியத்தை அடையும் மார்க்கத்தை மாற்றிக்கொண்டு விட்டார். அவர் மாற்றிக் கொண்ட அந்த மார்க்கம் தான், உங்களுக்கு எதிரானி போல் சளுக்கியருடன் போய்ச் சேர்ந்து கொண்டது.''

செப்புக் குடத்தில் கல்லைக் கொட்டிக் குலுக்கினாற் போன்ற ஒலி. முத்தரையர்தான் அப்படிக் குலுங்கிச் சிரித்தார். ''நிஜமாகவே இது சுவையான கதை

தான்! இந்தக் கதையை இத்தனை சாமர்த்தியமாகப் புனைந்ததுமல்லாமல் அதை மகா கலைஞர் பரவாதிமல்லரும் நம்பும்படி செய்வித்த பழையாறைச் சோழர் உண்மையிலேயே மிகவும் கெட்டிக்காரர்தான்! கலைஞரே, நீங்கள் ஏமாந்து விட்டீர்கள்! உங்கள் 'மகா புருஷரா'லேயே நன்கு ஏமாற்றப்பட்டு விட்டீர்கள்!'' என்று கூறி மீண்டும் கடகடவெனச் சிரித்து முழக்கினார் அவர்.

## அத்தியாயம் முப்பது

# கலைஞரின் திணறல்

**யா**னை வாகனத்தின் அருகில் நின்றிருந்த ஆபத்துதவி இளங்காரிக்குடையான் எதையோ நினைவுபடுத்துவது போல் மெல்லத் தொண்டையைக் கனைத்தான். அந்தக் கனைப்புக் குறிப்பை உடனே புரிந்துகொண்ட பெரும்பிடுகு முத்தரையர் வெடுக்கென்று தலைதூக்கிப் பரவாதிமல்லரை வெறித்துப் பார்த்தவாறு கடுகடுத்த குரலில் படபடத்தார். ''இல்லை, இல்லை! பழையாறைச் சோழரால் நீங்கள் ஏமாற்றப்பட்டிருக்கிறீர்கள் என்று நான் சொன்னது தவறு; அவரும் நீங்களும் சேர்ந்து எங்களை ஒரேயடியாகக் கவிழ்க்கத் திட்டமிட்டிருக்கிறீர்கள்! சளுக்கியர்களுக்குக் குழி பறிக்க அவர்களுடன் சேர்ந்ததாகச் சொல்லிக்கொண்டு எங்களுடன் சேர்ந்து எங்களுக்குக் குழி தோண்டவே இந்தக் கபட நாடகம் நடத்துகிறீர்கள்!''

சேதியக் கலைஞரின் உடல் மெல்ல நடுக்க முற்றது. ஆயினும் அவர் தம் அமைதியை இழக்காமல் மென்முறுவலுடன் சொன்னார்: ''என் மதிப்புக்குரிய நண்பரால் சுமத்தப் பெறும் இந்தக் குற்றச்சாட்டைக் கேட்டு நான் சிறிதும் வருத்தப்படவே இல்லை.''

''என் குற்றச்சாட்டுகள் உண்மைக்கு மாறாக இருந்தால்தானே உங்களால் வருத்தப்பட முடியும்?'' என்று ஈட்டியால் குத்துவதுபோல் நறுக்கென வினவினார் முத்தரையர்.

''இந்த விநாடி வரையில் உண்மையின் பக்கமே நீங்கள் திரும்பவில்லை என்பதால்தான் இத்தனை பொறுமையோடு இருந்து வருகிறேன்!''

ஆத்திரத்தால் முத்தரையரின் கண்கள் அக்கினிக் குண்டங்களாயின. ''அப்படியானால் நான் கேட்கும் வினாக்களுக்கு உங்களால் நேரான விடையிறுக்க முடியுமா கலைஞரே?'' என்றவாறு புள்ளெனத் துள்ளியெழுந்தார் முத்தரையர்.

'' நண்பரிடமிருந்து அதைத்தான் இப்போது எதிர்பார்க்கிறேன்!''

இரண்டு கைகளையும் இடுப்பின்மேல் ஊன்றி ஓங்கி உயர்ந்து நின்றுகொண்டு அழுத்தந் திருத்தமான குரலில் கேட்டார்: ''சளுக்கியருக்காகப் பல்லவ நாட்டுக் குடிமக்களிடமிருந்து போர்க் கருவிகளையும் பிற ஆயுதங்களையும் உங்களுடைய 'மகா புருஷரான' பழையாறைச் சோழர் பலாத்காரமாகப் பறித்துச் சேகரித்து வரும் விவரம் உங்களுக்குத் தெரியும் அல்லவா?''

''நண்பரின் கேள்வியில் உள்ள 'சளுக்கியருக்காக' என்னும் சொல்லை எடுத்து விட்டால், அதற்கு என்னுடைய பதில் 'ஆம்' என்பதே!''

''விசித்திரமான பதில்!.... சரி; இந்நாள் வரை எங்களுக்கும் தெரியாமல் உங்களுடைய இல்லத்தில் ஒரு நிலவறையை அமைத்து வைத்திருந்தது உண்மைதானே?''

''என் இல்லத்தில் உள்ள நிலவறையைப் பற்றி உங்களிடம் தெரிவிக்க வேண்டிய அவசியமோ சந்தர்ப்பமோ இதுவரை எனக்கு ஏற்படவில்லை என்பதை முதலில் தெரிவித்துக் கொண்டு, அந்த நிலவறை இருப்பது உண்மை என்று இப்போது ஒப்புக்கொள்கிறேன்.''

'' சாமர்த்தியமான பதில்!.... சரி; பழையாறைச் சோழர் சேமித்த போர்க் கருவிகளைப் பத்திரப்படுத்துவதற்காக அந்த நிலவறையை நீங்கள் கொடுத்து உதவியிருப்பது உண்மைதானே?''

''அப்படி ஓர் உதவி செய்ய வாய்ப்பு கிடைத்ததற்காக நான் பெருமைப்படுகிறேன்.''

'' எங்களுக்கு எதிராகவே அந்த வஞ்சகச் சதி காரியத்தில் நீங்கள் இருவரும் ஈடுபட்டீர்கள் என்று நான் சொல்கிறேன்; இதை உங்களால் மறுக்க முடியுமா?''

''இல்லை என்று மறுத்தால், என் அருமை நண்பரின் அந்தப் பேதைமையான கேள்வியை நான் கேலி செய்வது போல் ஆகி விடும். ஆகவே அதற்கு என் பதில், மௌனம்.''

திடீரென்று தம் உடலை முறுக்கிச் சிலிர்த்துக் கொண்டு நிமிர்ந்த முத்தரையர், ''கலைஞரே! பழையாறைச் சோழ

சோனிச் சீனுவுக்கும் குண்டுச் சீமாச்சுவுக்கும் திடீரென்று ஒரு நாள் சண்டை மூண்டுவிட்டது. குண்டுச் சீமாச்சு சோனிச் சீனுவை வாயில் வந்தபடி பேசிவிட்டான்.

சோனிச் சீனு குறுக்கிட்டு, "டேய் சீமாச்சு! நீ மேலே மேலே பேசிக் கொண்டே போகிறாய். நிறுத்து. இதுவரை பேசியதை வாபஸ் வாங்கு. ஐந்து நிமிஷம் அவகாசம் தருகிறேன்!" என்றான்.

"வாபஸ் வாங்காவிட்டால் என்ன செய்து விடுவாயாம்?" — அந்த ஆத்திரத்துடன் கேட்டான் சீமாச்சு.

சோனிச்சீனு சிறிதுநேரம் யோசனை செய்தான். "உனக்கு எத்தனை அவகாசம் வேண்டுமென்று சொல்லு. தந்துவிட்டுப் போகிறேன்!" என்றான்.

ரின் அந்தப் பயங்கரச் சதிக் காரியத்துக்கு நிலவறை தானம் செய்ததற்காக நீங்கள் அவரிடம் ஏதோ பெரிய கைம்மாறு எதிர்பார்க்க வில்லையா?" என்று இரைந்து கேட்டார்.

பரவாதிமல்லர் உள்ளூறத் திகிலுற்றவர்போல் சிறிதே பரபரப்படைந்தார். பிறகு மெல்லச் சிரித்தவாறு, "முத்தரையரின் ஒற்றர்கள் மிகத் திறமை வாய்ந்தவர்கள் என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஆனால், ஒரு விஷயம்; போர்க் கருவிகளைச் சேமித்து வைக்க என் நிலவறையைக் கொடுத்து உதவியதற்குப் பழையாறைச் சோழரின் நன்றி மொழியை ஏற்க மறுத்தது உண்மைதான். காரணம், அந்த நன்றியை நான் ஏற்றுக் கொண்டால் அவருடைய புனித இலட்சியத்தில் எனக்கு அக்கறை இல்லை என்றாகிவிடும். அப்படி என்னை ஓர் அயலானாக்கிக் கொள்ள விருப்பமில்லை" என்றார்.

"ஓகோ!.... சரி; பழையாறைச் சோழர் சேகரித்து வைத்திருக்கும் அந்தப் போர்க் கருவிகளெல்லாம் யாருக்காக? எதற்காக?"

"பல்லவ நாட்டின் விடுதலைப் போருக்காக!"

"பச்சைப் பொய்! அந்த யுத்தக் கருவிகளில் பல்லவ நந்திச் சின்னம் பொறித்திருப்பதால் இத்தனை எளிதாகப் பதில் சொல்லி விட்டீர்களோ? உண்மை வெளியாகிப் போனால் எங்களிடமிருந்து தப்பிக்க முன்கூட்டியே திட்டமிட்டுச் செய்த கண் துடைப்புக் காரியம் அது என்பது எனக்குத் தெரியாதா என்ன?"

"சந்திரலேகைச் சிற்றரசரின் அபாரக் கற்பனையை மெச்சுகிறேன்!" என்று கூறி நகைத்தார் பரவாதிமல்லர்.

"கலைஞரே! இனியும் உங்கள் வித்தாரப் பதில்களைக் கொண்டு என்னை ஏமாற்ற முயற்சி செய்யாதீர்கள். எனக்கு எல்லாம் புரிந்து விட்டது. நீங்கள் ஏன் என்னிடம் வந்து பழையாறைச் சோழரை மகா புருஷராக்கிப் பேசுகிறீர்கள் என்பதும் எனக்கு நன்றாக விளங்கி விட்டது. ஆமாம்; பல்லவ மாமன்னர் பரமேசுவரவர்மர் தமது தாய்த் திரு நாட்டின் விடுதலையைக் காணப் பொங்கி யெழுந்து விட்டார் என்பதையும், சளுக்கியச் சண்டாளர்களைப் பல்லவ நாட்டின் மண்ணிலிருந்து விரட்டியடிக்கத் தம் குடிமக்களை இரகசியப் போர் அணியில் திரளும்படி அவர் கட்டளை கொடுத்து விட்டார் என்பதையும், அந்தக் கட்டளையை நான் வெற்றிகரமாகச் செயலாக்கி வருகிறேன் என்பதையும் பழையாறைச் சோழர் எப்படியோ அறிந்து கொண்டிருக்கிறார். எனவேதான் தமது துரோக நடத்தைக்குத் தியாக முலாம் பூசிய ஒரு கட்டுக் கதையைக் கற்பித்து அதைத் தங்கள் மூலம் என்னிடம் வந்து ஒப்பிக்க அனுப்பியிருக்கிறார். நீங்களும் அவருடன் துணை நின்றவராதலால் உங்களுக்கு நேரக்கூடிய ஆபத்தை உணர்ந்து அதிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக, அவர் கட்டிக் கொடுத்த பொய் மூட்டையைக் கொண்டு வந்து என்னிடம் அவிழ்த்துப் பரப்புகிறீர்கள். இதுதான் உண்மை. இதுவே முற்றிலும் உண்மை!" என்று தம்மை மீறிய ஆத்திர உணர்ச்சியுடன் உரக்கக் கூவினார் பெரும்பிடுகு முத்தரையர்.

இந்தச் சமயம், பல்லவபுரச் சாலைப் பக்கமிருந்து அந்த ஜினாலயத்தை நோக்கி அலங்க மலங்க ஓடி வந்த பழையாறைச் சோழர் அவ்வாலயத்தின் இடது பக்க முகப்பு மண்டபத் தூண் ஒன்றில் ஒளிந்து மறைந்து உட்கார்ந்தார். அவரது திண்ணிய உடல் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்தது. முகத்தில் பீதியும் துக்கமும் மாறி மாறிக் கறை பூசின. தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு உள்ளூறக் குமுறிப் பொருமினார் அவர்.

ஜினாலயத்தின் வலப் பக்க மண்டபப் படியில் அமர்ந்திருந்த சேதியக் கலைஞரோ, முத்தரையரோ, யானை வாகனத்துக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த இளங்காரிக்குடையாரோ, அவர் அங்கு வந்ததைக் கவனித்ததாகவே தெரியவில்லை.

(தொடரும்)

# மூன்று கடிதங்கள்

**குறும்பன்**

**விநோதா விமான சர்வீஸ் கார்ப்பொரேஷன்**

தலைவர் ஸ்ரீ..... தங்கள் புது விமானமான விநோதராணியின் வெள்ளோட்ட விழாவுக்கு மகிழ்ச்சியுடன் தங்களைக் குடும்பத்தோடு வருமாறு அழைக்கிறார்.



19 — 6 — 63 புதன் கிழமை காலை 6 மணிக்கு ...........ராஜ்ய முதன் மந்திரி ஸ்ரீ...தொடங்கி வைக்கும் இவ்விழாவுக்கு விருந்தினர்கள் வருகைதந்து சிறப்பிக்கக் கோரப்படுகிறார்கள்.

பின் குறிப்பு: இத்துடன் காஷ்மீர உல்லாசப் பயணத்துக்கான இரண்டு இலவச டிக்கட்டுகள் இணைக்கப்பட்டுள்ளன. விருந்தினர்கள் தங்கள் மனைவிமார்களுடன் இதில் கலந்து கொண்டு மகிழ்ச்சியுறலாம். வரும் விவரத்துக்கு முன் கூட்டியே தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

சென்னை தொலை பேசி எண்: 100074.
12—6—63

## 2

அம்மணி,

எங்கள் அழைப்புக்கிணங்கித் தாங்கள் தங்கள் கணவருடன் விநோதராணியின் வெள்ளோட்ட விழாவில் பங்கு கொண்டமைக்கும் காஷ்மீரத்துக்கு உல்லாசப் பயணம் வந்தமைக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். தங்கள் மகிழ்ச்சியில் எங்கள் விநோத ராணியும் பங்குகொள்கிறாள். காஷ்மீரப் பயணம் தங்களுக்கு உல்லாசமாக இருந்ததா? விநோத ராணியின் அமைப்பு தங்களுக்குப் பிடித்ததா? மற்ற விமானங்களைக் காட்டிலும் விநோதராணியிடம் தாங்கள் என்ன சிறப்பைக் கண்டீர்கள்? இன்னும் என்ன என்ன வசதியை எதிர்பார்க்கிறீர்கள்? தங்கள் கருத்தைத் தெளிவுபடுத்தினால் விநோதா விமான சர்வீஸ் கார்ப்பொரேஷன் குறைகளைக் களைந்து மக்களுக்கு மேலும் சிறப்பான முறையில் பணி புரிய உதவியாயிருக்கும். தங்களுக்கு இருக்கும் அலுவல்களுக்கிடையில் ஒரு வரி எழுதிப் போடுவீர்களானால் மிகவும் நன்றியுள்ளவர்களாவோம்.

இப்படிக்கு

சென்னை — தலைவர், விநோதா விமான
25—6—63 — சர்வீஸ் கார்ப்பொரேஷன்

## 3

ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பதுபோல் விநோதா விமான சர்வீஸ் கார்ப்பொரேஷனுக்கு வந்த பதில் கடிதங்களில் மாதிரிக்கு ஒன்று.

**தலைவர், விநோதா விமான சர்வீஸ்
கார்பொரேஷன்**

அன்புடையீர்,

தங்கள் கடிதத்தைக் காண விநோதமாயிருக்கிறது! விநோத ராணியின் வெள்ளோட்ட விழாவுக்கு அழைப்பிதழ் எனக்கு எப்பொழுது அனுப்பினீர்கள்? நான் எப்பொழுது என் கணவருடன் அந்த வைபவத்தில் பங்கு கொள்ள வந்தேன்? காஷ்மீரத்துக்கு உல்லாசப் பயணம் போய் வந்ததாகக் கூடக் குறிப்பிட்டிருக்கிறீர்களே! தாங்களும் அவ்விமானத்தில் வந்தீர்களா? என்னை என் கணவ



ருடன் பார்த்தீர்களா? என் மூளையைப் பம்பரமாகச் சுற்ற வைத்துவிட்டீர்களே, இப்படி ஒரு கடிதத்தை எழுதி.

வெள்ளோட்ட விழாவின் போது விநோத ராணியில் பயணம் செய்தவர்களைத் தாங்கள் ஒருவேளை புகைப்படம் எடுத்திருக்கலாம். அப்படி எடுத்திருந்தால், ஒரு பிரதி உடனே அனுப்பி வையுங்கள். என் கணவருடன் வந்திருந்தது நான்தானா என்னும் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள அது பெருதவியாக இருக்கும்.

இப்படிக்கு

சென்னை — ...........
27—6—63



# பாராளுமன்ற அங்கத்தினர் பதில் கூற வேண்டும்

பி. சிவராவ்



திரு பி. சிவராவ் பத்திரிகை நிருபர்களில் நீண்ட காலம் பணியாற்றிச் சிறப்படைந்தவர். தாம் சொல்லும் கருத்துக்களுக்கு ஆணித்தரமான ஆதாரங்களும் மேற்கோள்களும் இருந்தாலொழிய கருத்துக்களைச் சொல்ல மாட்டார். மக்கட் சபையில் சில காலம் உறுப்பினராகப் பணியாற்றித் தமது பேச்சுத் திறமையால் பலரின் முகமூடிகளை அம்பலமாக்கியவர். தமது உண்மைக் கருத்துக்களை எடுத்தியம்பத் தைரியமில்லாத உறுப்பினர்கள் பாராளுமன்றத்தில் இடம்பெறத் தகுதியற்றவர்கள் என்பதை வாக்காளப் பெருமக்கள் உணர்ந்திருக்க வேண்டும் என்கிறார் சிவராவ்.

ஹிந்திப் பக்தர்கள் எழுப்பியுள்ள மொழிச் சர்ச்சையைப் பற்றி எவ்வளவோ பேர் எவ்வளவோ எழுதியாயிற்று. எனவே இதில் புதிதாக ஏதேனும் சொல்வதென்பது இயலாத காரியமே. எனினும் இந்தக் கட்டுரையின் மூலம் பொதுமக்களின் கவனத்தை மொழிப் பிரச்னைச் சரித்திரத்தின் சில முக்கியமான அம்சங்களில் திருப்ப முயலுகிறேன்.

**பந்த் சொன்னார்.....**

பாரதம் சுதந்திரம் பெற்றபின், நமது குடியரசின் அரசியல் சாஸனத்தை விவாதித்து நிறைவேற்றிய அரசியல் நிர்ணயச் சட்டசபை மொழி விஷயமான பகுதியை விவாதத்துக்கு எடுத்துக் கொண்டபோது காங்கிரஸ் காரியக் கமிட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. 1949ம் ஆண்டு ஆகஸ்டு ஐந்தாம் தேதி நிறைவேற்றப்பட்ட இந்தத் தீர்மானம், 'மொழிப் பிரச்னையில் இரண்டு அம்சங்கள் உண்டு. கல்வித் துறை சம்பந்தமானது ஒன்று; மற்றது நிர்வாகத்தைக் குறித்தது. பல ராஜ்யங்கள் ஹிந்தியல்லாத பிரதேச மொழிகளைக் கொண்டவை. இவை யெல்லாம் இலக்கிய வளம் பொருந்தியவை' என்பதை யெல்லாம் ஒப்புக் கொண்டது. ராஜ்யங்களுக்கிடையே தகவல் போக்குவரத்துக்கு ஒரு பொது மொழி அத்தியாவசியம் என்று தீர்மானம் கூறிற்று. ஆங்கிலத்தை அகற்றக் கூடாது என்பதில் ஹிந்தி பேசாத பகுதிகளைச் சேர்ந்த அங்கத்தினர்கள் அப்போது காட்டிய எதிர்ப்பின் பலத்தைக் கண்ட பண்டித பந்த் — அப்போது அவர் உத்தரப் பிரதேச முதன் மந்திரியாக இருந்தார் — அரசியல் நிர்ணயச் சட்டசபையில் நடைபெற்ற ஒரு விவாதத்தின் போது ஆங்கிலத்தை அப்புறப்படுத்தக் காலவரம்பு நிர்ணயிக்கும் இறுதிப் பொறுப்பை ஹிந்தி பேசாத மக்களுக்கே விட வேண்டும் என்று கோரினார். இந்தச் சம்பவங்கள் நடந்தபோது ஹிந்தி பேசாத அங்கத்தினர்கள் எவ்விதமான பயமுமின்றித் தங்கள் கருத்தை வெளியிட விரும்பினார்கள் என்றே சொல்லலாம். அரசியல் நிர்ணய சபையில் விவாதத்துக்கு வருமுன் எல்லா முக்கியமான விஷயங்களும் காங்கிரஸ் கட்சியில் விவாதிக்கப்பட்டு முடிவுகள் செய்யப்படும். அதிகார பூர்வமானவை அல்ல எனினும் அப்போதையக் குறிப்பேடுகளைப் பார்த்தால், 'ஹிந்தி இலக்கங்கள் வேண்டுமா, உலகெங்கும் வழங்கும் அரபு இலக்கங்கள் வேண்டுமா' என்ற விவாதத்தில் ஹிந்தியை எதிர்த்து 64 பேரும், ஆதரித்து 51 பேருமே வாக்களித்ததாகத் தெரிகிறது. மறுபடியும் வாக்கெடுத்ததில் இருதரப்பிலும் 74 வாக்குகள் பதிவாயின. என்றாலும் ஹிந்தித் தீவிரவாதிகள் தங்களுக்கு 75 வாக்குகள் கிடைத்திருப்பதாக உரிமை கோரினர். அப்படியே வைத்துக் கொண்டாலுங்கூட, மிக மிகச் சொற்பமான ஒரு பெரும்பான்மையின் மீது ஒரு முடிவைத் திணிப்பது நிரம்பவும் அவிவேகமான காரியம் என்றே கருதப்பட்டது.



**வாக்கெடுப்பு உண்மை**

நீண்ட பல காரசாரமான விவாதங்கள் நடைபெற்றபின் காங்கிரஸ் கட்சியானது தேசிய மொழிப் பிரச்னையை அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்களின் சுயேச்சையான வோட்டுக்கு விடுவதே புத்திசாலித்தனம் என்று கருதிற்று.

அரசியல் நிர்ணயச் சட்டத்தின் மொழிப் பிரிவுடைய நகல் மீது சபையில் விவாதத்தைத் தொடங்கி வைத்த சபைத் தலைவர் டாக்டர்

ராஜேந்திர பிரசாத் அவர்கள் இவ்விஷயமாக மூந்நூற்றுக்கு மேற்பட்ட திருத்தங்கள் இருப்பதைக் குறிப்பிட்டு, பின்வருமாறு எச்சரித்தார்:

பிரசாத்தின் எச்சரிக்கை

> "மொழிப் பிரச்னையில் எந்த விதமான முடிவை எடுத்தாலும், அதை நாடு முழுவதும் ஏகோபித்து நிறைவேற்ற வேண்டும் என்பதை நாம் மறக்காதிருப்போமாக. அரசியல் சாஸனம் முழுவதிலும் இந்தப் பிரிவைப்போல் இனந்தோறும், மணிகள்தோறும், நிமிஷங்கள்தோறும் என்றுகூடச் சொல்வேன், நடைமுறையில் அமுல் நடத்த வேண்டிய சட்டம் வேறெதுவும் இல்லை. எனவே இச்சபையின் முடிவு நாடு முழுவதும் அங்கீகரிக்கக் கூடியதாக இருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட அம்சத்தை நாம் பெரும்பான்மையாக நிறைவேற்றினாலுங்கூட நாட்டு மக்களில் வடக்கிலோ தெற்கிலோ உள்ள குறிப்பிடத்தக்க ஒரு பகுதியினரின் ஆமோதிப்பை அது பெறவில்லையாயின் அரசியல் சாஸனத்தை அமுல் நடத்துவது மிகவும் சிரமமான பிரச்னையாகிவிடும்."

மொழிப் பிரச்னையில் ஈடுபட்ட பிரபல அங்கத்தினர்களின் உள்ளப் பாங்கு அப்போது இப்படி இருந்தது. ஆனால் அரசியல் நிர்ணயச் சட்டம் செயல்படத் தொடங்கியதோ இல்லையோ ஹிந்தி ஆதரவாளர்கள் இதையெல்லாம் மறந்து விட்டார்கள். மொழிக் குழுவின் ஓர் அங்கத்தினராக இருந்த டாக்டர் எஸ். கே. சட்டர்ஜி 1955ல் பின்வருமாறு கூறினார்:

"ஹிந்தி பேசாத மக்கள் தங்கள் தாய்மொழிகளைப் பற்றியும் ஆங்கிலம் பற்றியும் என்ன உணர்ச்சி கொண்டிருக்கிறார்கள், அறிவு வழியே என்ன கருத்து கொண்டிருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள எவ்விதமான முயற்சியும் எடுக்கப்படவில்லை என்பதே மொழிக் குழுவின் முழு அறிக்கையிலிருந்தும் தெரிகிறது. இந்த மனோபாவத்துக்கும் ஜனநாயகத்துக்கும் எட்டாத தொலைவாகும்."

குற்றம் சாட்டியும்...

"பெரும்பான்மையினர் சில திட்டங்களையும், விதிகளையும், ஒழுங்கு முறைகளையும் மத்திய சர்க்காரைக் கொண்டு நிர்ணயிக்க முயலுகிறார்கள். பாரதம் முழுவதிலும் மொழி விஷயத்தில் என்ன உண்மையான கருத்து நிலவுகிறது என்பதையோ, எதிர்காலத்தில் மக்களில் ஒரு கணிசமான பகுதியினரிடம் இது எத்தகைய எதிர்விளைவுகளையும், சலசலப்புகளையும் ஏற்படுத்தும் என்பதையோ கருத்தில் கொள்ளாமல் இவ்வாறு செய்கிறார்கள். இந்தப் பெரும்பான்மையினர் மொழிப் பிரச்னையை இறுதியாகத் தீர்த்து விட்ட ஒரு விஷயமாக ஹிந்தி பேசாத மக்களின் முன் வைக்க முயல்கிறார்கள்" என்று குழுவின் இன்னொரு அங்கத்தினரான டாக்டர் பி. சுப்பராயன் அவர்கள் குற்றம் சாட்டினார்.

மொழிப் பிரச்னையை 1959ல் ஆராய்ந்த பாராளுமன்றக் குழுவானது ஆட்சி மொழியை ஆங்கிலத்திலிருந்து ஹிந்திக்கு மாற்றும் செயல் முறை "எவ்விதமான நிலைகுலைவையும் ஏற்படுத்தாமல், குறைந்த பட்சமான சௌகரியக் குறைவையே ஏற்படுத்தும் முறையில் அமுலாக வேண்டும்" என்று ஒப்புக் கொண்டது. ஹிந்தி பேசாத பகுதிகளில் ஹிந்தி எப்படி அபிவிருத்தியடைகிறது என்பதற்குக் கவனம் அளிக்க வேண்டும் என்று கூறியது. எல்லாவற்றுக்கும் மேலாக, "இந்த மாற்றத்தால் எந்த மொழிக்காரர்களையும் எவ்விதமான பிரதிகூல நிலையிலும் வைக்கக் கூடாது" என்றும் கூறியிருந்தது.

இந்தக் கருத்துக்களின் மீதும், தமிழகம் மேற்கு வங்காளம் இவற்றின் முதன்மந்திரிகள் உள்படப் பலர் தெரிவித்த அபிப்பிராயங்கள் மீதும்தான் ஸ்ரீ நேரு அவர்கள் தற்போது திரும்பத் திரும்ப மேற்கோள் காட்டப்படும் தமது வாக்குறுதியை ஹிந்தி பேசாத மக்களுக்கு அளித்தார். அது ஒரு திட்டவட்டமான, நிபந்தனைகளற்ற, பூரணமான வாக்குறுதியாகும். அவ்வாறிருக்க, சமீபத்திய ஆட்சி மொழி மசோதாவுக்கு முக்கிய காரணமான உள்துறை மந்திரி நேருஜியின் வாக்குறுதியை மீறியது ஏன்? இவ்விஷயமாக நான் ஆச்சரியப்படவில்லை. இதில் எனக்குப் பழைய அநுபவமுண்டு. 1960ம் ஆண்டு மத்திய அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்த போது, "இந்தச் செய்கை மிகவும் வருந்தத் தக்கது என்றாலும் இதற்காக அரசாங்கத்தைத்தான் குற்றம் சொல்ல வேண்டும்; ஏனெனில் பிரிட்டனில் உள்ள 'விட்லி கௌன்ஸில்'கள் போல ஊழியர்களுடன் பேச்சு வார்த்தை நடத்த ஓர் அமைப்பை ஏற்படுத்துவதாக அரசாங்கம் அளித்திருந்த வாக்குறுதியை நிறைவேற்ற அது தவறி விட்டது" என்று நான் ஸ்ரீ நேருவுக்கு எழுதியிருந்தேன். அதற்கு அவர் அளித்த பதிலில் வேலைநிறுத்தத்தில் தமக்குள்ள பொறுப்பை வெளிப்படையாக ஒப்புக் கொண்டார். வேலை நிறுத்தம் முடிந்தபின் எவ்வளவு விரைவில்

பழைய அநுபவம்

இயலுமோ அவ்வளவு விரைவில் வாக்குறுதி மதித்துக் காப்பாற்றப்படும் என்றும் கூறினார். மூன்று முழு ஆண்டுகள் ஓடி விட்டன. ஸ்ரீ நேரு, உள் துறை மந்திரி இருவருக்கும் நான் பல முறை நினைவுபடுத்தி விட்டேன்.

**பதில் இல்லை...**

ஆனால் ஒரு பதிலும் இல்லை. நடவடிக்கை எடுக்கப்படும் என்பதற்கு ஓர் அறிகுறியும் இல்லை.

மேலும், ஸ்ரீ நேருவின் தலைமைக்கு அவரது கட்சியிலேயே எதிர்ப்பு இல்லாமலும் இல்லை. கட்சியின் பிரவாதம் இல்லாவிடில் சென்ற நவம்பரில் ஸ்ரீ கிருஷ்ணமேனன் மந்திரி சபையிலிருந்து வெளியேற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிராது என்பது யாவரும் அறிந்ததே.



ஸ்ரீ நேருவுக்குக் கட்சியின் மீதுள்ள பிடிப்பு பலவீனமடைந்து வருவது எல்லா அம்சங்களிலும் எதிர்விளைவுகளை உண்டாக்கியுள்ளது. கட்சியின் நிர்ப்பந்தம் மிகவும் வலுவாக இருந்தால், தமது சொந்தக் கருத்து எதுவாயிருப்பினும் அவர் பணிந்து விடுகிறார். சமீபகால இடைத் தேர்தல்களிலிருந்து காங்கிரஸ் கட்சிக்கு நாட்டில் உள்ள அந்தஸ்து வலுக்குன்றி வருகிறது என்பது தெரிகிறது. இதனைக் காங்கிரஸ்காரர்களும் அறிந்துள்ளார்கள். எனவே, பெரும்பான்மையான பொதுமக்களை உணர்ச்சிவசப்படுமாறு தூண்டுகிற விஷயங்களில் அவர்களுடைய கருத்தோட்டத்துக்கேற்பத் திசை மாறவேண்டும், இம்மாதிரி திரும்புவதால் என்ன இன்னல் நேர்ந்தாலும் பொருட்டில்லை என்ற மனோபாவம் காங்கிரஸாருக்கு வளர்ந்து வருகிறது. வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமானால், பாராளுமன்றத்தில் உள்ள காங்கிரஸ் கட்சி அமைப்பானது ஸ்ரீ நேரு அவர்களின் வாக்குறுதிகளுக்கோ, மதிப்பீடுகளுக்கோ தான் கட்டுப்பட்டிருப்பதாக எண்ணிய நாட்கள் மலையேறி விட்டன. ஏதோ ஒரு செயல் முறை அதிகமான மக்களிடம் தங்களுக்கு ஆதரவு பெற்றுத் தரும் என்றால் அதையே பின்பற்ற வேண்டும், அதனால் நிகழும் மற்ற விளைவுகளுக்கு முக்கியத்துவம் தர வேண்டாம் என்று காங்கிரஸ் கட்சி கருதுகிறது.

ஹிந்தித் திணிப்பில் தென் இந்தியா மட்டும் தீவிரமான எதிர்ப்புணர்ச்சி கொண்டிருக்கவில்லை. வங்காளமும் முற்றிலும் இதே கருத்துக்களைக் கொண்டுள்ளது. இப்போது ஹிந்தி பேசாத எல்லாப் பகுதிகளிலுமுள்ள மக்கள் என்ன செய்ய வேண்டும் என்றால் ஹிந்தியின் உற்சாக ஆதரவாளர்கள் உண்டாக்கியுள்ள சூழ்நிலையை முறியடிக்க நீண்ட கால அடிப்படையில் ஒரு கொள்கையை வகுத்துக் கொள்ள வேண்டும்.

**செய்ய வேண்டியது...**

உடனடியாகச் செய்ய வேண்டியது என்னவெனில்: மொழிப் பிரச்னை விவாதத்தின் போது கட்சிக் கொறடாவின் உத்தரவுப்படி நடந்தோ, அல்லது வாக்களிக்கும் சமயத்தில் சபையில் இல்லாதிருந்தோ 'சௌகரியமான' ஒரு வழியை அநுசரித்த எல்லாப் பாராளுமன்ற அங்கத்தினர்களின் பெயர்ப் பட்டியல் ஒன்றைத் தயாரிக்க வேண்டும். தங்களுடைய அந்தரங்கக் கருத்தை எடுத்தியம்பத் திராணியற்றவர்களுக்குப் பாராளுமன்றத்தில் இடம் கிடையாது என்பதை அவர்களுக்கு உணர்த்த வேண்டும். முக்கியமாக அந்த அங்கத்தினர்களின் தேர்தல் தொகுதி மக்கள் இதைச் செய்ய வேண்டும்.

# கேட்டு நடந்தால் கேடில்லை

*சா. கணேசன்*



சுதந்திரக் கட்சியின் தமிழகத் தலைவர் திரு சா. கணேசன் ஆழ்ந்த தமிழ்ப் பற்றுள்ளவர். அரசியல் துறையில் நீண்ட காலம் ஈடுபட்டு, நேர்மைக்கும், நியாயத்துக்கும் போராடும் தீரர். ஹிந்தி வெறியர்களின் நடவடிக்கைகளை அழிச்சாட்டியம் என்பதுடன் மத்திய சர்க்காரின் ஒத்துப்பாடும் செயலை 'நெறி கெட்ட' முறை என்று வன்மையாகக் கண்டிக்கிறார்.

ஆட்சி மொழியாவதற்குரிய ஒரு மொழி அரசியல், சட்டவியல், வாணிகவியல், பொருளியல், தொழிலியல், கலையியல், தத்துவவியல், அறிவியல், வாழ்வியல் முதலான பல்துறை நூல்களையும் கொண்டு இலக்கிய வளம் செறிந்து பண்பட்டதாக இருக்க வேண்டும். வரையறைக்குள் அடங்கியதும், தெளிவானதும், மயக்கமற்றதுமான பொருள் நலம் தரக்

**ஆய்ந்து பார்த்தால்...**

கூடிய சொல்வளம் உடையதாக இருக்க வேண்டும். பல்வேறு துறைகளிலும் நெடுங்காலம் பயின்று வந்தமையால் ஏற்பட்ட பொருட் செறிவு கொண்ட சொற்பெருக்கம் உடையதாக இருக்க வேண்டும். நீண்ட காலமாகச் சட்ட மன்றம், நீதி மன்றம், வாணிகக் குழுக்கள் போன்றவற்றில் அம்மொழி வழங்கி வந்திருக்க வேண்டும். இவற்றையும், இவை போன்றவற்றையும் ஆய்ந்து கணித்தறிய வேண்டும்.

எல்லாவற்றுக்கும் மேலாகப் பல மொழி வழங்கும் ஒரு நாட்டில் ஒரு குறிப்பிட்ட மொழியை ஆட்சி மொழியாக்கினால் மற்ற மொழியினருக்குச் சங்கடங்களும், ஒக்க வளர முடியாத தடைகளும் ஏற்படாமல் இருக்குமா என்பதைத் தேர்ந்து தெளிய வேண்டும். இங்ஙனம் இது போன்ற பல பிரச்னைகளையும் மனத்தில் கொண்டு சோதனைகளையெல்லாம் செய்து, ''நன்மைதான்; தீமையில்லை'' என்ற முடிவு கிடைத்த பின்னர்தான் ஒரு மொழியை ஆட்சி மொழியாக்கலாம். இந்த நெறிகளை மனத்துட்கொண்டு ஹிந்தி ஆட்சி மொழியாவது சரியா என்பதை ஓரளவு ஆராய்வோம்.

ஹிந்தியில் பண்டைய இலக்கியமே இல்லை. மொழி வளத்தைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். சொற் பஞ்சம் ஹிந்திக்கு இருப்பதைப் போல வேறெந்த மொழிக்குமே இல்லை என்று சொல்லிவிடலாம். பல்வேறு துறைகளிலும் நூல்கள் மலிந்திருக்கவில்லை. அரசியல், சட்டவியல் போன்றவை என்றுமே அம்மொழியில் பெருவழக்கில் இருந்ததில்லை. பழங்காலச் சாசனங்களும், பட்டயங்களும் கூட ஹிந்தி மொழியில் இல்லை. பிராகிருதத் தொடர்பும், சம்ஸ்கிருதத் தொடர்புமுடைய பிற மொழிகளில் பிரபலமாக விளங்கும் நூல்களை அப்படியே ஹிந்தியில் மொழி பெயர்த்து விட்டு அவற்றை ஹிந்தி மொழி இலக்கியம் என்று சொல்லிப் பெருமைப் பட்டுக்கொள்வதில் ஹிந்தி மொழியினர் சிறிதுகூட நாணமடைவதில்லை.



உதாரணத்துக்காக ஒன்று. துளசிதாஸர் ஆக்கிய 'ராம சரிதமானஸ்' இருக்கிறதே, அதை நம்மில் பெரும்பாலோர் ஹிந்தி ராமாயணம் என்று தானே கருதிக் கொண்டிருக்கிறோம்? உண்மை வேறு. சம்ஸ்கிருதம் கலந்த அவதி மொழியில் அதைத் துளசி ஆக்கினார். அவதி என்ற அம்மொழி பிராகிருத வகையைச் சேர்ந்தது. அந்த நூலின் அருமையையும் பெருமையையும், அதே நேரத்தில் ஹிந்தி மொழியின் வெறுமையையும் கருதி அதை அப்படியே ஹிந்தி ஆக்கிக் கொண்டுவிட்டனர். இப்படியே நாலு நாலு பேராக உட்கார்ந்துகொண்டு அவசர அவசரமாகச் சொற்களை உற்பத்தி செய்தும் நூல்களைப் பெருக்கிக் கொண்டும் இருக்கிறார்கள்; அதாவது கொல்லுப் பட்டறை வேலை செய்து கொண்டிருக்கிறார்கள்.



மொழி வளர்ச்சி என்பது இயற்கையாக ஏற்படவேண்டிய ஒன்று. அது ஒரு பட்டறைப் பண்டமல்ல; நினைத்ததும் தட்டி அடித்து நீட்டி அகலப் படுத்திவிடக் கூடிய ஒன்றல்ல மொழி. மொழி என்பது தாவரம் போல. உரமிடலாம், நீர் வார்க்கலாம், ஒட்டுக் கட்டலாம். இவை போன்றவற்றை யெல்லாம் செய்யலாம்; செய்யவும் வேண்டும். ஆனால் மலரை ஆக்க முடியுமா? மணத்தைத்தான் ஊட்ட முடியுமா? கற்றோர் நாவிலும், கவிஞர் நூலிலும் தவழ்ந்து, அவற்றைப் பயில்கின்ற அளவு மிகுதியினாலே பழகி, மெருகேறி அழுத்தமும், ஆழமும் எய்தி, இறுக்கமும் பொலிவும் பெற்றுத் தெளிவடைந்த சொற்களே ஒரு மொழிக்கு வளத்தையும், தரத்தையும் தரவல்லன. மொழி வெறிக்கு ஆட்பட்டுவிட்டால் இந்த நியதி எல்லாம் புலப்படுமா என்ன? எனவே, ஆட்சி மொழி ஆவதற்குரிய அருகதையும், அந்தஸ்தும் இன்று ஹிந்திக்கு இல்லை - உண்டாவதற்கு இன்னும் சில நூற்றாண்டுகளாவது ஆகும் என்பது எல்லாம் விருப்பு வெறுப்பற்ற நடுநிலையாளர்களுக்குப் புலப்படாமல் போகாது.

**நெறிகெட்ட வேலை....**

இந்தியாவில் பேசப்படுகிற நூற்றுக் கணக்கான மொழிகளுள் பதினைந்து மொழிகளை இந்திய அரசியலமைப்பு பிரதான மொழிகளாக ஒப்புக் கொண்டிருக்கிறது. அந்தப் பதினைந்தினுள் ஹிந்தி, உருது, பஞ்சாபி என்பன மூன்று. அந்த மூன்றையும் ஒன்றாக்கினால் ஹிந்துஸ்தானி என்றுதான் வழங்க வேண்டும். ஹிந்திக்குத் தேவநாகரியே எழுத்து. உருது முதலியவற்றுக்கு அரபுதான் எழுத்து. உண்மை இப்படி யிருக்க ஹிந்தி என்பதே மொழிப் பெயராகவும், தேவநாகரியே மொழிக்குரிய எழுத்தாகவும் இருக்க வேண்டும் என்று அழிச்சாட்டியம் செய்யும் ஹிந்திக்காரர்கள் தங்கள் எண்ணிக்கை கணிசமானதாக இருக்க வேண்டும் என்பதற்காக உருது, பஞ்சாபி மொழியினரையும் சேர்த்து 'ஹிந்தி பேசுவோர்' என்று நெறியற்ற முறையில் கணக்கிடுகின்றார்கள். டில்லி அரசாங்கமும் அந்த நெறிகெட்ட முறையையே பின்பற்றிப் புள்ளி விவரங்களை வெளியிடுகிறது.



வாதத்துக்காக மூன்றையும் (ஏன், அந்த ஒவ்வொரு மொழிக்குள்ளும் தனித் தனியே பல மொழிகள் உள்ளன) ஒன்றாகவே கொண்டு பார்த்தாலும் சுமார் பதினைந்து கோடிப் பேர்கள் ஹிந்தி பேசுவோர். அவர்களுள் படித்தவர் தொகை சுமார் இரண்டரைக் கோடி. ஹிந்தி மொழி பேசாதவர் தொகை இருபது கோடி. இவர்களில் படித்தவர் சுமார் ஆறு கோடி.

தாய் மொழியாக இருப்பதாலும், இலக்கியச் செறிவற்ற மொழியாக இருப்பதாலும் அந்த இரண்டரைக் கோடி பேர்களும் மிக எளிதாய் ஹிந்தி மொழி வல்லவர்களாக ஆகி விடுவார்கள். வளமற்ற மொழியாய் இருந்தாலும் இலக்கண மரபுகள் மிக இடக்கராயும் குழப்பமாயும் இருப்பதால் பிற மொழியினருக்குப் பொதுவாகவும், தென்னாட்டினருக்குச் சிறப்பாகவும் ஹிந்தி மொழியில் தேர்ச்சி பெற்று அவர்கட்கு இணையாக விளங்குவது என்பது அருமை. அதன் காரணத்தால்,

**ஏட்டுச் சுரைக்காய்...**

''யாவருக்கும் சம அந்தஸ்தும் சம சந்தர்ப்பமும்'' என்று இந்திய அரசியல் அமைப்பின் முகவுரை பிரகடனம் செய்வது கறிக்குதவாத வெறும் ஏட்டுச் சுரைக்காய் ஆகிவிடும்.

ஹிந்திதான் ஆட்சி மொழியாக வேண்டும் என்று, மொழி வெறி கொண்டு, ஆர்ப்பாட்டம் செய்பவர்களின் நேர்மையையும், இதயசுத்தியையும் சிறிது பார்க்கலாம், இனி. உருதுவும் வட இந்திய மொழிகளுள் சிலவும் கலந்து பல்லாண்டுகளாக வளர்ந்து வரும் மொழியை ஹிந்துஸ்தானி என்பது வழக்கம். அந்த மொழி கூடாதாம். ஹிந்திதான், தூய ஹிந்திதான். ஆம், பெர்சிய, அரபியச் சொற்களின் கலப்பற்ற — சம்ஸ்கிருத, பிராகிருதச் சொற்களையே கொண்ட — சுத்த ஹிந்திதான் தேசிய மொழியாக அமைய வேண்டுமாம். ஹிந்துஸ்தானி என்பதைச் சொல்வதில் கூட ஏற்றுக் கொள்ள முடியாத அத்துணை வெறுப்பு அவர்கள் உள்ளத்தில். ஆனால் ஹிந்தி என்ற சொல்லுக்குள் உருது, பஞ்சாபி, குர்முகி, புஷ்டு, மைதிலி, அவதி போன்ற பல மொழிகளையும் அடக்கிக் காட்டி, ''பதினைந்து கோடி பேர் பேசும் மொழி இது. ஆகவே இதுதான் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்!'' என்று கட்சி கட்டிக் கொண்டு போரிடுகிறார்கள். அந்த அளவுகோலைக் கொண்டு மற்றொன்றை அளந்து காட்டினால் அதை ஒப்புக் கொள்ள மறுக்கிறார்கள். அது என்ன என்று பார்ப்போம்.

இந்தியாவில் ஹிந்தி யறிந்தோர் தொகை எவ்வளவோ அதைவிட மிக அதிகமானவர்கள், 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 0 என்ற எண் வரி வடிவத்தை அறிவார்கள். அப்படி யிருந்தும் அதை ஏற்றுக் கொள்ள மாட்டோம் என்று அடாபிடித்தனம் செய்கிறார்கள். இந்த வரிவடிவம் இந்திய எண்ணேயாகும். இந்தியாவிலிருந்து அரேபியர் மூலமாக ஐரோப்பாவுக்குச் சென்றமையால் அதை அரேபிய எண் (Arabic numerals) என்பார்கள் மேற்கு நாட்டினர்.

**இந்திய எண்...**

இந்தியாவில் மிகப் பெரும்பாலோர்க்குப் புரியக்கூடியதாயும், எழுதவும் படிக்கவும் கணக்கிடவும் எளிதானதாயும், உலகெலாம் பயின்று வருகின்ற பெருமையுடையதாயும் இருக்கிற 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 0 ஆகிய எண் இந்திய எண்ணாயிருந்தும் ஹிந்தி எண் அல்ல என்பதற்காக இதை ஒதுக்குகின்றனர். யாருக்கும் புரியாத ஹிந்தி எண்ணை வலுக் கட்டாயமாகப் புகுத்தி அதிலே ஆறுதலும், மகிழ்ச்சியும் வெற்றிப் பெருமிதமும் கொள்கிறார்கள். இந்த விதமான வெறுப்புணர்ச்சியின் அடிப்படையில் வளர்க்கப் பெறும் ஒரு மொழி ஆட்சி மொழியாவது என்பது கிடக்கட்டும், பொது மொழியாகக் கூட ஆக முடியுமா? ஆகத்தான் ஆகலாமா?

இந்திய மொழிகளுள் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, இயல்பாக, நெறிப்படி வளர்ந்துள்ள மொழி தமிழ். பல்வேறு முடி மன்னர்கள் பல நூற்றாண்டுகள் தென்னாட்டின் பல பகுதிகளில் செங்கோலோச்சியுள்ளனர். எண்ணற்ற அறங்களைச் செய்தனர். அதற்கான பல சாசனங்களைச் செய்துள்ளனர். அதன் காரணமாக ஏராளமான வரலாற்றுச் சான்றுகள் தென்னகத்தில்தான் மிகுதியாகக் கிடைக்கின்றன. கல்வெட்டுக்களாகவும், பட்டயங்களாகவும், இலக்கியங்களாகவும், லட்சக்கணக்கான சான்றுகள் இன்றும் கிடைக்கின்றன. அவற்றை யெல்லாம் கூர்ந்து, ஆய்ந்து, ஆயுங்கால் அன்றாட வாழ்க்கைக்குரிய பேச்சு-எழுத்து மொழி ஒரு வகையாகவும், இலக்கிய மொழி வேறொரு வகையாகவும், அரசியல் மொழி பிறிதொரு வகையாகவும் அமைந்திருப்பதை நன்கு உணர முடிகிறது. அவ்வத் துறையின் இயல்பையும் அவ்வவற்றுக்குரிய பொறுப்பு நிலையையும், அவற்றால் ஏற்படக் கூடிய பலாபலன்களையும் கணித்துணருங்கால் அந்த வேறுபாட்டின் சிறப்பு நன்கு புலனாகும். அரசியல் சாசனங்கள், பண்டைப் பேரரசர்

களின் அறக்கொடைகள் ஆகியவற்றை நாம் இன்றும் ஏராளமாகக் காண்கிறோம். ஒரே கருத்துக்கள் ஒரே சாசனத்தில் இரு மொழிகளில் பொறிக்கப் பட்டிருப்பதை நாம் காணலாம். காரணம் என்ன? ஒரு மொழியில் ஒரு சொல்லுக்கு இரு பொருள் இருக்கலாம். அல்லது காலகதியில் ஒரு சொல்லின் பொருள் வேறுபட்டுப் போய் விடலாம். சாசனம் செய்த காலத்தில் ஒரு சொல்லுக்கிருந்த பொருள் சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர் மாறி விட்டால் சாசனம் செய்தவரின் நோக்கமே நிறைவேறாமல் போய்விடக் கூடுமல்லவா? ஆகவேதான் இரு மொழியில் சாசனங்கள் எழுதப்பட்டு வந்திருக்கின்றன. தமிழ் — சம்ஸ்கிருதம்; சம்ஸ்கிருதம் — தமிழ்; தெலுங்கு-தமிழ்; தமிழ் — தெலுங்கு; தெலுங்கு — சம்ஸ்கிருதம்; சம்ஸ்கிருதம் — தெலுங்கு என்று இப்படியாக அமைந்திருக்கும். அபூர்வமாகச் சில, மும்மொழிகளிலும் அமைந்திருக்கும். இலங்கையிலுள்ள ஒரு பௌத்த விஹாரத்துக்குப் பள்ளிச் சந்தமாக விடப்பட்ட நிலக்கொடை பற்றிய சாசனம் தமிழ், சீனம், அரபு ஆகிய மும்மொழிகளில் பொறிக்கப்பட்டிருக்கிறது. இதில் சிங்கள மொழியே இல்லை என்பது குறிப்பாகக் கவனிக்கப்பட வேண்டிய ஒன்று. இவற்றிலிருந்தெல்லாம் புரிந்து கொள்ளக் கூடியது, புரிந்து கொள்ள வேண்டியது ஒன்றுதான். பேசுவோர் தொகை மிகுதியினால் மட்டும் ஒரு மொழி ஆட்சி மொழியாகிவிட முடியாது. ஆனால் வளமும் திராணியும்தான் ஒரு மொழியை ஆட்சி மொழியாக்க முடியும். இந்த உண்மையைச் சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்னமேயே பல மொழிகளில் வல்லவரான, பிரம சமாஜத் தந்தையான ராஜா ராம்மோகன் ராய் உணர்ந்து ஹிந்தி ஆட்சி மொழியாகத் தகுதியுடையதல்ல என்று முடிவு கட்டியதுடன் நில்லாது, ஆங்கிலமே தகுதியுடைய தென்றும் பல்வகைச் சான்றுகளின் மூலம் நிரூபித்தார். அதை யெல்லாம் நமக்கு இன்றும் ராஜாஜி போன்ற மாமேதைகள் அறிவுறுத்திக் கொண்டுதான் இருக்கிறார்கள். கேட்டு நடந்தால் கேடில்லை. இவ்வளவுதான் சொல்லலாம், இப்போதைக்கு!

கேட்டு நடந்தால்...

# பதினேழாம் நூற்றாண்டுக்குப் பயணமா?

டி. டி. கார்வே



ஆடம்பரமின்றி ஆயுட் காலம் முழுவதையும் ஆராய்ச்சியிலும் அறிவுப் பெருக்கத்திலும் செலவிடும் அறிஞர்கள் மிகுந்த மகாராஷ்டிரப் பிரதேசத்தைச் சேர்ந்த டாக்டர் டி. டி. கார்வே புகழ்பெற்ற மகரிஷி கார்வேயின் புதல்வர். மாதர்கள் கல்விக்கும் அவர்கள் முன்னேற்றத்துக்கும் வகை செய்து வரும் பூனா மாதர் பல்கலைக் கழகத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அலுவல்களைக் கண்காணித்து வருபவர். ஹிந்தி மொழி பற்றிய அடிப்படை விஷயங்களை உள்ளங்கை நெல்லிக் கனியென விளக்கி வைக்கிறார்.

ஆட்சி மொழி பற்றிப் பேசும்போது பெரும்பான்மையோரால் அமைதியாகவும் புத்திபூர்வமாகவும் விவாதிக்க முடிவதில்லை. உடனே உணர்ச்சி வசப்பட்டுப் போகிறார்கள். 'அரசியல் சட்டத்தின் மீது ஆணை' என்று கர்ஜிக்கிறார்கள். ஹிந்தி ஆட்சி மொழியாக இருக்கலாகாது என்று சொல்லுவோரெல்லாம் தேசத் துரோகிகள் என்று கண்டிக்கிறார்கள். மத்திய அரசாங்க நிர்வாகத்தில் ஆங்கிலம் துளியேனும் இடம் பெற்றால் பல தீமைகள் விளையும் என்று பயமுறுத்துகிறார்கள். ஆனால் இவ்விதம் உணர்ச்சி வசப்பட்டுப் போனால் இப்பிரச்னையின் முக்கியமான ஆதார அம்சங்களைச் சரிவரப் புரிந்துகொள்ள முடியாது. அமைதியுடனேயே ஆராய்தல்வேண்டும்.

உணர்ச்சி வயப்பட்டால்...




இந்தியா பல மொழிகள் பேசப்படும் நாடு. பல ராஜ்யங்கள் ஒன்றாக இணைந்து திகழும் ஐக்கிய தேசம். இந்த ராஜ்யங்கள் எல்லாம், ஏறக்குறைய தனித் தனி மொழி பேசப்படும் தனிப் பிரதேசங்கள். இரண்டாவது, பிரதானமாக உள்ள பிராந்திய மொழிகள் எல்லாம் ஏறக்குறைய சமமான வளர்ச்சி அடைந்துள்ள மொழிகளே. எந்த ஒரு மொழியும் மற்ற மொழியைக் காட்டிலும், ஆட்சி மொழியாக இருப்பதற்கு அதிக தகுதியுள்ளது என்று சொல்ல முடியாது. மூன்றாவது, ஆங்கிலேயரின் ஆதிக்கம் ஏற்பட்ட காலம் முதல் இன்று வரையில் நாட்டின் அரசாங்க மொழியாக ஆங்கிலம் தான் செயலாற்றி வருகிறது. அவசியம் ஏற்பட்ட போதெல்லாம் பிராந்திய மொழிகளில் மொழிபெயர்ப்புக்கள் செய்யப்பட்டு வந்திருக்கின்றன. இந்த

மூன்று அம்சங்கள் நமது நாட்டுச் சூழ்நிலையில் ஆட்சிமொழி பற்றி நாம் கவனிக்க வேண்டியவை.

**ஆட்சி மொழியின் அவசியம்**

தனி மொழிப் பிரதேசங்கள் இணைந்த ஐக்கிய நாட்டில், அரசாங்க மொழி செய்ய வேண்டிய காரியங்கள் என்னென்ன என்று பார்ப்போம். வெளிநாடுகளுடன் தொடர்பு கொள்வதற்கு அநுகூலமாக இருத்தல் வேண்டும். மத்திய அரசாங்க இலாக்காக்களில் ஒன்றோடொன்றுக்கும், ஒவ்வோர் இலாக்காவுக்குள்ளும் விஷயப் போக்குவரத்துக்கு ஆட்சிமொழி சாதகமாக இருக்க வேண்டும். மத்திய அரசாங்கமானது ராஜ்ய அரசாங்கங்களுடனும், ராஜ்ய அரசாங்கங்கள் தங்களுக்குள்ளேயும் விஷயப் போக்குவரத்து செய்வதற்கு ஏற்றவாறு இருக்க வேண்டும். (கடைசியாகச் சொல்லப்பட்ட அம்சத்தில் வேண்டுமானால் ராஜ்யங்கள் தங்கள் பரஸ்பர ஒப்புதலின்பேரில் மாற்றங்கள் செய்து கொள்ளலாம்.) மக்கள் சபை, ராஜ்ய சபை நடவடிக்கைகள் அமைதியாக நடைபெறுவதற்கு ஆட்சி மொழி உபயோகப்பட வேண்டும். நிறைவேற்றப்படும் சட்டங்களின் வாசகங்கள் ஆட்சி மொழியில்தான் இயற்றப்பட வேண்டும். இவ்வாறு இயற்றப்பட்ட வாசகங்களை மட்டுமே நீதி மன்றங்கள் அதிகார பூர்வமானவை என்று ஒப்புக் கொண்டு நீதி பரிபாலனம் செய்வது வழக்கம். மத்திய சர்க்கார் பதவிகளுக்கு நடத்தப்படும் போட்டிப் பரீட்சைகள் ஆட்சி மொழி மூலமே நடைபெறும். பொதுவாகக் கல்லூரிகளிலும் உயர் படிப்புக்கு அரசாங்க மொழியே மேற்கொள்ளப்படும்.

**தகுதியில்லை..**

இவ்வளவு காரியங்களுக்கும் ஹிந்தி மொழியோ, அல்லது எந்தப் பிரதேச மொழியோ தகுதி வாய்ந்ததுதானா என்றால், மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போதே அல்ல என்று உடனே தெரியும். ஹிந்தி மொழி நாட்டு மக்களில் நாற்பத்தைந்து சதவிகிதத்தினரால் பேசப்படுகிறது என்பது இப்பிரச்னைக்கு அவசியமில்லாத விஷயம். ஏனெனில், முதலாவதாக, ஹிந்தி மொழியை எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை பத்து சதவிகிதம்தான். **எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை தான்** இங்கே முக்கியமானது. பேசுபவர்களின் எண்ணிக்கை அல்ல. தினசரி நடவடிக்கைகளில் ஆட்சி மொழியை உபயோகிப்பவர்களின் எண்ணிக்கையும், இதற்காக ஹிந்தி மொழியை உபயோகிக்கக் கூடியவர்களின் எண்ணிக்கையும் மிக மிகக் குறைவாகவே இருக்கும். இப்படிப் பார்த்தால், ஹிந்தி மொழி, இப்போதுள்ள அதன் வளர்ச்சியில், ஆட்சி மொழியாகச் செயல்புரிவதற்குத் தகுதியுடையதல்ல என்றே ஏற்படும். மேலும் ஆட்சிமொழியைக் கையாள வேண்டிய பெரும்பான்மையினருக்குப் போதிய அளவு ஹிந்தி மொழி அறிவு இல்லை.

குறிப்பிட்ட ஒரு பிராந்திய மொழி நாட்டின் ஆட்சி மொழியாக உயர்த்தப்பட்டால், மற்றப் பிராந்தியங்களில் உள்ள மக்களுக்கு இதனால் கேடு விளையும், கஷ்டங்கள் உண்டாகும் என்பது எவரும் உணரக்கூடிய எளிய உண்மை. ஹிந்தி பேசும் மக்களுடன் தங்களுக்கும் சமமான வாய்ப்புகள் கிடைக்க வேண்டுமேயானால், ஹிந்தி பேசாத மக்கள் ஹிந்தி மொழியில் உயர்ந்த அளவு பாண்டித்தியம் பெறும் வரை அதனைக் கட்டாயமாகக் கற்க வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகும். இந்த

**ஏகாதிபத்தியம்...**

நிர்ப்பந்தம்தான் சில சமயங்களில் ''ஹிந்தி ஏகாதிபத்தியம்'' என்று விவரிக்கப்படுகிறது. தகுதியின் அடிப்படையில் அல்லாது, பேசும் மக்களின் எண்ணிக்கை அடிப்படையில் திணிக்கப்படும் இந்த மொழி ஆதிக்கம் ''ஜனநாயக முறைப்படி பெரும்பான்மையினரின் ஆணை'' என்று சொல்லப்படுகிறது. இது தவறு. சிறுபான்மை வகுப்பினரை அழித்துவிடப் பார்ப்பதும், நசுக்கி விடும் எந்த முறையும் ஜனநாயகமாகாது. இந்துக்கள் பெரும்பான்மை வகுப்பினர்களானாலும், பிற மதத்தினர்களைக் கொடுமைப்படுத்தவோ, நசுக்கவோ, கஷ்டங்களை விளைவிக்கவோ முற்பட்டால் அது நியாயமாகாது. சிறுபான்மையினருக்குத் தனிச் சலுகைகள் அளித்து, அவர்களுடைய தேவைகளுக்கும் உணர்ச்சிகளுக்கும் தனி மதிப்புக் கொடுத்துக் காப்பதுதான் ஜனநாயகமுறையின் தனிச் சிறப்பு. (ஹிந்தி மொழி சம்பந்தப்பட்ட வரையில், **ஹிந்தி பேசாத மக்களின் எண்ணிக்கைதான் நாட்டின் மொத்த ஜனத்தொகையில் அதிகம்** என்பதை இங்கே குறிப்பிட வேண்டும். எனவே அவர்கள் எதிர்பார்ப்பது சிறுபான்மையினரின் உரிமை அல்ல. தனித்தனியாக மற்ற மொழிகளைப் பேசும் மக்களைவிட ஹிந்தி பேசுபவர்களின் எண்ணிக்கை அதிகம் என்று மட்டுமே அவர்கள் சார்பில் சொல்லலாம். அவர்கள் நிச்சயமாக நாட்டின் பெரும்பான்மையினர் அல்ல.)

**வெறியர்களின் ஏனனம்**

சில ஹிந்தி வெறியர்கள் ஆங்கிலம் தெரிந்தவர்களின் எண்ணிக்கை இரண்டு சதவிகிதம்தான் என்று ஏளனமாகச் சொல்லுகின்றனர். இது உண்மையாக இருக்கலாம். (1961ம் ஆண்டு ஜனசங்கியைக் கணிதப்படி மொழிவாரி விவரங்கள் இன்னும் வெளியாக வில்லை.) ஆனால் மத்திய அரசாங்க விவகாரங்களைக் கவனிப்பவர்கள் எல்லாரும் இந்த இரண்டு சதவிகிதத்தில் அடங்கிவிடுவர்கள். அரசாங்க அலுவல்கள் எல்லோரும் கவனிக்க வேண்டியதல்ல. யார் கவனிக்க வேண்டுமோ அவர்களெல்லாம் இன்று நாடு பூராவும் ஆங்கில அறிவு பெற்றிருக்கிறார்கள் என்பதுதான் இங்கு முக்கியமான விஷயம்.

**தனிச் சலுகையா?**

இந்தப் பிரச்னையில் மற்றொரு முக்கியமான அம்சமும் உள்ளது. மத்திய அரசாங்க நிர்வாகம் பாரபட்சம் இல்லாத வகையில், மொழி, இனம், ஜாதி, மத அடிப்படையில் எந்த வகுப்புக்கும் விசேஷச் சலுகைகள் காட்டாது. அதேபோல் இன்னல்களும் ஏற்படுத்தாமல் நிர்வாகத்தை நடுநிலைமை வகித்து நடத்துகிறது என்ற நிச்சயம் நாட்டில் ஒவ்வொரு பிரஜைக்கும் ஏற்பட வேண்டும். நாட்டு மொழிகளில் ஒன்றாகிய ஹிந்தியை ஆட்சி மொழியாகச் செய்வது அந்த மொழி பேசுபவர்களுக்குத் தனிச் சலுகைகள் காட்டுவதில்தான் முடியும். அதாவது, ராஜஸ்தான், உத்தரப் பிரதேசம், பஞ்சாபின் சில பகுதிகள் ஆகிய பிரதேசங்களில் வசிப்பவர்கள் விசேஷச் சலுகை பெறுவார்கள். இதன் விளைவாக, மற்ற ராஜ்யங்களில் உள்ளவர்களிடம் மனத்தாங்கலும் துவேஷமும் வளரும். ஹிந்தி மொழி நாட்டின் ஒற்றுமைக்கு ஆதாரமாக அமையும் என்ற நம்பிக்கை நிறைவேறாது போகும். மாறாக, எண்ணிக்கை மீது கணக்கிட்டு, ஒரு மொழிக்கு அளிக்கப்படும் சலுகை, நாட்டின் பிளவுச் சக்திகளை வளர்ப்பதோடு, ஒற்றுமையைக் குலைக்கும்.

**புத்திசாலித்தனம் தேவை**

'ஆங்கிலம் அன்னிய மொழி. இதை உதறித் தள்ள வேண்டும். ஹிந்தி நமது நாட்டு மொழி. அதை ஆட்சி மொழியாகச் செய்ய வேண்டும்'' என்று மட்டுமே கூக்குரலிடும் குறுகிய மனப்பான்மையுள்ளவர்கள், பிரதிவாதத்தின் பலத்தையும், நியாயத்தையும் உணரக் கூடியவர்கள் அல்ல. அவர்கள் உண்மையை உணர விரும்பாதவர்கள். ஆனால் இந்த மாதிரிதான் நமது ஆட்சி மொழி விஷயம் முடிவு செய்யப்படுமேயானால், நாம் பதினேழாம் நூற்றாண்டுக் காலத்துக்கே சென்று விடலாம். சரித்திரத்தில் நாம் பின்நோக்கிச் செல்லவேண்டியதுதான். உண்மையிலேயே இந்தியா 'நவீன தேச'மாகத் திகழ வேண்டும் என்று நாம் விரும்பினால், தற்போதைய நிலையை உள்ளபடி புத்திசாலித்தனத்துடன் உணர்ந்து கொள்ளுவதுடன், உள் நாட்டு, வெளிநாட்டு நிலைமையையும் புரிந்து கொண்டு, அவற்றுக்கு அனுகுணமாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.



## ஆட்சி மொழி — கருத்தரங்கு

ஆங்கிலமா ஹிந்தியா என்ற இந்தக் கருத்தரங்கில் இதுவரை பங்குபற்றியவர்கள்:

**ராஜாஜி, ஸ்ரீமதி மோனு ஹெறன்ஸ்மன் திரு ஃபிராங்க் அந்தோனி திரு என். மாதவ ராவ், டாக்டர் சி பி ராமசுவாமி அய்யர், பேராசிரியர் ரத்தினசாமி, திரு கே. கே. சின்ஹா, திரு பி. சிவராவ், திரு சா. கணேசன், டாக்டர் கார்வே**

இனி பங்குபற்றப் போகிறவர்கள்

**டாக்டர் லட்சுமணசுவாமி முதலியார், ராஜா ஸர் முத்தையா செட்டியார், ஸர் பி. டி. ராஜன் திரு சி. என். அண்ணாதுரை திரு கே பாலசுப்ரமணிய அய்யர், தமிழகம் திரு சுப்பையா, திரு கிருஷ்ணசாமி பாரதி திரு கருமுத்து தியாகராஜ செட்டியார், பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி டாக்டர் ஏ. கிருஷ்ணசுவாமி, திரு ஏ. என். பரசுராம், திரு நெடுஞ்செழியன், திரு கே. வி சூரிய நாராயண அய்யர், ஜனாப் பஷீர் அஹமத் சயீத், திரு என். முருகேச முதலியார், திரு பி. கோதண்ட ராவ், திரு ஜி. கே. சுந்தரம், திரு. எம். ஜி. ராமச்சந்திரன்.**

# தன்மானம்

திருச்சிக் கல்லூரி ஒன்றின் முதல்வராக விளங்கிய அப்பாசாமி, தமது இரவுச் சாப்பாட்டை முடித்தபின் ஈஸிச் சேரில் அமர்ந்து வண்ணம் எண்ணங்களை ஓட விட்டுக் கொண்டிருந்தார். கல்லூரி இலக்கியப் பேரவையின் ஆண்டு விழா அடுத்த மாதம் நடைபெற இருந்தது.

ஆண்டு விழா சம்பந்தமாகப் பேராசிரியர்கள் சிலரும் செயலாளரும் கல்லூரி முதல்வரிடம் அன்று சில யோசனைகளைத் தெரிவித்திருந்தார்கள். அந்த யோசனைகளை ஆராய்ந்து திட்டங்களாக உருவாக்கிக் கொண்டிருந்த அப்பாசாமியின் மனத்தில் செயலாளர் கூறிய ஒரு நல்ல யோசனை மீண்டும் மீண்டும் ஒலித்துக் கொண்டிருந்தது. ஆண்டு விழாவுக்குத் தலைமை வகிக்கப் பெரிய பதவியில் உள்ளவர்கள் அல்லது பாராளுமன்ற உறுப்பினர்களைத்தான் தேடிப் பிடிப்பது வழக்கம். இந்த ஆண்டில் சிறந்த எழுத்தாளர் ஒருவரைத் தலைமை தாங்க வரவழைக்க வேண்டும் என்பது தான் பேரவையின் செயலாளர் தெரிவித்த யோசனையாகும்.

சிறந்த எழுத்தாளர் என்ற சொற்களை யொட்டிக் கல்லூரி முதல்வரின் சிந்தனை ஓடிக் கொண்டிருந்தது. சமுதாயம் நல் வாழ்வு வாழச் சிறந்த கருத்துக்களை வழங்கும் எழுத்தாளர் ஒருவரை மாணவர்களுக்கு அறிமுகப்படுத்துவது நன்மை பயக்கும் என்று தோன்றியது அவருக்கு.

கல்லூரி முதல்வர் சிறு வயதிலிருந்தே தமிழ்ப் பத்திரிகைகளை விடாமல் படிப்பவர். அவருக்கு அபிமான எழுத்தாளர்கள் சிலர் இருந்தார்கள். ஆனாலும் தமது வாழ்க்கையையே மாற்றி யமைக்கும் வகையில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் ஒரு சிறுகதை எழுதியிருந்த மதுரநாயகம்தான் அவருக்கு மிகச் சிறந்த எழுத்தாளராகத் தோன்றினார்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் அப்பாசாமி கல்லூரிப் படிப்பை முடித்திருந்த போது காதலும் கடமையும் அவருடைய மனத்தை மாறி மாறி வாட்டி வதைத்துக் கொண்டிருந்தன. அவருடைய இலட்சியக்காதலியாக விளங்கிய ஸ்டெல்லா அவரது வைதிகக் குடும்பத்தைப் பார்த்து விட்டுக் காதல் உறவைச் சட்டென்று புறக்கணித்து விட்டாள். அதே சமயம் அவருடைய தாயாரும் திடீரென்று இறந்து விடவே, அவள் இறந்ததற்கு மகனுடைய விபரீத மனப் போக்கே காரணம் என்று தந்தை அபாண்டமாக அவர் மீது பழி சுமத்தினார்.



மாறன்

காதல் இலட்சியத்தில் ஏற்பட்ட தோல்வி, தாயின் மரணம், தந்தை சுமத்திய பழி இம்மூன்றும் அவருடைய உள்ளத்தைக் கலக்கின. வீட்டில் இருக்கவே அவருக்குப் பிடிக்கவில்லை. திரும்பத்

திரும்ப இவற்றையே சிந்தித்துச் சிந்தித்துச் செய்வதறியாது திகைத்து நின்றார். இனிமேல் துறவற வாழ்வுதான் தமக்குச் சிறிதளவு சாந்தியளிக்கும் எனத் தீர்மானித்தார்.

அந்த வேளையில் வாரப் பத்திரிகையொன்றில் வெளிவந்திருந்த சிறுகதையை அவர் படிக்க நேரிட்டது. 'மனச்சாட்சி' என்ற தலைப்பில் வெளியாகியிருந்த அந்தக் கதை அவருடைய மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. தன்னை விடக் கடுமையான சோதனைகளுக்கு ஆளாகிய ஒரு கதாநாயகனை அற்புதமாக வர்ணித்திருந்தார் கதாசிரியர் மதுரநாயகம். கதாநாயகன் எவருடைய விருப்பு வெறுப்புக்களையும் பொருட்படுத்தாத கர்மவீரனாக விளங்கி வாழ்க்கையில் வெற்றி காண்பதாக முடித்திருந்தார் கதையை. அப்பாசாமி அந்தக் கதையை மூன்று தடவைகள் படித்தார். மனத்தில் புதியதொரு தெளிவு ஏற்பட்டது. காதலில் ஏற்பட்ட தோல்வியையும், தந்தையின் பழிச் சொல்லையும் அந்த வினாடியிலேயே மனத்திலிருந்து அகற்றி விட்டார். ஒரு கல்லூரியில் பேராசிரியராகப் பதவியேற்று வேகமாக முன்னேறி அக்கல்லூரியின் முதல்வராகவும் ஆகி விட்டார். தந்தையின் விருப்பப்படியே திருமணம் செய்து கொண்டு இரண்டு புதல்வர்களுக்குத் தகப்பனாராகும் பாக்கியத்தையும் பெற்றிருந்தார் அப்பாசாமி.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற சம்பவங்களை மனத் திரையில் போட்டுப் பார்த்து விட்டு, எழுத்தாளர் மதுரநாயகத்தையே கல்லூரிப்பேரவையின் ஆண்டுவிழாவுக்குத் தலைவராக்குவது என்ற தீர்மானத்துக்கு வந்தார். மறு நாள் பேரவையின் செயற்குழுக் கூட்டத்தில் அப்பாசாமியின் தீர்மானம் மகிழ்ச்சியுடன் வரவேற்கப்பட்டது.

* * *

மாலை நான்கு மணி. தஞ்சையில் பிரபல பேங்கர் சின்னையாபிள்ளை வீட்டின் மாடியறையில் உள்ள ரேடியோ புத்தம் புதிய படப் பாட்டுக்களை மெதுவாக ஒலிபரப்பிக் கொண்டிருந்தது. எதிரிலுள்ள சோபாவில் உல்லாசமாகச் சாய்ந்து கொண்டு மெல்லிசைக் கடலில் மூழ்கிப் போயிருந்தான் சமையற்கார இளைஞன் சாமிநாதன். வீட்டு வாசலில் ஒரு கார் வந்து நின்றதும் முதலாளியின் ஆத்ம நண்பரான அப்பாசாமி அதிலிருந்து இறங்கி வந்து வாசலருகில் நின்றதும் அவனுக்குத் தெரியாது. வெளி வாசலில் வேப்ப மரத்தடியில் உள்ள சிமெண்டுப் பெஞ்சியின் மேல் சோகமே உருவெடுத்தாற்போல், கிழிந்த உடைகளுடன் அமர்ந்திருந்த ஒருவர், அப்பாசாமியைக் கண்டதும் மரியாதை காட்டும் பண்புடன் எழுந்து நின்றார்; வாசல் கதவு அடைக்கப் பட்டிருந்ததால், "சின்னையா பிள்ளை வீட்டில் இல்லையா?" என்று அந்த மனிதரிடம் கேட்டார் அப்பாசாமி.

"அவரும் அவருடைய மனைவியாரும் சுமார் ஒரு மணி நேரத்துக்கு முன்பு டவுனுக்குப் புறப்பட்டுப் போனதாகப் பக்கத்து வீட்டுக் காரர் சொன்னார்" என்று பணிவுடன் பதிலளித்தார் அந்த மனிதர்.

"அப்படியா?" என்று சொல்லி விட்டுத் தமது காரைத் தெரு ஓரமாக நிழலில் நிறுத்துவதற்குச் சென்ற அப்பாசாமி, "ஐயா! உங்களுக்கு இந்த ஊர் தானே?" என்று கேட்டார்.

"ஆமாம். என்னவேண்டும் உங்களுக்கு?" என்று கேட்டபடியே காரின் அருகில் வந்தார் கிழிந்த உடையாளர்.

"இங்கே மதுரநாயகம் என்பதாக ஓர் எழுத்தாளர் இருக்கிறாரே. அவர் வீடு எங்கிருக்கிறது என்று தெரியுமா உங்களுக்கு?"

"ஏன்? என்ன காரியமாக அவரைப் பற்றிக் கேட்கிறீர்கள்? நான் தெரிந்து கொள்ளலாமா?" என்று கேட்டார் அவர்.

"திருச்சியில் எங்கள் கல்லூரித் தமிழ்ப் பேரவையில் ஆண்டு விழா நடத்துகிறோம். அதற்கு மிஸ்டர் மதுரநாயகத்தைத் தலைவராகப் போட வேண்டும். அவருடைய வீடு உங்களுக்குத் தெரியுமா?" என்று அப்பாசாமி கேட்டார். எதிரில் நின்றவர் தலையைக் குனிந்தார். பின்பு மறுபக்கம் திரும்பியபடியே "எனக்குத் தெரியாது" என்று வெடிப்பாகச் சொல்லிவிட்டு அங்கிருந்து வேகமாகப் போய் விட்டார்.

முதலில் மிகவும் பணிவோடும் அன்போடும் தம்மிடம் வந்து பதிலளித்த மனிதர் சட்டென்று வேண்டா வெறுப்பாகவும் அலட்சியமாகவும் தெரியாதென்று சொல்லிவிட்டு அங்கிருந்து போனது அப்பாசாமிக்கு ஆச்சரியமாக இருந்தது. அதைப் பற்றி அதற்கு மேல் எதுவும் யோசிக்காமல், காரை வேப்ப மரத்தின் நிழலில் நிறுத்திவிட்டுச் சின்னையா பிள்ளையின் வீட்டுக் கதவைத் தட்டினார். மாடியில் ரேடியோ வாரி வழங்கிய இன்னிசையில் தன்னை மறந்து லயித்திருந்த சமையற்கார இளைஞன் பதறியடித்துக் கொண்டு வந்து கதவைத் திறந்தான். அப்பாசாமியைக் கண்டதும் கும்பிடுகள் பல போட்டுக் குழைந்தான். "முதலாளி ஐயா டவுனுக்குத்தான் போயிருக்காங்க. இப்ப வந்துடுவாங்க. உள்ளே வந்து உட்காருங்க. காப்பி போடட்டுமா?" என்று உபசரித்து அவரை உள் அறையில் கொண்டு உட்கார வைத்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் சின்னையாப் பிள்ளை தமது மனைவியுடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். சின்னையாப் பிள்ளைக்கு அப்பாசாமியின் மீது ஓர் அலாதியான அன்பு. ஒருவருக்கொருவர் சுக சௌகரியங்களையெல்லாம் விசாரித்தறிந்த பின் அப்பாசாமி தாம் அவசரமாக அங்கு வந்திருப்பதன் நோக்கத்தை அறிவிப்பதற்காக, "எழுத்தாளர் மதுரநாயகம் என்பவரை உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

"கதை கிதை எழுதுகிறவர்தானே! நல்லாத் தெரியுமே எனக்கு. என்ன விஷயம்? சொல்லுங்க!" என்று ஆவலோடு விசாரித்தார் சின்னையாப் பிள்ளை.

"நம்ம கல்லூரியிலே ஆண்டு விழா. அதற்கு அவரைத் தலைமை வகிக்கச் சொல்லணும்."

"யாரை? அவரையா?" என்று வியப்போடு கேட்ட லேவாதேவிக்காரர் அடுத்தாற்போல் ஏதோ சொல்ல வந்ததை மென்று விழுங்கிவிட்டார்.

"மிகச் சிறந்த கதைகளை எழுதியுள்ள அவரை நம்முடைய கல்லூரி மாணவர்

களுக்கு அறிமுகப்படுத்த வேண்டும் என்கிறது என் ஆசை.''

''அவர் வந்து.....நீங்க அவரைப் பார்க்கணுமா?''

''ஆமாம், பின்னே. நான் இங்கே வந்திருக்கிறது முக்கியமாக அந்தக் காரியத்துக்காகத்தான்.''

''அப்படியானால் மதுர நாயகத்தை இப்பவே இங்கே வரச் சொல்றேன்.''

''இங்கே வரச் சொல்வானேன்? அவரோ ஒரு சிறந்த எழுத்தாளர். நாமே அவர் வீட்டுக்குப் போய்ப் பார்த்துப் பேசுவோமே?''

''கூப்பிட்டு அனுப்பினால் அவர் அதை ஒரு குறையாக எடுத்துக் கொள்ள மாட்டார்!'' என்று கூறி அவரை அழைத்துவர ஆள் அனுப்பினார் சின்னையாப் பிள்ளை.

தம்மிடம் வந்து கடன் கேட்டு நிற்கிற இந்த மதுரநாயகத்துக்குத் தமது நண்பர் அப்பாசாமி அவ்வளவு உயர்வு கொடுத்துப் பேசுகிறாரே. அந்த மனிதனிடம் அப்படி என்ன சிறப்பு இருக்கும்? இப்படி அதிசயப்பட்டுக் கொண்டிருந்த சின்னையாப் பிள்ளைக்குத் தமது வாழ்க்கையில் ஏற்பட்ட நல்லதொரு திருப்பத்துக்கு மதுரநாயகத்தின் சிறுகதை ஒன்றே காரணமாக இருந்தது என்பதை அப்பாசாமி விவரமாக விளக்கினார். அதை ஆச்சரியத்தோடு கேட்டுக் கொண்டிருந்த சின்னையாப் பிள்ளையின் உள்ளத்திலும் மதுர நாயகம் ஓர் உயர்ந்த மனிதராக உருவெடுத்தார். ஆனபினும் அவருடைய ஏழைமையைப் பற்றியோ, அவர் தம்மிடம் கடன் கேட்டு அலைந்து கொண்டிருப்பதைப் பற்றியோ நண்பரிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை.

ஃ ஃ ஃ

எழுத்தாளர் மதுர நாயகம் தம் தாய் மாமன் வீட்டில் சோகச் சித்திரமாக ஒரு பழைய நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தார். இரண்டு மாதங்களுக்கு முன்பு அவரது தந்தை காலமாகி விட்டார். தமக்குத் திருமணம் வேண்டாம் என்று மதுர நாயகம் முன்பே மறுத்து விட்டதனால், வேறு எந்த வித பந்தங்களுமில்லாமல் தாய் மாமன் வீட்டில் போய் இரண்டு மாத காலமாகத் தங்கி யிருந்தார். அங்கேயும் அவருக்கு இருக்கப் பிடிக்கவில்லை. தம் தந்தையின் இறுதிச் சடங்குகளுக்காக மாமனிடம் வாங்கி யிருந்த கடனைக் கொடுத்து விட்டு வேறு எங்காவது போய்விடலாம் என்ற நோக்கத்துடன்தான் அவர் அங்கு தங்க நேரிட்டது.

மதுரநாயகத்துக்குப் பூர்வீகச் சொத்தாக ஒரு வீடும் சிறு வயலும் இருந்தன. அவர் வேறு தொழில்கள் எதையும் பாராமல் எழுத்துத் துறையையே தமது லட்சியமாகக் கொண்டு வாழ நினைத்ததால் பதினைந்து வருஷ காலத்தில் வயலை விற்றுவிட்டு வீட்டின் மீதும் பல முறை கடன் வாங்க வேண்டியதாயிற்று. சின்னையாப் பிள்ளைக்குத்தான் அவருடைய வீடு அடமானம் வைக்கப்பட்டிருந்தது. வட்டி ஏறிக் கொண்டிருந்ததனால், வீடு கடனில் மூழ்கிக் கொண்டிருந்தது.

வட்டியும் கடனும் சேர்ந்து வீட்டின் மதிப்புக்கு வந்துவிட்டதனால் வீட்டைத் தம் பெயருக்கு எழுதிக் கொடுத்துவிட வேண்டுமென்று சின்னையாப் பிள்ளை வாதாடினார். தம் வீட்டுக்குச் சரியான மதிப்புப் போட்டு மேற்கொண்டு முந்நூறு ரூபாய் தந்தால் வீட்டை அவர் பெயருக்கே எழுதிக் கொடுத்து விடுவதாக மதுரநாயகம் அவரிடம் பல தடவை சென்று கெஞ்சிக் கொண்டிருந்தார். இது விஷயமாக மீண்டும் கெஞ்சுவதற்காகத்தான் அன்று அவர் சின்னையாப் பிள்ளையின் வீட்டு வெளி வாசலில் கிடந்த சிமிண்டுப் பெஞ்சியின் மேல் கிழிந்த உடையுடன் உட்கார்ந்திருந்தார்.

அங்கு எதிர்பாராமல் வந்திறங்கிய ஒரு பெரிய மனிதர் தம்மிடமே மதுர நாயகம் என்பவரைக் கல்லூரி இலக்கிய விழாவுக்குத் தலைமை வகிக்க அழைக்க வந்திருப்பதைத் தெரிவித்ததும் அவரது உடம்பு பெருமிதத்தினால் புல்லரித்தது. உடனே சற்றுக் குனிந்து தமது கிழிசல் ஆடைகளைப் பார்த்தபோது அவரது கண்களில் நீர் துளித்தது. கலங்கிய கண்களை அந்தப் பெரிய மனிதர் பார்த்துவிடக் கூடாதே என்ற தன்மான உணர்ச்சியினால் தலையைத் திருப்பிக் கொண்டு ''அவரைத் தெரியாது'' என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டு நேராக வீட்டுக்கு வந்து சேர்ந்தார்.

தம்மைப் பற்றி அவ்வளவு உயர்வாக எண்ணிக் கொண்டிருக்கும் ஒரு பெரிய மனிதரின் எதிரில் அவல நிலையில் காட்சியளிக்க நேர்ந்ததை நினைந்து நினைந்து வருந்தினார் மதுரநாயகம். தாம் தான் அந்த மதுர நாயகம் என்று அவசரப்பட்டுச் சொல்லிவிடாமல் தப்பித்துக் கொண்டு வந்துவிட்டதைப் பற்றி அவருக்கு ஒரு விதத்தில் திருப்திதான்.

வந்திருந்த பெரிய மனிதர் லேவாதேவிக்காரருக்கு நண்பர் என்பதையும் மதுரநாயகம் நன்றாகப் புரிந்து கொண்டார். ஆகவே அவர் தம்மைப் பற்றி விசாரிக்கும்போது லேவாதேவிக்காரர் தம்முடைய தரித்திர நிலைமையும் கடன்களைப் பற்றியும் கல்லூரிப் பெரிய மனிதரிடம் விவரிப்பார். தம்மைப் பற்றி உயர்ந்த அபிப்பிராயம் கொண்டிருந்த அந்தப் பெரிய மனிதர் உடனே அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டு ஊருக்குப் போய் விடுவார் என்று எண்ணமிட்டபடியே நாற்காலியில் சாய்ந்திருந்தார் மதுரநாயகம்.

வாசல் பக்கம் சின்னையாப் பிள்ளை வீட்டுச் சமையல்கார இளைஞன் ''ஐயா! ஐயா!'' என்று கூப்பிடும் குரல் கேட்டு எழுந்தார் மதுர நாயகம். அவன் எதற்காக வந்திருக்கிறான் என்பதை ஒரு விநாடியில் புரிந்து

மனைவி: என் உறவினர்களைக் கண்டால் உங்களுக்குக் கட்டோடு பிடிப்பதில்லை.

கணவன்: அப்படிச் சொல்லி விடாதே! என் மாமியாரைக் காட்டிலும் உன் மாமியாரை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறதே!

## கடவுளுக்கு மார்க்கு !

வகுப்புப் பரீட்சையில் ஒரு கேள்விக்காவது பதில் தெரியவில்லை முத்துவுக்கு. இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பதில் ஆண்டவனுக்குத்தான் தெரியும் என்று எழுதிக் கொடுத்து விட்டுச்சினிமாவுக்குப்போய்விட்டான் அவன்.

அடுத்த வாரம் விடைத் தாள்களை மாணவர்களிடம் திருப்பித் தந்தார் பேராசிரியர். முத்துவின் விடைத் தாளில் அவர் எழுதியிருந்தார். "ஆண்டவனுக்குச் சரியான விடை தெரிந்திருக்கவே அவருக்கு நூற்றுக்கு நூறு கொடுத்து விட்டேன். அவர் பாஸாகி விட்டார்; ஸைபர் வாங்கிய நீ இன்னும் ஒரு வருஷம் இந்த ஆரம்ப வகுப்பிலேயே தங்க வேண்டியதுதான் !"

---

கொண்டு விட்டார். உடனே சட்டென்று வீட்டுத் தோட்டத்தின் பக்கம் ஓடினார். அங்கிருந்த மாமனிடம் போய், "மாமா, லேவாதேவிக்காரர் வீட்டுச் சமையற்காரன் என்னைத் தேடி வந்திருக்கிறான். அவனிடம் நான் ஊரில் இல்லை என்று சொல்லி அனுப்பி விடுங்கள்" என்று கெஞ்சினார். மாமனும் அவ்வாறே சொல்லி அந்தச் சமையற்காரனை அனுப்பி விட்டார்.

சமையற்காரன் தம்மை அழைக்க வந்ததிலிருந்து மதுர நாயகம் ஒரு விஷயத்தை ஊகித்தறிந்து கொண்டார். அந்தப் பெரிய மனிதர் எப்படியாவது தம்மை விழாவுக்குத் தலைமை வகிக்க அமர்த்துவதென்று தீர்மானித்திருக்க வேண்டும். அதனால்தான் சின்னையாப் பிள்ளை தமக்கு ஆள் அனுப்பியிருக்க வேண்டும் என்பது அவருடைய ஊகம்.

கடன் விஷயம் பற்றித் திரும்பவும் சின்னையாப் பிள்ளையிடம் கெஞ்சுவதற்காக மறு நாள் மாலையில் அவருடைய வீட்டுக்குச் சென்றார் மதுரநாயகம். என்றைக்குமில்லாத படி அவரை அன்போடும் மரியாதையோடும் வரவேற்று அவரை மாடியறைக்கு அழைத்துக் கொண்டு போனார் லேவாதேவிக்காரர். சோபாவில் உட்காரச் சொல்லி உபசரித்த பின் "நீங்கள் பெரிய ஆள் போலிருக்குதே. எனக்கு இதுவரைக்கும் தெரியாதுங்க. திருச்சிக் கல்லூரிப் பிரின்ஸிபால் அப்பாசாமி சொன்ன பிறகுதான் உங்களுடைய எழுத்தின் பெருமையெல்லாம் எனக்குத் தெரிய வந்தது. அவருடைய வாழ்க்கையையே நல்ல முறையில் திருத்திவிட்டுட்டதாம் நீங்க பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னே எழுதின 'மனச்சாட்சி' என்கிற ஒரு சிறுகதை" என்றார்.

மதுர நாயகம் அந்தக் கதையை நினைவுபடுத்திக் கொண்டு "அப்படியா?" என்று பெருமிதத்தோடு கேட்டு ஆனந்தமடைந்தார். தமது வாழ்க்கையின் லட்சியம் அப்பொழுதே பூர்த்தியாகி விட்டது போன்ற ஓர் எக்களிப்பு உணர்ச்சி அவரது முகத்தை மலரச் செய்தது. அவரது எழுத்தின் மூலம் ஒருவரது வாழ்வு பயனடைந்தது. அவ்வாறு பயனடைந்த பெரிய மனிதரையும் அவர் கண்ணெதிரே பார்த்தாகி விட்டது. மதுர நாயகத்துக்கு இனி வேறு எதுவும் தேவையில்லை இந்த உலகில். ஆகையினால் சின்னையாப் பிள்ளை மேற்கொண்டு பேசிய விஷயங்கள் எதையும் காதில் சரியாக வாங்கிக் கொள்ளாமல் சொப்பன உலகில் சஞ்சரித்துக்கொண்டிருந்தார் மதுரநாயகம்.

"அது சரி. கல்லூரி விழாவுக்குத் தலைமை வகிக்கணுமாம் நீங்க. பிரின்ஸிபால் ரொம்ப வற்புறுத்தினாரு. இதைப்பற்றி உங்களை அங்கே அனுப்பி வைக்கிற பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன்."

"மன்னிக்கணும் ஐயா. எனக்கு இதிலே இஷ்டமே இல்லை" என்று பிடிவாதமாகப் பதிலளித்தார் எழுத்தாளர் மதுரநாயகம்.

மதுரநாயகம் இவ்வளவு பிடிவாதக்காரராக இருப்பார் என்று சின்னையாப் பிள்ளை எதிர்பார்க்கவில்லை. தம் நண்பர் அப்பாசாமிக்காக வேண்டி, மீண்டும் ஒரு முறை அவரைத் 'தாஜா' செய்ய முயன்றார். "உங்களுடைய கடன் விவகாரங்களைப் பற்றியெல்லாம் நான் அவரிடம் எதுவும் சொல்லவில்லை. நீங்கள் சிறந்த எழுத்தாளர் என்பது மட்டும்தான் அவருக்குத் தெரியும். அப்படிப்பட்ட லட்சியக் கதாசிரியரை நேரில் காணவும் கௌரவப்படுத்தவும் விரும்புகிற ஒரு பெரிய மனிதரின் வேண்டுகோளை ஏற்கக் கூடாதா நீங்கள்?" என்று பணிவோடு வேண்டினார் சின்னையாப் பிள்ளை.

லேவாதேவிக்காரர் தம் கடன்களைப் பற்றியெல்லாம் கல்லூரி முதல்வரிடம் தெரிவிக்கவில்லை என்பதைக் கேட்டு ஒருவாறு திருப்தி அடைந்தார் மதுரநாயகம். ஆனாலும் கந்தல் உடையுடன் தம்மைப் பார்த்து விட்ட பிரின்ஸ்பாலின் முன் மீண்டும் அவர் தலைகாட்ட விரும்பவில்லை. இந்த விஷயத்தில் எழுத்தாளருடைய தன்மான உணர்ச்சி தலைதூக்கி நின்றது. தமது லட்சிய ரசிகரைக் கண்ணால் கண்டுவிட்ட இன்பமே அவருக்குப் போதுமானதாக இருந்தது. ஆகவே, சித்தனை பண்ணி ஒரு முடிவுக்கு வந்தவர்போல, "தயவு செய்து என்னை மீண்டும் வற்புறுத்த வேண்டாம்" என்று சின்னையாப் பிள்ளைக்குத் திட்டமாகப் பதிலளித்து விட்டார்.

இப்படியும் ஒரு வைத்தியக்கார மனிதர் இருக்கிறாரே என்று எண்ணிக் கொண்டு வீட்டின் மேல் உள்ள கடன் விஷயத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தார் லேவாதேவிக்காரர். அவர் இப்பொழுது மதுரநாயகத்தைப் பற்றிச் சிறிது உயர்வான கருத்துக் கொண்டிருந்ததனால் சற்றுத் தாராளமாகவே அவர் கேட்டபடி முந்நூறு ரூபாய் மேற்கொண்டு கொடுக்கத் தயாராக இருந்தார். அவரது தாராளத்தை எண்ணி எழுத்தாளர் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார்.

ஒரு மாதத்துக்குப் பின் குறிப்பிட்ட தேதியில் திருச்சிக் கல்லூரித் தமிழ்ப் பேரவையின் ஆண்டு விழா வழக்கம்போல் பாராளுமன்ற உறுப்பினர் ஒருவரின் தலைமையில் சிறப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. கல்லூரி முதல்வர் "எழுத்தாளர்களின் நற்பணி" என்ற தலைப்பில் ஒரு சொற்பொழிவை நிகழ்த்திக் கொண்டிருந்தார்... அதே சமயம் 'சிறந்த எழுத்தாளர்' மதுர நாயகம் தமது லட்சியத்தை நிறைவேற்றி விட்டதொரு திருப்தியுடன் தஞ்சை மாவட்டத்தில் உள்ள சைவத் திருமடம் ஒன்றை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்.




ஒவ்வொரு நேஷனல்-எக்கோ ரேடியோவும் அளவிறந்த தொழில் நுட்ப அறிவின் பயனாகத் தயாரிக்கப்பட்டது.

ரேடியோ உற்பத்தியில் உலகப் புகழ்பெற்ற, இங்கிலாந்திலுள்ள ஈ. கே. கோல் லிமிடெட் ஸ்தாபனத்தின் ஒத்துழைப்பை நேஷனல்-எக்கோ பெற்றுள்ளது. மேலும் மற்றவர்களை விட முன்னதாகவே, அதாவது 1940 லிருந்து நம் நாட்டில் ரேடியோ சம்பந்தமாகத் தாங்கள் நடத்தி வந்துள்ள ஆராய்ச்சியின் பயனையும் பெற்றுள்ளது. இந்த விதத்தில் மேனாட்டு தொழில் நுட்ப அறிவும் நம் நாட்டின் திறனும் இணைந்து நேஷனல்-எக்கோ இந்தியாவின் தலைசிறந்த ரேடியோ உற்பத்தியாளர்களாகத் திகழ்கிறார்கள்.

இதை நினைவில் வையுங்கள், அடிக்கடி வாங்கக்கூடிய பொருளல்ல ரேடியோ. ஆகவே அதைத் தேர்ந்தெடுப்பதில் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு தகுந்த மதிப்புப் பெற நேஷனல்-எக்கோ ரேடியோவையே வாங்குங்கள்!

## நேஷனல் எக்கோ

**நேஷனல்-எக்கோ— முன்னோடிகள், இன்றும் முதன்மையானவர்கள்!**

ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

GRA

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்

பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . பெங்களூர்
டில்லி . பாட்னா . ஸெகந்திராபாத்

நாடெங்கிலுமுள்ள 700க்கு மேற்பட்ட அதிகாரம் பெற்ற வியாபாரிகளால் விற்பனையும் ஸர்விஸிங்கும் செய்யப்படுபவை

JWT-GRA-3641

# தாக்கோர் துவாரகா நாதர்



தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்

'இப்படியன் இந்நிறத்தன், இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்ட ஒண்ணாது' என்கிறார் அப்பர் பெருமான். ஆனால் அப்படிப்பட்ட இறைவனைத்தான் கல்லிலும் செம்பிலும் வடித்து வைத்திருக்கிறோம் நாம். இப்படி இருக்கும்போது இறைவன் எவ்வளவு எடை இருப்பான் என்று நிறுத்துப் பார்த்துவிட முடியாதா என்ன என்று நினைப்போம். அதிலும் தோலா, பலம், மணங்கு என்ற எடையை யெல்லாம் ஒதுக்கிவிட்டு, கிராமாகவும், கிலோவாகவும் நிறுத்தல் அளவையைக் கணக்கிடும் இன்று இறைவன் எடை எவ்வளவு என்றுகேட்டால் எளிதாகச் சொல்லக்கூடுமா என்ன? முடியாது என்றுதானே கைவிரிப்போம்? ஆனால் பக்தர்கள் இதற்கெல்லாம் சளைக்கிறவர்கள் அல்ல. உலகில் உள்ள மக்களின் தராதரங்களையெல்லாம் எடை போட்டுச் சொல்லும் ஆற்றல் உடையவர்கள் அல்லவா அவர்கள்? ஆதலால் அந்த பகவானையே எடை போட முடியாதா என்ன? சரி ஏனையா கதையை நீட்டிக் கொண்டிருக்கிறீர்? பகவானின் எடைதான் எவ்வளவு என்கிறீர்? கணக்கிட்டிருக்கிறீரா என்றுதானே கேட்கிறீர்கள்? ஈரேழு பதினாலு உலோகங்களையும் அவர் காத்து எல்லா இடத்தும் பரந்து நிற்பவர்தான் என்றாலும் அவரது எடை எல்லாம் பக்தர் விஜய சிம்மரின் மனைவியான கங்காபாய் அம்மையாரின் மூக்குத்தி எவ்வளவு எடையோ அதற்கும் குறைவானதுதான். அதென்ன பகவானையும் கங்காபாய் அம்மையாரின் மூக்குத்தியையும் சேர்த்து எடை போட்டுவிட்டீரே என்றுதானே கேட்கிறீர்கள்? அதன் விவரம் தெரிந்துகொள்ள விரும்பினால் இன்றைய குஜராத் ராஜ்யத்திலுள்ள தாக்கோர் என்னும் டங்கபுரத்துக்கே செல்ல வேணும். அங்கேயே செல்கிறோம் நாம் இன்று.

தாக்கோர் என்னும் தலத்திற்கு ரயிலிலும் செல்லலாம்; ரோடு வழியாகவும் செல்லலாம். பம்பாயிலிருந்து அகமதாபாத் செல்லும் ரயிலில் ஏறி, ஆனந்த் என்ற ஜங்ஷனில் ரயில் மாறி, அங்கிருந்து ரட்லம் செல்லும் ரயிலில் சென்றால் தாக்கோர் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். இல்லையென்றால் அகமதாபாத் சென்று அங்கிருந்து காரிலோ பஸ்ஸிலோ சென்றாலும் தாக்கோர் போய்ச் சேரலாம். தாக்கோர் என்னும் டங்கபுரத்தில் கோயில் கொண்டிருப்பவர் கிருஷ்ண பரமாத்மாவே. துவாரகையில் எழுந்தருளியிருந்த இந்தப் பரமாத்மா இந்த டங்கபுரத்துக்கு வந்து சேர்ந்துவிட்டார் என்பது வரலாறு. அப்படி அவர் வந்து சேர்ந்த விவரம் ஒரு ரஸமான கதை. டங்கபுரம் என்னும் இத்தலத்தில் விஜய சிம்மர் என்பவர் தம் மனைவி கங்காபாயுடன் வசித்து வருகிறார். அவர் சிறந்த விஷ்ணு பக்தர். ராம பக்தியில் திளைத்த காரணமாக ராம தாஸர் என்றே அழைக்கப்படுகிறார். அவர் துவாரகா நாதரான கிருஷ்ண பரமாத்மாவையே தம் வழிபடு தெய்வமாகக் கொண்டவர். ஆண்டுக்கொரு முறையாவது துவாரகை சென்று கண்ணனைக் கண்டு தொழா விட்டால் அவரது ஆத்மா திருப்தி அடையாது. தம் கையிலேயே துளசியை வளர்த்து அத்துளசியைக் கொண்டே துவாரகா நாதனை வழிபாடு செய்பவர் அவர். அவருக்கு வயது எண்பது ஆகிறது. துவாரகையோ டங்கபுரத்திலிருந்து இருநூறு மைலுக்கு அப்பால் இருக்கிறது. போக்குவரத்துச் சாதனங்களும் கிடையாது. இந்தத் தள்ளாத வயதில் துவாரகை செல்வது கஷ்டமான காரியமாக இருந்திருக்கிறது. இருந்தாலும் அவர் நியமத்தை விடவில்லை. இவரது கஷ்டத்தை அறிந்த பரந்தாமன் விஜய சிம்மரது கனவில் தோன்றி, 'இனி நீர் துவாரகை வரவேண்டியதில்லை. நாமே டங்கபுரம் வருகிறோம். நாம் அங்கு எழுந்தருளுவதற்கு ஒரு வண்டி மட்டும் கொண்டு வாரும் பார்ப்போம்' என்று சொல்கிறார். இதனைச் செவிமடுத்த விஜய சிம்மர் ஆனந்த பரவசமாகி, ஓர் அன்பரிடம் வண்டியும் மாடும் பெற்று மிக்க சிரமத்தோடு துவாரகை சென்று சேர்கிறார். அங்கு ஒரு பிராமணர் இல்லத்தில் தங்குகிறார். அங்கும் துவாரகை நாதன் தான் அவருடன் கிளம்பத் தயாராக இருப்பதாகவும், தம்மை வந்து எடுத்துச் செல்லும்படியும் கனவில் உரைக்கிறார். நள்ளிரவில் ஊரில் உள்ளவர்களெல்லாம் உறங்கும்போது விஜயசிம்மர் துவாரகைக் கண்ணன் கோயிலுக்குச் செல்கிறார். இவரது கை பட்டவுடனேயே கதவுகளெல்லாம் திறந்து கொள்கின்றன. கருவறையில் இருந்த கண்ணனை எடுத்துத் தம் வண்டியில் ஏற்றி இரவுக்கிரவே டங்கபுரம் நோக்கிப் பிரயாணம் ஆகிறார் விஜய சிம்மர். என்ன அதிசயமோ, பொழுது புலருமுன் வண்டியும் விஜயசிம்மரும் டங்கபுரம் வந்து சேர்கின்றனர். துவாரகா நாதனைத் தம் இல்லத்திலேயே எழுந்தருளச் செய்து தாமும், தம் மனைவி கங்காபாயும் சேர்ந்து வழிபாடுகள் செய்கின்றனர்.

## முதல் மாணவி !

அமெரிக்காவில் வைத்தியத் துறையில் ஈடுபட்ட முதல் மாணவி எலிஸபெத் பிளாக்வெல். இவள் 1847ம் வருஷம் வைத்திய வகுப்பில் சேர்ந்தாள். பெண்மணியானதால் இத்தொழிலில் அவளுக்குப் பலத்த எதிர்ப்பு அந்த நாளில்! பிரேதங்களை அறுத்து ஆராயும் அறைக்குள் அவள் இரவு நேரத்தில் திருட்டுத் தனமாக நுழைந்துதான் தன் அறிவை வளர்த்துக் கொள்ள முடிந்தது. ஒருசிலர் இவளுக்காகப் பரிந்துகொண்ட போதிலும் வெளிப்படையாக உதவி புரிய முன்வரவில்லை. அவளது நண்பர்களில் ஒருவன், ''ஆண் உடை தரித்து பாரிஸுக்குப் போய் 'மெடிகல் கோர்ஸ்'ஸை முடித்துக் கொண்டு வந்து விடேன்'' என்றுகூட யோசனை கூறினான். ஆனால் எலிஸபெத் பிடிவாதமாகப் பெண் உடையிலேயே இருந்து வைத்தியப் படிப்பை முடித்தாள். பின்னால் இவளுடைய வைத்திய உரைகள், இங்கிலாந்தில் மருத்துவத் துறையில் ஈடுபட்டிருந்த முதல் பெண்மணியாகிய எலிஸபெத் காரட்டையும், நர்ஸிங் மூலம் புகழ் பெற்றிருந்த பிளாரன்ஸ் நைட்டிங்கேலையும் வெகுவாகக் கவர்ந்தன.

துவாரகையிலுள்ள பூசாரிகள் காலையில் கோயிலுக்குச் சென்றால் அங்கு துவாரகா நாதனைக் காணோம். விசாரித்ததில் டங்கபுரத்திலிருந்து வந்திருந்த விஜயசிம்மர்தான் எடுத்துச் சென்றிருக்க வேண்டும் என்று அறிகிறார்கள். ஆகவே டங்கபுரத்துக்கு அவர்கள் வந்து சேர்கிறார்கள். துவாரகையிலிருந்து அரசாண்ட மன்னனும் விஜயசிம்மரைப் பிடித்து வரத் தனது சேனை வீரர்களையெல்லாம் அனுப்புகிறான். விஜய சிம்மர் யாது செய்வது என்று தெரியாது மயங்கும் போது, துவாரகா நாதன், 'நீர் எம்மைப் பக்கத்திலுள்ள கோமதி புஷ்கரணியில் போட்டுவிட்டு யுத்த களத்துக்குச் செல்லும். அங்கு வரும் புஷ்பக விமானத்தில் ஏறி வைகுண்டம் வந்து நம் திருவடி நிழலில் அமர்ந்திரும்' என்று சொல்கிறார். அவர் சொன்னபடியே விஜய சிம்மரும் துவாரகா நாதனைக் கோமதி புஷ்கரணியில் போட்டு விட்டுப் போர்க்களத்துக்கே செல்கிறார். துவாரகையில் இருந்து வந்தவர்கள் விஜய சிம்மரைக் குத்திக் கொலை செய்துவிடுகிறார்கள். அவரது ஆன்மா மட்டும் வைகுண்டம் சென்று சேர்ந்து விடுகிறது. கங்கா பாய் விஜய சிம்மருக்குச் செய்ய வேண்டிய ஈமக்கடனைச் செய்கிறாள். துவாரகைப் பூசாரிகள் அவளது வீட்டை வந்து வளைத்துக்கொண்டபோது துவாரகா நாதன் கோமதி புஷ்கரணியில் கிடப்பதைச் சொல்லிவிடுகிறாள். பூசாரிகளும் மற்றவர்களும் துவாரகா நாதரை வெளிக் கொணர முயல்கின்றனர். அவரோ அங்கிருந்து கிளம்ப மறுத்து விடுகிறார். கடைசியில் கங்கா பாயே அவரை வெளிக் கொணர்கிறாள். இப்படி வெளிவந்த துவாரகாநாதனைப் பார்த்தால் அவர் உடலெல்லாம் இரத்தக் காயமாக இருக்கிறது. விஜய சிம்மரது உடலில் குத்திய குத்துக்களை யெல்லாம் துவாரகா நாதனே தம்முடலில் ஏற்றிருக்கிறார். அதனால் ரண சோட்ஜி என்று பெயர் பெறுகிறார். துவாரகா நாதனைத் துவாரகைக்கு எடுத்துச் செல்ல இயலாத பூசாரிகள் கடைசியில் அவரது எடைக்கெடை தங்கமாவது தர வேண்டும் என்று கங்காபாயைத் துன்புறுத்துகின்றனர். அந்த அம்மையிடமோ ஒரு பொன் மூக்குத்தியைத் தவிர வேறு தங்க நகைகளே கிடையாது. கடைசியில் ஒரு துலாக் கோல் அமைத்து அதில் ஒரு தட்டில் துவாரகா நாதனை வைக்கிறார்கள். கங்கா பாயும் தன் கணவன் விஜயசிம்மரின் திருவடிகளை நினைத்துக் கொண்டு, தன் மூக்குத்தியைக் கழற்றி மற்றொரு தட்டில் வைக்கிறாள். எல்லோரும் கண்டு அதிசயிக்கும் வண்ணம் மூக்குத்தி இருந்த தட்டே தாழ்கிறது. அதைப் பெற்றுக்கொண்டு துவாரகா வாசிகள் திரும்புகின்றனர். பின்னர் அவர்கள் பிரார்த்தித்துக் கொண்டபடி ஒரு நாளில் ஐந்து நாழிகை நேரம் தான் துவாரகையில் எழுந்தருளுவதாகத் துவாரகா நாதன் அருளுகிறார். மற்றப் பொழுதெல்லாம் டங்கபுரத்தில்தான். இப்படித்தான் துவாரகாநாதன் டங்கபுரத்துக்கு எழுந்தருளி யிருக்கிறார்.

இவ்வளவு விவரங்களையும் தெரிந்து கொண்ட பின் நாமும் டங்கபுரத்து ரண சோட்ஜி கோயிலுக்குச் செல்லுவோமே. கோயில் பெரிய கோயில்தான். இக்கோயிலுக்கு இரண்டு வாயில்கள் இருக்கின்றன. ஒன்று வடக்கு நோக்கியும் மற்றொன்று மேற்கு நோக்கியும் இருக்கின்றன. கோயிலுக்கு முன்பு திறந்தவெளி பெரிதாக அமைந்திருக்கிறது. விஜய சிம்மர் குடியிருந்த வீட்டிலே குடியேறிய ரண சோட்ஜிக்கு, அந்த வீட்டையே இடித்துப் பெரிய கோயிலாகக் கட்டியிருக்கிறார்கள். இந்தக் கோயிலைக் கட்டியவன் தாமிரம் என்ற ஊரைச் சேர்ந்த கோபால் நாயக் என்று கர்ண பரம்பரை வழங்குகிறது. ஆனால் இக் கோயில் 1772ல் சதாராவைச் சேர்ந்த பேஷ்வாவின் பொக்ஷதாரரான கோபால் ஜகந்நாத்தாம் பேகர் என்ற மராட்டியர் ஒரு லட்சம் ரூபாய் செலவு செய்து கட்டினர் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. கோபால் ஜகந்நாத் தாம்பேகர் என்பதைத் தாம் கோபால் நாயக் என்று குறுக்கி வழங்குகிறார்கள் போலும். கோயிலுள் ஒரு பெரிய தங்கச் சிம்மாதனத்தில் ரண சோட்ஜி தேவியோடு எழுந்தருளி யிருக்கிறார். அந்தச் சிம்மாசன பீடத்தை கெயிக்வார் மகாராஜா ஒன்றரை லட்சம் ரூபாய் செலவில் அமைத்துக் கொடுத்திருக்கிறார். ரண சோட்ஜியின் உடலில் ஏற்பட்டுள்ள ரண காயங்களை இன்றும் காணலாம். ரண சோட்ஜி துவாரகையில் உள்ள கண்ணன் வடிவிலேயே இருக்கிறார். சங்கு சக்கரமும் கதையும் ஏந்திய திருக் கோலம். கண்ணன் என்னும் கருந் தெய்வம் என்பதற்கேற்ப நல்ல கறுப்பு நிறத்தில் கருங்கல் வடிவில் அமைத்திருக்கிறார்கள்.

மேற்கே பார்த்து நின்ற திருக்கோலம். கண்ணனைப் பல கோணங்களில் நவரத்தினங்களால் அலங்கரிக்கின்றனர். கோவிலுள் சென்று பரந்தாமனது திருவடிகளைத் தொட்டு வணங்கலாம். கோவிலுக்குப் பக்கத்திலேயே கோமதி புஷ்கரணி இருக்கிறது. துவாரகையில் நதி வடிவாக இருக்கும் கோமதியே இங்கு புஷ்கரணியாக இருக்கிறாள் என்றும் கூறுகின்றனர். இந்த புஷ்கரணியில் டங்கேசுவர கட்டம், சுலேசுவரி தேவி கட்டங்கள் இருக்கின்றன. இவைகளில் மூழ்கி எழுபவரது வினைகள் எல்லாம் நீங்கும் என்பர். ஆனால் பாசி பிடித்துத் துர்நாற்றம் நிறைந்திருக்கும் இந்த புஷ்கரணியில் ஸ்நானம் செய்ய நமக்கு மனம் வராது. ரண சோட்ஜி ரண காயத்துடனேயே கிடந்த புஷ்கரணியானதால் ரத்த வாடையே அடிக்கிறது போலும். மேலும் இந்தத் திருக் குளத்தில் நாரை, கூழைக் கடா, வாத்து முதலிய நீர்ப் பறவைகளும் நிறைந்திருக்கும். பக்கத்திலுள்ள மரங்களில் வௌவால்களும் ஏராளமாக இருக்கின்றன. பறவைகளையோ, வௌவால்களையோ ஒருவரும் கடுவதுமில்லை. இம்சிப்பதுமில்லை.

இக் கோமதி புஷ்கரணியின் கரையிலேதான் பகவானை நிறுத்து எடை போட்டிருக்கிறார்கள். இங்கேயே இன்னும் துலாபாரம் நடக்கிறது. ரண்சோட்ஜி கோவிலில் ஒவ்வொரு பௌர்ணமி தினத்தன்றும் ஏராளமான பக்தர்கள் கூடி வழிபாடு செய்கின்றனர். புரட்டாசி மாதப் பௌர்ணமியை மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். இத்தலத்தில் குங்குமப்பூ கலந்த தண்ணீரில் அபிஷேகம் செய்வதே சிறப்பாகக் கருதப்படுகிறது.

இந்த டங்கபுரத்து ரண் சோட்ஜி ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பட்டவர் அல்ல. என்றாலும் திருமங்கை மன்னன் நந்திபுர விண்ணகரத்தைப் பற்றிப் பாடிய பாசுரம் ஒன்றுள்ளது. நந்திபுரம் விண்ணகரம் என்ற சொல்தொடரை டங்கபுரம் விண்ணகரம் என்று மாற்றிப் பாடுவதும் உண்டு என்றும் சொல்கிறார்கள்.

நந்தைமனை முந்துதுயர் நந்தஇருள்
வந்தவிறல் நந்தன்மதலை
எந்தைஇவன் என்றுஅமரர் கந்தமலர்
கொண்டுதொழ நின்றநகர்தான்
மந்தமுழ வோசைமழை யாகஎழு
கார்மயில்கள் ஆடுபொழில்சூழ்
நந்திபணி செய்தநகர் டங்கபுரம்
விண்ணகரம் நண்ணுமனமே.

என்பதே பாடல்.

தாக்கோரிலிருந்து அக்கினி திக்கில் எட்டு மைல் தூரத்தில் நைஷத வனம் என்று ஒரு வனம் இருக்கிறது. அங்கே ஆஞ்சநேயர் கோவில் கொண்டிருக்கிறார். அவர் சிறந்த வரப்பிரசாதி. மைர்த்த ராமதாஸ ஸ்வாமிகளால் அவர் பிரதிஷ்டை செய்யப்பட்டவர் என்பது வரலாறு. நைஷத வனத்துக்கும் மேற்கே எட்டு மைல் தூரத்தில் உள்ள கலத்தூர் என்னும் இடத்தில் நீலகண்டேசுவரர் கோவில் ஒன்று இருக்கிறது. இன்னும் தாக்கோருக்குக் கிழக்கே ஒரு மைல் தூரத்தில் ரணமுக்த தீர்த்தம் இருக்கிறது. அதன் கரையில் ரண முக்தேசுவரர் கோவில் இருக்கிறது. இங்கு வழிபட்டால் சர்வ ரண நிவாரணம் ஆகும் என்கின்றனர். ரண் சோட்ஜியும் ரண முக்தேசுவரரும் சேர்ந்து சர்வ ரண நிவாரணம் பண்ணும்பொழுது நாமும் சென்று சர்வ ரண நிவாரணம் பெற்றுத் திரும்பலாம்.

## வந்தது போயிங்!

ஆரம்பத்தில் ஏற்பட்ட காலதாமதங்களைப் பார்த்த போது சென்னைக்குப் போயிங் வராமலே போய் விடுமோ என்ற கவலை உண்டாயிற்று. நல்ல வேளையாக போயிங் அத்தகைய ஏமாற்றத்தை நமக்கு அளிக்கவில்லை. ஏர் இந்தியா இண்டர்நேஷனலின் இந்த ராட்சத விமானத்தை வரவேற்கத்தான் எத்தனை முன்னேற்பாடுகள்?

இதற்கான ரன்வே சாலையில் பெரும் பகுதி பூர்த்தியாகி விட்டது. இறுதியில் 10,050 அடி நீளமும் 200 அடி அகலமும் உள்ளதாய் அமையப் போகிற ரன்வேக்குத் திட்டமிட்ட



மொத்தச் செலவு 116 லட்சம் ரூபாய்! 22,000 டன் சிமெண்டையும் 85 லட்சம் கன அடி மண், கிரேவல் ஆகிய வற்றையும் விழுங்கி விட்டு நிற்கப் போகின்ற ரன்வேயை அமைக்க 180 ஏக்கர் நிலத்தை வாங்க வேண்டி யிருந்தது!

போயிங்கைச் செலுத்துவதற்கு முன்னால் ஏதோ ராணுவ விமானப் படையெடுப்பைப் போன்று பல அம்சங்களையும் கவனித்துக் கொள்ள வேண்டும். விமானம் புறப்படுகிற நேரத்துக்கு ஐந்து அல்லது ஆறு மணி நேரம் முன்னதாகவே விமான ஓட்டிகள், செல்ல வேண்டிய மார்க்கம், பறக்கக்கூடிய உயரம், நேரம், வேகம், தேவைப்படக் கூடிய எரிபொருளின் அளவு போன்ற பல்வேறு விஷயங்களை ஆராய்ந்து முடிவுக்கு வருவதுடன் வானசாஸ்திரக் கூடத்துடனும் தொடர்பு கொண்டு சூழ்நிலையின் சாதக பாதகங்களை அறிந்துகொள்ள வேண்டும்.

போயிங் 707 உயர ஏறுகையில் ஒரு மணி நேரத்துக்கு 10,200 கிலோ எரிபொருளைத் தீய்க்கும்!

ஐரோப்பாவிலிருந்து ஆஸ்திரேலியாவுக்கோ சிங்கப்பூருக்கோ செல்ல வேண்டுமானாலும் சென்னை வழியாகச் செல்வதுதான் கிட்டவாம். ஆகவே சென்னை மார்க்கமாய்ச் செல்லும் போயிங்குக்கு ஏகக்கிராக்கி யிருக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

"ஸார். லைப்ரெரி புக்."

"இரப்பா இதோ வரேன்."

அவசரமாகச் சட்டையை மாட்டிக் கொண்டு என் மேஜை மீதிருந்த முந்தைய வாரத்துப் புஸ்தகங்கள் இரண்டையும் எடுத்துக் கொண்டு வாசலுக்கு வந்தேன். லைப்ரெரி ஆள் புதுப் புத்தகங்களுடன் நின்றிருந்தான். பின்னாலிருந்த அவன் சைக்கிளின் முன்புறம் மூடியற்ற பெரிய கறுப்புப் பெட்டி கட்டியிருந்தது. அதன் மேல் கொட்டையான வெள்ளை எழுத்துக்கள் லைப்ரெரியின் பெயரை வரைந்திருந்தன.

பழையவற்றை அவனிடம் கொடுத்துவிட்டுப் புதிய இரண்டு புத்தகங்களை வாங்கிக் கொண்டேன். எல்லாம் ஆங்கிலப் புத்தகங்கள். சட்டைப் பையிலிருந்து நான்காணுக்காக இதும் எடுத்துக் கொடுத்ததும்-அவன் பெற்றுக் கொண்டு "நன்றி ஸார்" என்று அரைச் சலாம் போட்டவாறே சைக்கிளில் ஏறிச் சென்று விட்டான்.

இப்படி வீடுகளில் புத்தகங்களைக் கொண்டு தரும் லைப்ரெரிகள் என்னைப் போன்ற ஓய்வு பெற்ற முதியவர்களுக்கு எத்தனை உபயோகமாக இருக்கின்றன! மாதா மாதம் புதுப் புத்தக ஜாபிதாவை அந்த ஆள் எடுத்து வருவான். நமக்குத் தேவையானவைகளைக் குறித்துத் தந்துவிட வேண்டியது. அவை கிடைக்கும் வசதிப்படியும் நம் தேவைப்படியும் முறையாக வாரம் இரண்டு வீதம் வீட்டுக்குக் கொண்டு வந்து கொடுக்கப்பட்டு விடும்.

புத்தகங்களுடன் உள்ளே வந்து சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டேன். நான் கேட்டிருந்தவற்றில் எவை வந்திருக்கின்றன என்று தலைப்புக்களில் முதலில் கண்ணோட்டம் விட்டு விட்டுப் பிறகு மேலட்டைகள் மீதிருந்த பெயர்களைப் படிக்க ஆரம்பித்தேன். ஒவ்வொரு புத்தகத்தின் மீதும் அதை அதுவரை எடுத்துப் படித்திருந்தவர்களின் பெயர்கள் காணப்படும். அவற்றைப் படிப்பதில் எனக்கு ஒரு வேடிக்கை. சிலவற்றில் ஆண்கள் பெயர் அதிகம். சிலவற்றில் பெண்கள் பெயர்கள் அதிகம். தெரிந்தவர்களின் பெயர் தென்பட்டால் அதில் ஒரு தனி மகிழ்ச்சி.

அப்படி நான் படித்துக் கொண்டு வந்த போதுதான் அந்தப் பெயர் தட்டுப்பட்டது. குமாரி பரிமளா சுப்பிரமண்யம்.

சட்டென்று என் நினைவில் அப்பெயரில் நான் அறிந்திருந்த ஒரு பெண் பளிச்சிட்டாள். சேலத்தில் நான் கலெக்டராக இருந்தபோது அங்கு ஆபீஸில் ஓர் அக்கௌண்டண்டாகப் பணியாற்றி வந்த சுப்பிரமண்யத்தை நான் நன்கு அறிவேன். மிகவும் நாணயமான மனிதர். பெரிய குடும்பம். மனைவியை இழந்து விட்டார். இரண்டு பிள்ளைகள், மூன்று பெண்கள். அப்பெண்களுள் மூத்தவள்தான் பரிமளா. தாயில்லாப் பெண்ணான அவள் தகப்பனாருக்கும், தமையன்மார்களுக்கும், தங்கைகளுக்கும் தாயாக இருந்து குடும்பத்தை நிர்வகித்து வந்தாள். களையான முகம். கருமையாக இருப்பாள். சுப்பிரமண்யத்தின் மக்கள் எல்லோருக்குமே நல்ல சுபாவம். அவர்களை என் மனைவி அவ்வப்போது எங்கள் வீட்டுக்கு அழைத்து அன்பாலும் உதவியாலும் தன் அநுதாபத்தைக் காட்டி வந்தாள். ஆகவே, அந்தக் குழந்தைகளுடன் எனக்கு அதிகப் பரிச்சயம் உண்டு.

பரிமளா சுப்பிரமண்யம்-அந்தப் பெண்ணா?

அடுத்த நிமிஷம் எனக்கு ஞாபகம் வந்தது. அந்தப் பரிமளாவுக்குத்தான் ஆங்கிலம் தெரியாதே?

எத்தனையோ சிரமப்பட்டுச் சுப்பிரமண்யம் பிள்ளைகளை மட்டும் ஓரளவு படிக்க வைத்துக் கைகாட்டிவிட்டார். அந்த அதிக பலத்தினால் இளைய பெண்களுக்கும் சிறிது வசதி ஏற்பட்டது. பரிமளா ஒருத்திதான் கல்வியின் வாய்ப்பே இன்றிப் பதினெட்டு வயதிலேயே பாட்டியாகக் காலம் கழித்து வந்தவள். வீட்டிலேயே ஏதோ பார்த்து அறிந்து

# ஏதோ ஒரு மூலை

ஆர். சூடாமணி

கொண்ட தமிழ் எழுத்துக்கள்தாம் அவளுடைய வித்தை யெல்லாம். ஆங்கில வாசனையே அறியாதவள். அதுவும் மாதம் ஐந்து ரூபாய் லைப்ரெரி சந்தா கொடுக்கும் வசதி அந்த ஏழைப் பெண்ணுக்கு எங்கே? மேலும் நான் சேலத்திலிருந்து வந்து ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. அவள் இப்போது சென்னையில் இருப்பதாக வைத்துக் கொண்டாலும் இன்னுமா குமாரியாக இருப்பாள்?

அவளாக இருக்க முடியாது. ஆயினும் அதே பெயர்.... அந்த எண்ணத்தை ஒதுக்கி விட்டு நான் புத்தகங்களில் ஒன்றைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன்.

உலக இலக்கிய வரிசையிலே ஓர் உன்னதமான இடம் பிடித்துக் கொள்ளக் கூடிய புத்தகம்தான் அது. அதன் ஆசிரியரோ அகில உலகத்தாலும் மேதை எனப் போற்றப் படுகின்ற ஒருவர். ஆயினும் ஆழமான உட்கருத்துக்களை, மனிதப் போக்கின் விசித்திரங்களை உள்ளது உள்ளபடி படம் பிடித்துக் காட்டும் எழுத்து நயத்தை உய்த்துணரவல்ல விவேகமோ போதுமான உலக அனுபவமோ இல்லாதவர்கள் ஆபாசம் என்று முடிவு கட்டிவிடக் கூடிய ஒரு நூல்தான் அது. உணர்வின் எல்லைக்குள் விரித்தெழ ஆரம்பிக்கின்ற இளம் உள்ளங்கள் இத்தகைய எழுத்தினைப் படிப்பதனால் தவறான வகையில் பாதிக்கப்படுகின்றனவா? அப்படியானால், இதற்குப் பரிகாரம் என்ன? இப்படி எழுதலாம், இப்படி எழுதக் கூடாது என்று கட்டுப்பாடுகளும் சட்ட திட்டங்களும் வரையறைகளும் வகுத்துத் தருவதா? அப்படிச் செய்தால் இலக்கியம் வளருமா? புத்தகத்தில் பத்துப் பக்கங்கள் படிப்பதற்குள்ளாகவே படிப்பதை மறந்து இப்படியான ஆராய்ச்சிக்கும் தர்க்கத்துக்கும் உரிய விஷயங்களில் என்மனம் ஈடுபட ஆரம்பித்து விட்டது!

அடுத்த நாள் மாலை நான் வெளியே உலாவி விட்டுத் திரும்பியபோது தெருவில் ஆச்சரியத்தினால் நின்று விட்டேன்.

"அட! சுப்பிரமணியமா! என்ன ஸார் இது? இங்கேயா இருக்கிறீங்க?"

சுப்பிரமணியம் என்னைக் கண்டதும் ஆவலாக அருகில் வந்தார். "கலெக்டர் ஸாரா! உங்களைப் பார்த்தது ரொம்ப சந்தோஷம் ஸார். நீங்க சென்னையிலே இருக்கிறது தெரியுமே தவிர விலாசம் தெரியாமல் இருந்தது. சௌக்கியமா?"

"சௌக்கியம்தான். ரிடையர் ஆகிவிட்டதாலே பிள்ளையோடே இருக்கேன். அவன் எஞ்சினீயர் தெரியுமில்லே?"

"இல்லாம என்னங்க? எல்லாம் தெரியும். வீட்டிலே எல்லோரும் சுகமா? அம்மா எப்படி இருக்காங்க? என் குழந்தைகளுக்கு அவங்க காட்டியிருக்கிற ஆதரவையும் நீங்க வித்தியாசமில்லாமே என்கிட்டே நட்பு வைச்சதையும் மறக்கவே முடியாது."

"வீட்டுக்கு வாருங்களேன். எல்லோரையும் பார்க்கலாம்.."

"ஓ! அதுக்கென்ன? வரேன்."

இருவரும் பேசிக்கொண்டே என் வீட்டை நோக்கி நடந்தோம். சுப்பிரமணியத்துக்கு வயதுக்கு அதிகமான முதுமை காணப்பட்டாலும் கம்பீரம் குறைய வில்லை.

"நேத்துத்தான் உங்களைப் பத்தி நினைச்சேன் சுப்பிரமணி



யம். இன்னிக்குச் சந்திப்பேனென்று நினைக்கவே யில்லே. எங்கே பட்டணம் வந்தீங்க?''

''அண்ணன் மகன் ஒருவனுக்குக் கல்யாணம் இங்கே. அதுக்காக வந்தேன். சேலத்துக்குத் திரும்பிப் போறேன்.''

''இன்னும் அதே நிலவரம் தானு?''

''அதுதான் சிரஞ்சீவியாச்சே!'' என்று வறுமையின் முகத்தில் சிரித்தார் அவர்.

''குழந்தைகளெல்லாம் சௌக்கியமா?''

''ம்.''

''பரிமளம் எங்கே இருக்கிறுள்?''

''இங்கே பட்டணத்திலேதான்.''

செல்லே மாப்பிள்ளே போல் இருக்கிறது. மேலே நான் விசாரிப்பதற்குள் வீடு வந்து விட்டது. அவரை அழைத்துப் போய் உபசாரம் செய்தேன். என் மனைவி, மகன், அவன் குடும்பத்தினர் ஆகியோரைச் சந்தித்துப் பேசியதில் அவருக்கு மிகுந்த திருப்தி.

காப்பி குடித்துவிட்டு இருவரும் நாற்காலியில் அமர்ந்தோம்.

''நீங்க இப்போ எங்கே தங்கியிருக்கீங்க?''

''பரிமளாவோடேதான்.''

''அவளே ஒரு நாள் போய்ப் பார்க்கிறேன். இங்கே இருக்கிறுள்னு எனக்குத் தெரியவே தெரியாதே! என்னய்யா கிநேகிதர் நீங்க, எனக்கு ஒரு பத்திரிகை அனுப்பக் கூடாது?'' என்று நான் சிரித்தேன்.

அவர் என் பேச்சைக் கவனிக்கவில்லே யென்று நினைக்கிறேன். அவர் பார்வை என் பக்கத்தில் மேஜைமேல் திறந்து கிடந்த புத்தகத்தின் மீது பதிந்திருந்தது. என் புதிய லேப்ரெரிப் புத்தகங்களில் ஒன்று அது. பக்கங்களின் உச்சியில் காணப்பட்ட தலைப்பைக் கண்டுவிட்டு அவர் ''எப்படிங்க இருக்கு இது?'' என்ருர்.

''சுமார்தான். ஏதோ பெயரைப் பார்த்துப் பொறுக்குகிறேம். சிலது நல்லா அமையுது. சிலது சரிக்கிறதில்லே.''

''இந்தப் புத்தகம் தனக்குப் பிடிக்க லேன்னுதான் பரிமளம் எழுதியிருந்தாள். எனக்கு எழுதற கடிதாசிகளிலே அப்பப்போ தான் படிக்கிற புத்தகங்களைப் பற்றி விமரிசனம் செய்யற வழக்கம் உண்டு அவளுக்கு.''

எனக்கு வியப்புத் தாங்கவில்லே. ஒரே சமயத்தில் ஆயிரம் கேள்விகள் மூளையில் தெறித்து எழுந்தன. அப்படியே அப்புத்தகத்தை எம்பி இழுத்து அட்டையை மூடி மேலே இருந்த பெயர்ப் பட்டியலைப் பார்த்தேன். குமாரி பரிமளா சுப்பிரமண்யம்.

''இது.... இது உங்க மகள் பரிமளா தானு?''

''எங்கே?... ஆமாம். அவளாகத்தான் இருக்கணும். இந்த லேப்ரெரியிலே அவள் சேர்ந்திருக்காள்.''

''என்னய்யா இது! உங்க மகள் எப்ப இங்லிஷ் கத்துக்கிட்டா?''

அவர் முகத்தில் சோர்வு இருளாய்க் கப்பிக்கொண்டது.

''படிக்க வச்சீங்களா என்ன? பதினெட்டு வயசுக்கு மேலே எந்த ஸ்கூல்லே சேர்த்துக் கறுங்க?''

''ஸ்கூல்லே இல்லே கலெக்டர் ஸார். எங்க பக்கத்துத் தெருவிலே வயசான கல்லூரி புரொபஸர் ஒருவர் இல்லே? அவர் கிட்டே பிரைவேட்டாப் படிச்சு ரெண்டு வருஷத்திலே இங்லிஷிலே நல்ல ஞானம் அடைஞ்சுட்டா.''

எனக்கு எதுவும் தெளிவாய் விளங்கவில்லே:

''என்ன திடீர்னு? நான் பார்த்தவரைக்கும் அப்படி ஒண்ணும் தனக்கு இங்லிஷ் தெரியாததைப் பத்தி அவள் வருத்தப்பட்ட மாதிரி இல்லேயே?''

அவர் சற்று நேரம் பேசவில்லே.

''கலெக்டர் ஸார்! இந்தப் பெண் குழந்தைகள் இருக்காங்களே, முதலில் ஏதும் சிந்தனேயோ, கவலேயோ இல்லாமே பட்டாம்பூச்சி மாதிரி ஆனந்தமாக இருக்காங்க. திடீர்னு உலகத்துக்கு வஸந்தம் வராப்பலே, அவங்களுக்கு என்னமோ வந்துடுது. அவங்க பார்வையே, ஆசைகளே, மனசின் கோணமே மாறிடுது. புதிய ஒரு கவர்ச்சியிலே அவங்க உள்ளம் மேலே மேலே பறக்க ஆரம்பிக்குது. முயற்சியிலே இறங்குது. ஆர்வமாய்த் துடி துடிக்குது....''

நான் புரிந்து கொண்டேன். புதிய கவர்ச்சி. யார் அந்தக் கொடுத்து வைத்தவன்? வெளியின் மேல் சூழ்ந்து மூடும் மேகம் போல் நினைவு இருண்டது. புத்தகத்தின் அட்டையைக் குனிந்து பார்த்தேன். குமாரி பரிமளா சுப்பிரமண்யம்.

குமாரி.

அப்படியென்றல்—?

''யார் அவன்?''

''லக்ஷ்மணன்னு பேரு. அழகான வாலிபன். நல்ல குடும்பத்திலே பிறந்தவன்தான். ஐ.ஏ.எஸ். பாஸ் செய்துவிட்டுச் சேலத்திலே தன் அத்தை வீட்டுக்கு வந்திருந்தான். அவனும் பரிமளாவும் எப்படி, எங்கே முதல்லே சந்திச்சாங்களோ தெரியாது.''

புன்னகையோடுதான் அவர் பேசினுர். ஆனல் அதில் மகிழ்ச்சி இல்லே. ''அவன் தான் அவளே இங்லிஷ் படிக்கச் சொன்னுன்'' என்ருர் தொடர்ந்து. ''நான் வரேன் ஸார். உங்களேப் பார்க்க நேர்ந்தது ரொம்ப சந்தோஷம். பரிமளா கிட்டே சொல்றேன்'' என்ருர்.

''குழந்தைக்கு என் ஆசீர்வாதத்தைச் சொல்லுங்க'' என்றேன்.

சுப்பிரமணியம் விடைபெற்றுச் சென்ருர்.

நான் புத்தகத்தையே வெறித்துக்கொண்டிருந்தேன். சென்னேயில் பரிமளா இடரென்று பெரியவளாகிவிட்ட குழந்தை. அந்த மாயாஜாலத்தைப் புரிந்த மந்திரவாதியின் விருப்பத்துக்காகப் புது மொழியைக் கற்றறிந்த ஆர்வக் களஞ்சியம். பின்னே—

குமாரி.

ஏன்?

ஃ ஃ ஃ

ஒரு வாரம் சென்றது.

பேரக் குழந்தைகளே அருகில் உள்ள நேரு பூங்காவுக்கு அழைத்துச் சென்றுவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தேன். வாசலில் நுழைந்த போதே என் மனைவி எதிர்ப்பட்டாள்.

''என்னங்க, யார் வந்து உங்களுக்காகக் காத்துக்கிட்டிருக்கா பாருங்க.''

நான் உள்ளே நோக்கினேன். என் மனைவிக்குப் பின்னே கதவோரம் வந்து நின்று கொண்டாள் அவள்.

ஏழாண்டுகளில் சாதாரணமாகத் தோன்றும் மாறுதல் அல்ல அது. பரிமளாவுக்கு வயது இப்போது இருபத்தைந்துதான். ஆனால் அவள் பார்வையில் நூறாயிரம் யுகங்கள் வாழ்ந்த முதிர்ச்சி கவிந்திருந்தது. அது வயது அல்ல. காலத்துக்குள் அடங்கும் கணக்கும் அல்ல. உள்ளத்தின் ஓர் ஆட்டத்தினால் இமைப் பொழுதில் தோன்றி, காலத்தை யெல்லாம் கடந்து நிற்கும் கூரிய முழுமையின் சாயை அது. பார்த்தவுடன் நாவடைத்து நிற்கச் செய்யும் ஒரு விரிவின் மர்மத் தோற்றம். மற்றப்படி அதே பழைய விசால விழிகள், உயர்ந்த மெல்லிய தேகம், தண்ணென்ற புன்னகை.

''வாம்மா பரிமளா, வா. எப்ப வந்தே?''

''கொஞ்ச நேரமாச்சு மாமா.''

''நீங்க வெளியே அப்படிப் போனீங்க, இவள் இப்படி வந்தாள்'' என்று என் மனைவி விளக்கினாள்.

''வாம்மா, உள்ளே வா.''

அவளை அழைத்துப் போய் என் அறைக்குள் உட்கார வைத்தேன்.

''பரிமளா முன்னைவிட இப்போ இன்னும் அழகா இல்லேங்க? கலியாணம் செய்து கொள்ளடி என்று சொன்னால் சும்மா சிரிக்கிறா. பாலியம் எப்பவுமே இருக்குமா?'' என்பது போல் ஏதேதோ பேசிக் கொண்டிருந்த என் மனைவி கடைசியில் குழந்தைகளின் இரவு உணவை மேற்பார்வை பார்க்க உட்புறம் மறைந்தாள்.

நான் பரிமளாவை ஏறிட்டுப் பார்த்தேன். என் கண்கள் தயக்கத்துடன் அவள் உணர்ச்சிகளைத் தேடி முகத்தை மெள்ள எட்டின.

''அப்பா உங்க விலாசம் சொன்னார் மாமா. பார்த்துவிட்டுப் போகலாம்னு வந்தேன்.''

பரிமளா தன்னுடன் கொண்டு வந்திருந்த பிளாஸ்டிக் கூடையிலிருந்து ஒரு பட்டு ரவிக்கைத் துண்டையும் கம்பளி மப்ளரையும் வெளியே எடுத்தாள்.

''மாமிக்காகவும் உங்களுக்காகவும் கொண்டு வந்தேன். இந்தாங்க.''

நான் பார்வையை அகற்றவில்லை.

''எதுக்கம்மா இதெல்லாம்?''

''வாங்கிக்குங்க. என் சம்பாத்தியத்திலே வாங்கினது மாமா! உரிமையோட கொடுக்கிறேன். மறுக்காதீங்க.''

''உன் சம்பாத்தியமா! வேலை செய்யறியா என்ன?''

''அப்பா சொல்லலியா உங்ககிட்டே?''

''இல்லையே!''

''அவருக்கு நான் வேலை செய்யறது பிடிக்கல்லே. அதனாலே சொல்லலியோ என்னவோ?''

என் மனத்தில் இறுக்கம் குமுறியது. ஏதேதோ கேட்க வேண்டும் என்ற பெருந்தாபத்திலே கேட்க நினைத்த நினைப்புக்கள் தெளிவாக இல்லை. என்னையே இழந்த பாரத்தில் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

''என்ன வேலையம்மா?''

அவள் நிதானமாய் விவரித்தாள். 'இங்கே ஒரு கதாசிரியை என்னை உதவிக்கு வைச்சிக்கிட்டிருக்காங்க. அந்தம்மா வெளியூர்ப் பத்திரிகைகளுக்குத் தன் கதைகளை இங்கிலீஷிலே மொழிபெயர்த்தும் அனுப்புறாங்க. அந்த வேலையிலே காப்பி யெடுக்க நான் உதவியாயிருப்பேன். அவங்க டைப் அடிக்கவும் எனக்குச் சொல்லி வைச்சிருக்காங்க. நல்லா சம்பாதிச்சுக்கிட்டுச் சுகமாயிருக்கேன் மாமா. எல்லாம் பெரியவங்க ஆசிர்வாதம்.''

அவள் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தாலும் கண்களில் பொங்கியது ஆவேசம் தான்.

''நீ.... நல்லா இங்கிலீஷ் கத்துக்கிட்டேன்னு உன் அப்பா சொன்னாரம்மா.''

''ஆமாம்.'' அவள் அவசரமாய் வேறு விஷயத்துக்குத் தாவினாள். ''சொல்ல மறந்துட்டேனே மாமா. அடுத்த மாதம் என் தங்கை மீனுவுக்குச் சேலத்திலே கல்யாணம். பத்திரிகை வரும். நீங்க எப்படியாவது வந்துடணும். என்ன? மாமிகிட்டேயும் சொல்கிறேன். ரெண்டு பேருமா வந்துடுங்க.''

''என்னம்மா? உன் தங்கைக்குக் கலியாணமா?''

''ஆமாம்.'' என்றாள் அவள்.

## அடுத்த இதழில்

**கலை வளர்க்கும் கோயில்கள்**

எழுத்தறிவிப்பவன் இறைவன் என்றால் எழுத்தறிவிக்கும் இடம் கோயில் அல்லவா? தமிழ் நாட்டிலுள்ள பல்வேறு கல்லூரிகளைப் பற்றிய புதிய அம்சம் இது.

★

**எல்லைப்புறத்தில்:**

லடாக்

விசேஷக் கட்டுரை

★

**நெருஞ்சி முள்**

—ஆர்வியின் நெடுங்கதை

★

**மிடுக்கும் துடுக்கும்**

வெ. சபிநாத சர்மா

எழுத்தாளன்: இந்தப் பத்திரிகையாளர்கள் அனைவரும் ஒருமிக்கக் கூடி எனக்கு எதிராக ஏதாவது சூழ்ச்சி செய்கிறார்களோ என்று தோன்றுகிறது.

நண்பன்: அப்படித் தோன்றக் காரணம்?

எழுத்தாளன்: பின்னே என்ன? நான் எழுதின ஒரு கதையைப் பத்து பத்திரிகைகளுக்கு அனுப்பி வைத்தேன். எல்லோரும் சொல்லிவைத்தாற்போல் வருத்தத்துடன் திருப்பி அனுப்பி வைத்திருக்கிறார்கள்!

நான் மேஜைமீதிருந்த லைப்ரெரிப் புத்தகத்தைக் குனிந்து பார்த்தேன்.

என் குரல் மெதுவாய் ஒலித்தது.

"குமாரி பரிமளா சுப்பிரமணியம்."

அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டது ஓரக் கண்ணில் உணர்வாயிற்று.

"மாமா...."

"உன் அப்பா சொன்னார்...?"

"தெரியும்." பட்டென்று அடித்து மூடுவது போல் பதில் ஒலித்துப் பார்த்தது. உணர்ச்சிகளைத் தன்னுள் தாங்கி மௌனத்தில் வைத்துச் சரி செய்து கொண்டு ஒரு நிமிஷம் ஆசுவாசத்தில் தேறி நிமிர்ந்தாள் அவள். தேகப் பிரயாசையாய் தோன்றியதுபோல் வியர்வை எழுந்து கரைந்தது.

"அது முடிஞ்சு போன கதை."

"ஏன் அப்படி? என்ன நடந்தது?"

திடீரென்று தோன்றிய வேகத்தில் நான் என்வசம் இழந்து குரூரமாய்க் கேள்விகளைத் தொடுத்தேன். அந்த அடியில் அவள் வலுவிழந்தாள்.

"அவர்....அவர்...."

"நீ அவரை ரொம்பவும் நேசித்தாயா, பரிமளா?"

ஒரு கணம் அவள் உடல் முழுதும் துடித்து ஓய்ந்தது. பிறகு அமைதியாய் என் கேள்விக்குப் பதில் சொன்னாள்.

"நான் ஒரு பெண் மாமா."

உணர்ச்சியின் வரம்புகளிடையே மனித உள்ளம் தீண்டக்கூடிய அர்த்தத்தின் பரப்பெல்லாம் அந்தப் பதிலுள் வேறு விளக்கம் தேவையின்றி விகஸனமாய் நிறைந்தது.

"அப்புறம்? அவன் உன்கிட்ட...."

"பிரியம் வைக்காமல் இல்லே. ஆனால் இங்லீஷ் தெரியாத ஒரு பெண்ணை மனைவியாய் ஏத்துக்க அவர் விரும்பவில்லே."

"ஐ.ஏ.எஸ்." என்று என்னுடைய வாய் முணுமுணுத்தது.

"ஆமாம். அதனாலே இங்லீஷ் கத்துக்கச் சொன்னார் என்னை."

"நீ.... நீ கத்துக்கிட்டே."

"ஆமாம். அவர் சொன்னாரேன்னு. அவர் விருப்பத்தைப் பூர்த்தி செய்யணும்கிற ஆவலிலே."

"ஆனால்?.... அப்புறம்?"

குமாரி பரிமளா சுப்ரமணியம்?

"நாம் எத்தனையோ கஷ்டங்களையும் இடைஞ்சல்களையும் எதிர்பார்க்கிறோம் மாமா! அதுங்களிலிருந்து தப்ப நம்மைத் தயார் படுத்திக்கிறோம்; தப்பவும் செய்யறோம். ஆனால் கடைசியிலே தாக்குதல் நாம் பயந்த இடத்திலேயிருந்து வரதில்லே. கொஞ்சமும் எதிர்பாராத ஏதோ ஒரு மூலையிலிருந்து வந்து நம்மை முழுகடிச்சிடுது."

அவள் இப்போது என்னை நேராகப் பார்த்தாள். பேச்சு படபடப்புடன் வந்தது.

"நான் இங்லீஷ் நல்லா கத்துக்கிட்டேன். அவர் சபாஷ் போட்டாரு. எனக்கு உற்சாகம் தாங்கல்லே. அவரெதிரில் என் கெட்டிக்காரத்தனத்தை இன்னும் அதிகமாகப் பறைசாத்திக்கணும்னு ஆசைப்பட்டேன். ஒரு நாள். என் வெற்றியிலே கர்வப்பட்டு வினையை அதிகம் தூண்டி விட்டுட்டேன். சமீபத்திலே நான் வாங்கிப் படிச்சிருந்த ஒரு ஆங்கில நாவலை அவருக்குப் படிக்கக் காண்பித்தேன். அங்கங்கே படிப்பதை நிறுத்தி ஆங்கிலத்திலேயே விமர்சனம் செய்தும் விளக்கம் கூறியும் வந்தேன். கல்லூரியிலே ஒரு பேராசிரியர் எப்படி ஆங்கிலப் பாடம் நடத்துவாரோ அந்தப் பாணியில் நான் லெக்சர் கொடுத்தது என் இங்லீஷ் ஞானத்தை அவருக்குக் காட்டி அதனாலே அவர் என்னை இன்னும் மெச்சணும் என்றுதான்!"

நான் மூச்சை இறுக அடக்கிக் கொண்டு அடுத்த வார்த்தைக்காகக் காத்திருந்தேன்.

ஒரு யுகத்துக்குப் பிறகு அவள் பேசினாள்.

"அடுத்த நாள் அவர்கிட்டேயிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. எங்கள் தொடர்பு முடிஞ்சு போச்சு. அவரை நான் மறந்துடணும்னு எழுதியிருந்தார்."

என்னால் நாவை அசைக்க முடியவில்லை. உள்ளம் ஒரு பெரிய கேள்வியாய் இறுகியது. 'ஏன்? அவளுடைய திறமை அவனிடத்தில் பொறாமையை உண்டுபண்ணி விட்டதா? தன்னைவிட அதிக அறிவும் சாமர்த்தியமும் மிக்கவளைக் கரம் பிடிக்கக் கூசினானா? பயந்தானா...?

அவள் வறண்ட பார்வையோடு சிரித்தாள்.

"அந்தக் கதையை நான் அத்தனை அனுபவித்துப் புகழ்ந்து வர்ணித்ததைக் கேட்டு அவர் 'இந்த மாதிரி கீழ்த்தரமான மனங்கள் பெண்ணை இனியும் என்னாலே விரும்ப முடியாது'ன்னு எழுதிவிட்டார். வேடிக்கையாயில்லே மாமா?"

பரிமளா உலகப் புகழ்பெற்ற நாவலாசிரியர் ஒருவரது பெயரைச் சொன்னாள்.

"மாமா! இவர் கீழ்த்தரமான இலக்கியம் படைக்கின்றவரா மாமா? நான் ரசித்து மகிழ்ந்த அவருடைய நூல் மட்டமானது என்றாலும் அவருக்கு இத்தனை பாராட்டுகளும், பரிசுகளும், பட்டங்களும், பதக்கங்களும் எப்படி மாமா கிடைக்குது?"

அவள் தொண்டை திடீரென்று கம்மியது. "மாமா! எனக்கு யோசனை சொல்லுங்கள். இதை நினைத்து நான் அழவேண்டுமா? சிரிக்க வேண்டுமா?"

எனக்குப் பதில் கூறத் தெரியவில்லை.

# 13. தலைசுற்றல் மயக்கம்
## (தூக்கமின்மை




உழைப்புக்குத் தக்க ஓய்வு வேண்டும்; இல்லாவிட்டால் உடல் வன்மையும் உற்சாகமும் குறையும். உழைப்பு உடலுக்கு மட்டும் அயர்வைக் கொடுப்பதென்று பிரித்துச் சொல்ல முடியாது. மனமும் அறிவும் வேலை செய்யும்போது உடல் உழைப்பைப் போலவேதான் அயர்வு ஏற்படுகிறது. உடல் உழைப்பினால் அயர்வு ஏற்படின் உடலுக்குக் கொஞ்சம் ஓய்வு கொடுத்தால் போதும். மனம் அறிவுகள் செயல்படுவதால் ஏற்படும் அயர்வுக்கு உறக்கம்தான் அவசியம். அது மட்டுமல்ல. உடல், மனம் இரண்டின் அயர்வையும் போக்கி வன்மை, ஊட்டம், உற்சாகம் ஆகியவற்றை உடல் மனம் இரண்டுக்குமே அளிக்கவல்லது உறக்கம்தான்.

நித்ராயத்தம் ஸுகம் துக்கம்
புஷ்டி: கார்ச்யம் பலாபலம்
விருஷதா க்லீபதா க்ஞானம்
அக்ஞானம் ஜீவிதம் ந ச

என்று நித்திரையின் பலனைச் சாத்திரம் சொல்லுகிறது.

உற்ற காலத்தில் அளவோடு உறங்கி எழுவதை யொட்டி, சுகம், சரீர புஷ்டி, பலம், வீர்யம், நுண்ணறிவு, உயிர் தரித்திருத்தல் ஆகியவை கிடைக்கப் பெறுகின்றன.

இதற்கு மாறாகத் தூக்கம் கெடல் அல்லது அகாலத்தில் தூங்குவது ஆகியவை துக்கம், உடல் மெலிவு, பலக் குறைவு, வீர்யக் குறைவு, அறிவின்மை, ஆயுள் குறைதல் ஆகியவற்றை விளைவிக்கின்றன.

அகாலே அதிப்ரஸங்காச்ச
ந ச நித்ரா நிஷேவிதா
ஸுகாயுஷீ பராகுர்யாத்
காளராத்ரி இவாபரா

அகாலத்தில் நித்திரை செய்வது, அதிகமாக நித்திரை செய்வது, நித்திரையே அடியோடு இல்லாமல் விட்டிருப்பது இவை மரணத்திற்கேதுவாகும். நியமப்படி ஸகாலத்தில் அளவோடு நித்திரை புரிவதால் சுகமும் நீண்ட ஆயுளும் கிடைக்கும் என்று சாஸ்திரம்.

நித்திரையை ஒழித்தவனைப் பார்த்தாலே போதும். ''என்னடா பழி! கூத்துப் பார்த்து வந்தவன் மாதிரி என்னடா உன் முகரக் கட்டை (வாடி வதங்கி அலுத்துச் சலித்து) தூங்கி வழிகிறது!'' என்று கேட்கத் தோன்றும்.

நித்திரை இல்லாததால் பசி குறையும். முன் சாப்பிட்டது ஜெரிக்காமல் வயிற்றில் கிடந்து நிற்கும். கொட்டாவி, பலவீனம், அறிவு மழுங்கி, உற்சாகமிழந்து பரிதாப நிலையில் நிற்க நேரிடும். இந்தப் பக்கம் அந்தப் பக்கம் திரும்பினால் போதும். 'கிர்ர்ர்' என்று தலை ஒரு சுற்றுச் சுற்றும். கண் இருட்டும். மார்பு படபடப்பும், நாடித் துடிப்பும் உண்டாகி உடம்பெல்லாம் ஸ்நானம் செய்தது போல் வியர்வை ஏற்பட்டு நாக்கு ஒட்டிக் கொள்ளப் பேசவும் முடியாத பரிதாப நிலை ஏற்படும். ரத்த அழுத்தத்தைப் பற்றிச் சொல்ல வேணுமா? இதற்குச் சிகிச்சை என்ன?

சும்மா படுத்துத் தூங்கி எழுந்தால் போதும். அல்லது ஒரு 'அமக்களமான' ஸ்நானம்; இலேசாகச் சிறிது மிளகு ஜீரக ரசத்துடன் அரை வயிறு சாப்பாடு அதற்குப் பிறகு ஒரு தூக்கம். அதோடு இந்தத் தலைசுற்றலும் தீரும்.

ஆனால் சிலருக்கு ஒரு நாளுமே சரியான காலத்தில் தூக்கம் வருவதில்லை. சிறிது உறங்கினாலும் அது கோழித் தூக்கம்; ஆழ்ந்த நித்திரையல்ல. விழித்தால் என்ன நிலை? நல்ல விதத்தில் போதுமான அளவு தூங்கி எழுந்தது போன்ற பலம், உற்சாகம், ஒரு துள்ளல், துடிதுடிப்பு ஆகியவை இருக்காது. மனிதன் 'தூங்கி வழியும்' நிலையில் தான் இருப்பான். இதை நித்ரா நாசம் என்பர். ஆங்கிலத்தில் 'இன்ஸாம்னியா' என்பர். இப்படித் தொடர்ந்து நித்ரா நாசத்தால் பீடிக்கப்பட்டவரின் கதி என்ன? தலைசுற்றல், ரத்த அழுக்கம் ஆகியவை மட்டுமா? வாழ்க்கையே 'நடைப்பிணம்' என்ற தரத்தில் முடியும்.

இப்படி இவர்களுக்கு நித்திரை கெடுவதற்கு அல்லது நித்திரை வராமற் போவதற்குக் காரணமென்ன? முதல் காரணம் மன நிம்மதி இல்லாமை. இந்த மன நிலைக்குக் காரணங்கள் இரண்டு வகையாக இருக்கலாம். ''யார் குடியை எப்படிக் கெடுப்பது'' என்பது போன்ற தீய எண்ணங்கள் காரணமாக — திட்டங்களைச் சமைப்பதும், அதைச் செயல்படுத்த முயல்வதும், அம் முயற்சிகள் தன்னை நடுச் சந்தியில் இழுக்காமல் ஆயினும் தனது திட்டப்படி பிறத்தியான் நஷ்டத்திலும் கஷ்டத்திலும் முடிவது என்ற வகையில் நிறைவேற வேணுமே என்ற கவலை காரணமாக நித்திரை வராமலிருக்கலாம். அல்லது அவ்வகையைச் சேர்ந்தவனின் சதித் திட்டங்களுக்கு இலக்கானவன் அவ்வின்னல் தீரவேண்டுமே என்ற கவலை காரணமாகத் தூக்கம் கெடலாம். இன்னும்

**வித்தையுடையவன் தூங்கான்**
**விசாரமுள்ளவன் தூங்கான்**
**பசியுள்ளவன் தூங்கான்**
**வைத்தியம்பிடித்தவன் தூங்கான்**




''இந்த அயோக்கிய ராஸ்கல் என்னை மரியாதை இல்லாமே பேசறான் சார்!''

என்றிப்படிப் பாமரரான பொதுமக்கள் ஒரு பட்டியல் வாசிப்பதுண்டல்லவா? அவ்வகையைச் சேர்ந்தவருக்கும் தூக்கம் வராது தான். இவர்களுக்கெல்லாம் ஏற்படும் இந்தத் தூக்கம் கெட்ட நிலை தாற்காலிகமாக ஏற்பட்டதாயுமிருக்கலாம். அல்லது அதுவே கொஞ்ச காலம் நீடித்திருக்க நேரிடவும், அதனால் தொடர்ந்து சில காலம் தூக்கமில்லாமல் போய்ப் பிறகு அந்நிலையே வேரூன்றி நின்றிடவும் நேரிடலாம்.

இவர்களுக்குச் சிகிச்சை என்ன?

இவர்களில் முதலினத்தைச் சேர்ந்தவர்களுக்குச் சொல்லக்கூடியது இதுதான்: மனிதன் தனித்துத் தான் மட்டும் உலகில் வாழ முடியாது. அப்படி வாழ வேண்டுமென்று ஆசைப்பட்டால் நிர்மானுஷ்யமான காட்டில் சென்று வசிக்கலாமே! அது இயலாதல்லவா? ஆகவே எல்லோருடனும் கூடித் தானே வாழ முடியும். ஆகவே இதைக்கருதி ஏனையோருக்குத் தான் இன்னல் செய்வதை விடவேண்டும். அப்படிக்குமில்லாத ஏதோ ஓரளவு மனக் கசப்பு எப்படியோ என்றைக்கோ ஏற்பட்டு விட்டது. அது தொடர்ந்து வருகிறது என்ற நிலையானாலும் பாதகமில்லை. விடுவிடுவென்று சென்று தனது வெறுப்புக்கு இலக்கானவனிடம் சென்று தனது மனப் போக்கை ஒளிவு மறைவின்றி அவனிடம் சொல்லிவிட்டு, ''சரியோ தப்போ இதுவரையில் நடந்தது இப்படி. இனி இவ்விதம் ஒன்று நேரிடக் கூடாது. நடந்ததை மறந்து விடுவோம். அல்லது மறக்க முயல்வோம். இனி சுமுகமாக நட்பையே பரிமாறிக் கொள்வோம்'' என்று சொல்லிவிட்டுக் கவலையை ஒரு வழியாகத் தீர்த்துக் கட்டி மன நிம்மதி பெற்றுச் சுகமுறுவதுதான் வழி. இதற்குத் திடமனமும் மிக மிகத் தைரியமும் வேண்டும். இதைச் செய்ய முடியாமல் தவிப்பவர் தவித்துக் கொண்டே இருக்க வேண்டியது தான். அப்படிப்பட்ட ''அசட்டுப் பொல்லாது''களுக்கு எனது அனுதாபங்கள்.

இரண்டாவது இனத்தினருக்குச் சிகிச்சை எளிது. ''பாவம்! கிடக்கிறான் அசடு. என்றைக்காவது ஒரு நாள் ஈசன் அருளால் அவனுக்கு நல்ல புத்தி பிறக்காமல் போகாது. அப்போது யாவும் சரியாகி விடும். அது வரையில்... அவனுக்கு நல்ல புத்தியை விரைவில் அளிக்கும்படியும் எனக்கு அவன் புரியும் இன்னல்களைப் பொறுத்துக்கொள்ளும் சக்தியை அளிக்கும்படி ஈசனைப் பிரார்த்திப்பதும்தான் செய்யக்கூடும் என்று மனம் தெளிந்து அதையே செய்து-இனி யெல்லாம் அவன் கையில்; நமக்கேன் விசாரம் என்று மன நிம்மதி பெறுவதுதான் வழி....

தாம் வசிக்கும் இடத்தை மாற்றிக் கொண்டு புதிய சூழ்நிலை வேறுபட்ட மனிதர்களுடன் தொடர்பு – பழக்கம் என்று ஏற்படுத்திக் கொள்வது என்பவை இரண்டு இனத்தினருக்கும் இதமாகும்.

அளவுக்கு மிஞ்சிக் காப்பி, டீ, புகை, பொடி, புகையிலை, மதுபானம் முதலியவற்றை ஏற்கும் காரணத்தாலும் நித்திரை பங்கம் ஏற்படலாம். இதுவும் ஆரம்பத்தில் தாற்காலிகமானதாக இருந்து, பிறகு காலக்கிரமத்தில் நிரந்தரமான நிலையைப் பெற்று இவற்றை அளவோடு கட்டுப்படுத்துவது முதல் கடமையாகும். பிறகு அறவே விட்டு விடுவது மிகவும் விரும்பத் தக்கது.

மந்த நித்திரை உள்ளவருக்குச் செய்யக் கூடிய சிகிச்சை கடினமானதல்ல. தினசரி எண்ணெய்க்குளி. இதற்குப் பிருங்காமலகம் போன்ற தைலத்தைத் தலைக்கும், பலாச் வசந்தாதி போன்ற தைலத்தை உடம்புக்குமாகத் தேய்த்து ஊறிக் குளிப்பதும் பால், நெய் முதலிய ஸத்வ குணமுள்ள ஆகாரங்களை ஏற்றுக்கொள்வதும் வைத்தியரின் ஆலோசனைப்படி ஏதாவதொரு ஆஸவம் அல்லது அரிஷ்டத்தை ஆகாரத்துக்குப் பிறகு சாப்பிடுவதும் நல்லது. எருமைப் பாலைக் குடிப்பதால் நல்ல தூக்கம் வருமென்று சாஸ்திரம்.

எண்ணெய்க் குளி காலங்களில் தலைக்குத் தேய்க்கவும், மற்றுமுள்ள தினங்களில் தினசரி தலைக்கு உச்சியிட்டு ஊறி, பிறகு நிரவித் தடவி முடி சீவிக்கொள்வதற்கு உபயோகிக்கும் தைலத்தில் சிறிதளவு பச்சைக் கற்பூரத்தைச் சேர்த்துக் கொள்வது மிகவும் விரும்பத் தக்கது.

இவ்வித சிகிச்சை, ஆகாரம் ஆகியவற்றாலும் போதுமான அளவு குணம் கிடைக்காவிடில் நெல்லிக்காய் பொதிச்சல் அல்லது தலைப் பொழிச்சல் தலைக்குத் தாரை முதலிய சிகிச்சைகள்தான் செய்தாக வேண்டும். இதற்கு ஒரு வைத்தியனின் உதவி அல்லாது வேறு வகையில் செய்ய முடியாது. ஆகவே வைத்தியரின் உதவியை நாடுவதுதான் முறை.

அஜீரணத்தாலும் தூக்கம் கெடுவது அதனாலும் மேற்சொன்ன வகையில் தலை சுற்றல் முதலியவை ஏற்படலாம். வாயில் ஜலம் ஊறல், வாந்திக்கு வரும் போலிருத்தல், தலை சுற்றல் இவை இந்நிலையில் உண்டாகும். இது தாற்காலிகமானதாகத்தான் இருக்கும். ஜம்பீர பானகம், மாதுளங்க ரஸாயனம் போன்ற மருந்துகளைச் சாப்பிட்டு இந்த அஜீரணத்தைச் சரிக்கட்டிவிட்டால் பிறகு சுகமேற்படும்.

# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான்
சிறந்த குணமும், பல வருடங்களாக நம்
பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம்
பெற்றிருக்கின்றன. இந்த நம்பிக்கையான தன்
மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில்
எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75
வருடங்களுக்கு மேலாக சிபார்சு
செய்யப்பட்ட உலகமறிந்த
தாயரிப்பும் ஆகும்.

*அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள்:*

**டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்**

---

# அரசியல் போலிடெக்னிக்

### திருப்பழனம் ஸ்ரீனிவாசன்

தமது புத்திர சிகாமணியின் பரீட்சை முடிவைக் கண்டு சுந்தரம் பிள்ளை அப்படித் திகைத்து விட்டார். இரண்டு முறை அவன் 'பெயிலாகி' விட்ட போதுகூட அவர் இவ்வளவு துக்கப்பட்டதில்லை. இந்த முறை அவன் நம்பர் தேறியவர்கள் ஜாபிதாவில் இருக்கக்கண்டு அவருக்கு ஆச்சரியமும் அழுகையும் மாறி மாறி வந்தன.

அடுத்ததாக அவனை எந்தக் கல்லூரியில் சேர்ப்பது என்ற பிரச்னை அவர் முன் தோன்றியபோது சர்க்கரை 'க்யூ'வில் கடைசியில் நிற்கும் மனிதர் போல் மனம் கசந்து விட்டது. இத்தனைக்கும் கல்லூரிச் சம்பளமோ, டையலுக்குரிய 'டெரிலின்' சட்டையோ வாங்குவதற்கும் பணம் இல்லாமல் திண்டாடும் ஏழையல்ல. இந்த உலகத்தில் தமக்கு ஒரு கல்லூரி முதல்வர் எட்டிய உறவாகக் கூட இல்லாத குறையை முதன் முதலாக உணர்ந்தார். தம்முடைய சந்ததி கல்லூரிப் படிப்பை எட்டிப் பிடிப்பான் என்ற தீர்க்க தரிசனம் கால் நூற்றாண்டுக்கு முன்பு இருந்திருந்தால் அப்பொழுதே ஒரு பிரின்ஸிபாலைத் தமக்கு மாமனாராகவோ சம்பந்தியாகவோ பெற முயன்றிருக்கலாமோ என்னவோ! கேவலம் தமது தொகுதி எம். எல். ஏ.வைக் கூட அல்லவா அவருக்கு அறிமுகம் இல்லை! ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை தேர்தலுக்கு முன்பாக வேட்பாளர்களைச் சந்திப்போம் என்பது தேர்தல் பழமொழி. ஆனால் இம்முறை அதுகூட இன்றி, உடம்பு அலுங்காமல் வேறு எந்தப் பலத்தாலோ தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தார் அந்தப் புண்ணியவான். அதற்குப் பிறகு அவர் தமது வாக்காளர்களுடன் 'டூ' விட்டு விட்டு 'அக்ஞாத வாசம்' புரிவதாகச் சொல்லுகிறார்கள். அவரை இப்போது எங்கே கண்டு பிடிக்க?

சுந்தரம் பிள்ளையின் அந்தரங்கத்தில் ஆயிரம் கேள்விகள்.

டியூடோரியல் கல்லூரி விளம்பரங்களுக்கும், பரீட்சை முடிவுகளுக்கும் உள்ள அன்னியோன்னியம் கருத்தொருமித்து, கலியாணம் செய்து கொண்ட தம்பதிகளுக்குக் கூட வராது. ரிஸல்ட் வரும் இசைசரியிலே டியூடோரியல் விளம்பரங்கள் வருகின்றனவே ஒழிய கல்லூரி விளம்பரங்கள் காணப்படாதது. ஏனோ! தம்முடைய அருமந்தப் பிள்ளை மார்க் வாங்கியிருக்கிற லட்சணத்துக்கு ஆர்ட்ஸ் கிளையில்கூட இடம் அகப்படாது என்று கண்டுபிடிக்கச் சுந்தரம் பிள்ளைக்கு ஆருட ஞானம் தேவையில்லை. பாலிடெக்னிக் பகுதியிலும் இந்தப் பாவியைச் சேர்த்துக் கொள்ளப் போவதில்லை. இல்லாவிட்டால் பணத்தைச் செலவழித்து, விமான நிலையத்தில் மாலையைப் போட்டு, பத்திரிகைகளில் விளம்பரம் தந்து, எதாவது வெளிநாட்டுப் படிப்புக்கு அனுப்பி வைக்கலாம் என்றால் அதற்கும் 'எக்ஸ்சேஞ்ச்' தொல்லைகள்! இடைத்தேர்தலுக்கு நின்று தோற்று, இருக்கிற மந்திரி பதவியையும் இழந்து தவிக்கும் அரசியல்வாதி போல் பிள்ளையைப், பெற்றவர் பரிதவித்தார். இந்தப் பால் வடியும் பிள்ளைக்குப் போர்முனையிலாவது இடம் பிடிக்கலாமோ என்று நினைத்த போதுதான், அகஸ்மாத்தாகப் புதிய கல்லூரி ஒன்றைப் பற்றிக் கேள்விப்பட்டார்:



அரசியல் போலிடெக்னிக். ஐந்து வருடக் கோர்ஸ்.

பஞ்ச சீலமும், ஐந்தாண்டும் வந்தாலும் வந்தன, எல்லாவற்றிலும் இந்தப் பஞ்சமா? கல்வி முறையிலும் இந்த ஐந்தாண்டா? மந்திரிசபை அமைக்கும்போது இந்த 'ஐந்து






முகம்' தோன்றுவதில்லை போலும். பஞ்ச பாண்டவர்களைப் போல் மாட்சிமை மிக்க ஐந்து பேர்கள் அடங்கிய ஆட்சி சபை ஏன் ஒரு பிரதேசத்திலும் ஏற்படவில்லை?

அது கிடக்கட்டும்; அரசியல் டெக்னிக்கல் ஸ்கூலில் இடம் பிடிக்கச் சொரிகக் கடிதம் கோர, சுந்தரம் பிள்ளை ஆனமட்டும் ஒரு மந்திரியைத் தேடினார். ஊஹூம்! எங்கேயோ ஒரு கோடியில் இடைத் தேர்தல் என்பதற்காக ஆட்சி மந்திரிகள் அனைவரும் டிஜூட்டியும் போட்டியும் போட்டுக் கொண்டு சர்க்கார் செலவில் சென்று பிரசார முயற்சியில் இறங்கியதால் தலைநகரில் ஒரு மந்திரி தலைகூட வலை போட்டும் அகப்பட வில்லை! 'மந்திரிதான் அகப்பட வில்லை. தந்திரியாவது இருக்கட்டும்' என்று ஜிப்பாவும் தொப்பியும் தமக்கும், பின்னர் தம் பிள்ளைக்கும் வாங்கிக் கொண்டு கிளம்பினார்.

அரசியல் பாலிடெக்னிக்கில் அதன் பொதுநலத் தொடர்பு அதிகாரி வரவேற்றார்.

'சட்டசபை அங்கத்தினராவதற்கு வயது முப்பதுக்கு மேல் இருக்க வேண்டும். புத்தி-பைத்தியமின்றி இருக்க வேண்டும். இந்த இரு 'மினிமம்' லட்சணங்கள் போதும் என்றிருப்பதால் அரசியல்வாதிகளின் தரம் குறைந்து விட்டது. இந்நிலையை மாற்றி அரசியல் அறிவும் அனுபவமும் மிக்க வருங்கால சந்ததிகளை உண்டாக்க வேண்டுமென்ற 'இட்டக் கமிஷனின்' சொரிகக்கு இணங்க, இந்த ஸ்தாபனம் தொடங்கப்பட்டிருக்கிறது. நடப்பு அரசியலுக்குச் சமானமான அரசியல் சூழ்நிலை, வாழ்க்கையைக் கல்லூரிக்குள் சிருஷ்டித்துப் பிராக்டிக்கல் பயிற்சியும் தரப்படுவதால் அரசியல் பாலிடெக்னிக்காயிற்று....

சுந்தரம் பிள்ளை தொப்பியைத் தூக்கித் தலையைச் சொறிந்து கொண்டே கல்லூரியின் கல்யாண குணங்களுக்குச் செவி சாய்த்தார்.

முதல் வருடம் 'தியரி'யில் உலக நாடுகளின் அரசியல் மகோன்னதர்கள்; ஆதி மனிதனிலிருந்து ஜனநாயகம் வரை வளர்ச்சி...இத்யாதி தலைப்புகள். நான்காம் வருடம் சட்டசபைப் பயிற்சி; ஐந்தாம் ஆண்டு ஆட்சிப் பொறுப்பு — அதாவது மந்திரி — பயிற்சி!

சுந்தரம் பிள்ளையின் உடல் விறுவிறுத்தது. தம்முடைய பிள்ளையின் பிரகாசமான முகத்தில் வருங்காலச் சுடரைக் கண்டார்.

''நீங்கள் எல்லாக் கட்சி மாணவர்களையும் சேர்ப்பது உண்டா?''

''பொதுவாக எல்லாருக்கும் இடமுண்டு என்பதுதான். ஆனாலும் ராஜ்ய சர்க்கார் சர்க்குலர் பிரகாரம் தேர்விலேயே அவர்களை 'ஸ்கிரீன்' செய்து வடிகட்டிவிடுவோம்.''

''பேஷ்; அரசியல் சூது அங்கேயே தொடங்கி விடுகிறதா?''

''பள்ளியைச் சுற்றிப் பார்க்கலாம், வருகிறீர்களா?''

சுந்தரம் பிள்ளை தொப்பியின் கோணத்தைச் சரிசெய்து கொண்டு அரசியல் தலைவரைப் பின்பற்றும் பணிவுடன் நடை போட்டார்.

''இவரைச் சந்தியுங்கள். இவர்தான் பேராசிரியர் கண் துடைப்பு நாயினார். இங்கு மூன்றும் வருஷம் 'சிலபஸில்' 'தேர்தல்' என்பது முக்கிய 'சப்ஜெக்ட்'. இவர்தான் அதில் 'அதாரிட்டி'. 'தேர்தல் விதிகளை ஏமாற்றுவது எப்படி?' என்பது பற்றி 'தீஸிஸ்' எழுதி 'பி. எச்டி.' வாங்கியவர், இந்தப் பேராசிரியர்.''

சுந்தரம் பிள்ளை கண்ணாடியைத் துடைத்துக்கொண்டு அவரை நோக்கினார்.

''தேர்தல் விஞ்ஞாபனம், தேர்தல் வாக்களித்தல், பிரசங்கம் இவ்வாறு பல துறை விதும் பயிற்சி. அதோ பாருங்கள்...''

ஒரு பையன் மேடை மீது நின்றுகொண்டு பேசிக்கொண்டிருந்தான். அவனை நோக்கி

# பிராஸோவினால்

## மெருகிடுங்கள்



மங்கலான பித்தளைச் சாமான் உங்கள் அறையின்
சோபையைக் கெடுத்துவிடும். தவறாமல் பிராஸோவைக்
கொண்டு தேய்த்துவந்தால், பித்தளைச் சாமான்
பளபளப்புடனிருக்கும். உபயோகிக்க சுலபமான
பிராஸோ சிக்கனமானதும் கூட.

உங்கள் பித்தளைச் சாமான்களை

# பிராஸோவினால்

வாரத்திற்கு ஒரு முறை
ஒவ்வொரு வாரமும் மெருகிடுங்கள்




அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

JWT/BR 3649

BR 3

உடலாலும், உள்ளத்தாலும், உயிராலும் ஒருவன் சுதந்திரப் பாதையில் முன்னேறி, பிறரும் அவ்வாறு முன்னேற உதவுவதே மனிதனுக்குப் பிறந்ததன் மகத்தான பயன். மனித சுதந்திரம் மலர்வதற்குத் தடையாக உள்ள சமூக விதிகள் யாவும் தீயவையாகும். அவற்றை விரைவில் தகர்க்க வழிகள் வகுக்க வேண்டும். சுதந்திரப் பாதையில் மக்களை முன்னேற்றும் ஸ்தாபனங்களை வளர்க்க வேண்டும்.

— ஸ்வாமி விவேகானந்தா

மற்றொரு மாணவன் பேஸ்பந்து போல் ஒரு ரப்பர் பந்தை எறிந்து கொண்டிருந்தான். பேசுபவரோ அவனைச் சமாளித்தபடி தொடர்ந்து பேசியது பிள்ளைக்கு ஆச்சரியமாக இருந்தது.

''தேர்தல் பிராக்டிஸ் இது. கூட்டத்திலிருந்து வரும் கற்களைச் சமாளித்தபடி பேசுவது எப்படி என்பதற்கு நடைமுறைப் பயிற்சி நடைபெறுகிறது.''

''அந்தப் பையன் மேஜை மீது எதற்காக வலது கையால் குத்திக் கொண்டிருக்கிறான்? கைக்கு உரம் ஏறுவதற்கா?''

''அதுவா? உணர்ச்சிகரமான அரசியல் விவாதத்துக்குப் பக்க வாத்தியம்; அல்லது சட்ட சபையில் எதிர்க் கட்சி ஆசாமியைக் கலாட்டா செய்து உட்கார வைப்பதற்கு டெஸ்கை அழுத்தித் தட்டுவதற்குப் பயிற்சி.''

''அந்த மரச் சுத்தியலை வைத்துக் கொண்டு டேபிள் ஆணியை அடிக்கிற இன்னொருவர்?''

''ஆணியாவது? லோக சபை நிகழ்ச்சிகளைப் போலும் சபாநாயகர் டிரெயினிங்!''

அடைத்துக் கிடந்த மற்றொரு அறையில் ஒரு மாணாக்கன் துவண்டு கிடந்தான். சுந்தரம் பிள்ளையின் புருவங்கள் உயர்ந்தன.

''எதற்காக இந்தத் தண்டனை?''

''தண்டனையாவது? அரசியலில் உண்ணாவிரதம் அடிக்கடி வரும் நிகழ்ச்சியாயிற்றே? அதற்குத்தான் மாதத்தில் ஒருவருக்கு இப்படிப் பயிற்சி.''

சுந்தரம் பிள்ளை மௌன விரதம் பூண்டபடி உண்ணாவிரதக் காட்சியைக் கடந்தார்.

இரண்டு இளைஞர்கள் ஒரு கட்டத்திலிருந்து இன்னொரு கட்டத்துக்குத் தாவினார்கள்; தாக்கிப் பேசினார்கள். மீண்டும் பழைய கட்டத்துக்கு வந்தனர். வெட்டிப் பேசியதை ஒட்டிப் பேசினர்.

''கட்சிக்குக் கட்சி தாவு படலம். வலுவுள்ள வார்த்தைப் பிரயோகம் தேவை. இது சம்பந்தமாகக் கல்லூரியில் 'தேக்குப் போன்ற உறுதியான தாக்கு வார்த்தைகள்' 'அகராதி' ஒன்று அச்சாகி வருகிறது.''

அடுத்தது பெரிய ஹால். யாரோ ஒரு மாணவனை ஒருவன் குண்டுக் கட்டாகத் தூக்கிக் கொண்டு சென்றான். ஓலமிட்டபடி உதறி எழுந்து மீண்டும் பழைய இடத்துக்கு வந்து சண்டை போட்டான் தூக்கிச் செல்லப்பட்டவன். மீண்டும் காவடி; அடி தடி......

''இது என்ன புது விளையாட்டு?''

''பார்லிமெண்ட் சபைக்கு அத்தியாவசியமான ஒன்று. சபாநாயகர் அங்கத்தினரை வெளியேற்ற சார்ஜெண்ட் உதவியை நாடும் போது சமாளிக்கும் விதங்களில் இது ஒன்று!''

''அங்கு என்ன பாக்ஸிங் பயிற்சியா?''

''அதுவா? சட்ட சபைக் கலாட்டா நிகழ்ந்தால் எதிர்க் கட்சி அங்கத்தினர்களைத் தாக்க உடல் பயிற்சி.''

''இவர் யார்? யோகாசனத்தில்...?''

''சட்டசபையில் தூங்காமல் தூங்கப் பழகிக் கொள்கிறார்.''

''இதோ சுத்திக்கோல், கொத்துக் கரண்டி வைத்துக் கொண்டிருக்கும் அணி வகுப்புப் படை.... என்னது?''

''இவர்கள் இறுதி வருட மாணவர்கள். மந்திரிகள். திறப்பு விழா அடிக்கல் விழாக்களில் கலந்துகொள்ள இங்கே போதிக்கப்படுகிறார்கள்.''

''ஐயோ பாவம், ஏன் சார் அந்த மாணவன் கழுத்தில் இரும்பு வளையத்தை...?''

''மந்திரிகள் பிறந்த தினம் தேசிய தினமாக மாறிக்கொண்டு வருகிறது. தேர்தலில் ஜெயித்தால் பாராட்டுக்கும் மாலைக்கும் கேட்க வேண்டுமா? அதைத் தாங்கும் சக்தி கழுத்துக்கு அளிக்கவே இந்த டிரெயினிங்....''

''வேறு என்ன பாடம் மந்திரி மாணவர்களுக்குப் போதிக்கிறீர்கள்?''

''லைசென்ஸ், கோட்டா, விசா, வெளிநாட்டுப் பயணம், திட்டப் புகழ் பாடல், மகாநாடு நிர்வாகம், தேர்தலுக்குப் பணம் வசூலித்தல், பத்திரிகைப் பிரதிநிதிகளைச் சமாளிக்கும் வழி...''

''இதென்ன தராசு?''

''கல்லூரியில் முதலாவதாக வரும் மாணவனைப் பாராட்ட எடைக்கு எடை நிறுக்கும் தராசு!''

''எதிர்த் தட்டில் தங்கமா?''

''இல்லை; 'வேஸ்ட் காட்டன்' சுவாமி!''

''என்னது?''

''ஆமாம், எளிமை அடக்கம் இரண்டையும் அது போதிக்கிறது. தவிர அழுக்கைத் துடைக்க உதவுமல்லவா?''

''உங்களுடைய கல்லூரி முயற்சியைப் பாராட்டுகிறேன். என் பையனைத் தேர்த்தெடுக்க வேண்டுமென விண்ணப்பித்துக் கொள்கிறேன். 'நாமினேஷன் பாரம்' தாக்கல் செய்யலாமா?''

''இன்று போய் நாளை வாரும்'' என்றார் தொடர்பைத் துண்டித்தபடி அதிகாரி.

மறுநாள் சுந்தரம் பிள்ளை வந்தபோது டெக்னிகல் பள்ளி முன்பு ஏக ஆர்ப்பாட்டம்; ஆரவாரம் நடந்து கொண்டிருந்தது.

தனி ஒருவனுக்கு அட்மிஷன் இடமில்லை என்பதற்காக மாணவர் நேரடி நடவடிக்கையில் முனைந்து இருந்தனர். 'ஆஹா குருவுக்கு மிஞ்சிய சிஷ்யர்கள்தான்' என்று வியந்தபடி நின்றார் சுந்தரம் பிள்ளை.

கிர்ரென்று கல்லொன்று அவரது தொப்பியைப் பிய்த்துக் கொண்டு சென்றது. தலைக்கு வந்தது தொப்பியுடன் சென்றது என்ற மகிழ்ச்சியுடன் அரசியல் பள்ளிக்குக் கும்பிடு போட்டுவிட்டுத் திரும்பினார்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# ஆதரவுக்கு ஆதரவான அன்னைக்கு ஆதரவு: டால்டா

## டால்டா

பேரீச்ச மர அடையாளமிட்ட
வனஸ்பதி




- நற்றிறமர்ந்த தாவர எண்ணெய்களிலிருந்து தயாரிப்பு.
- வளரும் சிறுவர்களுக்கான வைட்டமின்கள் அடங்கியது.
- மோசடி செய்யமுடியாதவாறு வில் வைத்த டப்பாக்களில் சுகாதார முறைப்படி அடக்கமானது.
- மறவாதீர்கள்: திறந்த டப்பாக்களிலிருந்து சில்லறையாக வாங்கக் கூடியதல்ல டால்டா.

**தரத்திலும் தூய்மையிலும் சிறந்த சமையல் சாதனம்**

DL. 99-340 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு